ॐ

# ॥ अन्नपूर्णोपनिषत् ॥

# அன்னபூர்ணோபநிஷத்

(தமிழ் மொழிப்புரையுடன்)






ஸ்ரீ ஸாது ஸ்வாமிகள் ஸமாதி நிலயம்.

பதிப்புரிமை ] 1951 [ விலை ரூ. 1—8—0

உ

ஓம்

ஸ்ரீ கணபதயே நம: |

ஸ்ரீ அன்னபூர்ணாயை நம: |

ஸ்ரீ நந்திகுரவே நம: | ஸ்ரீ ஸாது ஸத்குரவே நம: |

# ஸ்ரீ அன்னபூர்ணோபநிஷத்.

( தமிழ் மொழிப்புரை. )

ஆக்கியோன்.

பழனி ஸ்ரீ ஸாது ஸ்வாமிகளின் சீடன்

திரிமூர்த்திஸ்வாமி.

இப்புத்தகத்தை அச்சிடப் பொருளுதவி செய்தவர்

ஸ்ரீ. வெ. உண்ணாமலையம்மையார், பொள்ளாச்சி.

பழனி ஸ்ரீ ஸாது ஸ்வாமிகளின் முதலாவது ஆண்டு

குருபூஜையில் கர-ளு ஐப்பசி-மீ 10-உ

(27-10-1951) வெளியிடப்பெற்று

ஷை ஸமாதி நிலயத்திற்கு

உரிமையாக்கப்பெற்றது.

இதன் உரிமையாளர்.

ஸ்ரீ நாகப்பூர் ஸ்வாமிகள்.




பதிப்புரிமை ] 1951 [ விலை ரூ. 1-8-0

சிவமயம்.

ஓம் கணபதயே நம: |

ஸ்ரீ ஸத்குருப்யோ நம: |

ஸ்ரீ அன்னபூர்ணாயை நம: |

# முகவுரை.

அன்னபூர்ணோபநிஷத் என்னும் இந்நூல் அன்ன பூர்ணா தேவியின் அனுக்கிரஹத்தால் உண்டானதால் அன்னபூர்ணா என்றும் மிகவும் ஆத்மாவின் சமீபத்தில் அடைவித்து அவித்தையோடு அதன் காரியங்களை நாச முறச் செய்வதால் உபநிஷத் என்றும் பெயராயிற்று. இந்த உபநிஷத்து அதர்வணவேத சாகையில் உள்ளது என்று முக்திகோபநிஷத்தில்கூறப்பட்டுளது.

முன்கற்பத்தில் யோகினி கூட்டங்களால் உபாசிக்கப் பட்டதும் மஹிமையுள்ளதுமான அன்னபூர்ணாமந்திரோப தேசத்தைத் தன் தந்தையால் உபதேசிக்கப்பெற்ற ரிபு முனிவர் நியமத்துடன் நீண்டகாலம் மந்திர ஜெபம் செய்து அன்னபூர்ணாதேவியைப் பிரத்தியக்ஷமாய் தரிசித்தார். பிறகு அத்தேவியினிடமே ஆன்மோபதேசம் பெற்று பிரம் மஞ்ஞானியாய் விளங்கினார். அவரிடம் நிதாகர் சென்று சீடராய் உள்ளன்போடு பணிந்து வினயத்துடன் தாங்கள் இந்த பிரம்மஞானத்தை எவருடைய அனுக்கிரஹத்தால் பெற்றீர்களோ அவருடைய அனுக்கிரத்தை யானும் பெறு தற்குரிய வழிகளை உபதேசிக்கவேண்டும் எனக்கேட்டார். அங்ஙனங்கேட்ட நிதாகருக்கு ரிபு முனிவரானவர் தான் பெற்ற மந்திரத்தையும் அன்னபூர்ணாதேவியின் அனுக்கிர ஹத்தையும் "தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்னும் பெருநோக்கால் பிரம்மஞானமடைதலாகிய பயனை உத்தேசித்து ஐந்து அத்தியாயங்களிலும் பல அந்தரங்கமான சாதனங்களையும் பிராணாயாமாதி அப்பியாசங்களையும் ஜீவன் முக்தி விதேக முக்திகளின் லக்ஷணத்துடன் அனுபவங்களையும் விரிவாய்க் கூறி இம்மந்திரத்தை ஜெபித்து தேவியின் அனுக்கிரஹத்தைப் பெற்று பிர்ம்மவித்தாக ஆவாய் என ஆசிர்வதித்தார்.

ரிபு முனிவர் ஒவ்வொரு அப்யாஸங்களையும் அனுபவங்களையும் தனித்தனியே நிதாகருக்குக் கூறி 'நீயும் இவ்வாறு அப்பியசிப்பாய். நீயும் இவ்வாறு அனுபவத்தைப் பெறுவாய் என அடிக்கடி வலியுறுத்திக் கூறுவதை ஊன்றி நோக்கும் பொழுது இவ்வித்தையை குருமுகமாய் உபதேசிக்கப்பெற்று நியமத்துடன் அப்பியசித்தால் இதில் கூறும் அனுபவங்கள் பரிபூரணமாய் சித்திக்கும் என்பது தெளிவு.

இந்த அன்னபூர்ணா வித்தையை நமது பரம கருணாநிதியாகிய ஸ்ரீ நந்தியடி ஸ்வாமிகள் இமாலயத்திலுள்ள சத்ய நாராயணமென்னும் க்ஷேத்திரத்தில் எனது குருநாதராகிய ஸ்ரீ சாது சுவாமிகட்கு சந்நியாஸத்தைக் கொடுத்து அன்னபூர்ணா வித்தையையும் உபதேசித்து காசியிலிருந்து அன்னபூர்ணேஸ்வரி சந்நிதியில் ஜெபித்து வரும்படிக் கட்டளையிட்டனர். சில வருடங்கள் கழிந்தபின் அடியேன் வடநாட்டு யாத்திரை சென்று காசியை அடைந்தபொழுது எனது குருநாதரைச் சந்தித்தேன். அப்பொழுது அடியேனுக்கு சந்நியாசங்கொடுத்து மேற்கூறிய அன்னபூர்ணா வித்தையையுட் உபதேசித்து தேவியின் சந்நிதியில் ஜெபிக்கும்படி கட்டளையிட்டார்கள். நான் அவ்வாறே ஜெபித்துக்கொண்டு காசியில் சில மாதங்களிருந்தேன். பின் தென்னாடு வந்து சேர்ந்தபொழுது இவ்வுபநிஷத்தைத் தமிழில் எழுதும்படி கட்டளையிட்டார்கள்.

அவ்வாறே யான் பொழிப்புரையாய் எழுதி சிதம்பரத்தில் அறிவு முதிர்ந்த பல அடியார்களின் முன்னிலையில் படித்து காட்டினேன். இது பலருக்கும் பயன்படவேண்டும் எனக் கருதிய என் குருநாதர் பொள்ளாச்சி சென்றிருந்த பொழுது சிவநேசச்செல்வி தி. வி. உண்ணுமலை யம்மையாரிடம் இந்நூலை அச்சிட்டுக்கொடுக்கும்படிக் கூறினார்கள். அவ்வம்மையாரும் இப்பெரும் பணிசெய்ய முன்வந்தார்கள். ஆனால் இப்பணி தொடங்கு முன்பே என் குருநாதர் பூதவுடலை நீத்து சித்சோதியில் கலந்தனர். ஆகையால் அவர்களின் ஞாபகார்த்தமாய் முதலாண்டுக் குருபூஜை விழா வன்று இந்நூலை வெளியிட நிச்சயித்தனன்.

இந்நூலைப் பரிசோதித்துத் திருத்தி உதவியவர்கள் என்னுடன் படித்தவரும் காசி சர்வகலாசாலையில் வேதாந்தாசார்யன் என்ற பட்டம் பெற்றவருமான ஸ்ரீ சுவாமி கிருஷ்ணனந்தா அவர்களுக்கும்,

எனக்குத் தமிழாசிரியராயிருந்தவரும் மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவரும் பேரறிஞருமான பண்டித சி. த. நாராயண சுவாமியவர்களுக்கும்,

என்னுடன் படித்தவரும் சைவபிரசாரசபைப் பரீக்ஷை பெற்று மதுரை தேவஸ்தானப் பிரசாரகராயிருந்தவரும் இருமொழிப் புலவருமான திருத்தேவர் பழனியப்பகவுண்டர் அவர்களுக்கும்.

ஸ்ரீ சாது சத்குருநாதரின் சிஷ்யரும் கோவை நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியருமான கவியரசு கு. நடேசக் கவுண்டர் அவர்களுக்கும் என் மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

என் குருநாதரின் கட்டளைப்படி இப்புத்தகம் அச்சிடுவதற்குறிய பொருளைக் கொடுத்துதவிய சிவஞானச் செல்வி

தி. வெ. உண்ணுமலை யம்மையார் அவர்களுக்கு எல்லா நலனுமுண்டாகும்படி ஸ்ரீ அன்னபூர்ணேஸ்வரியையும் குருநாதரையும் பிரார்த்திக்கிறேன்.

இந்த உபநிஷத்திலுள்ள விஷயங்களை எடுத்து விளக்கும் ஆற்றலுள்ளவர்கள் வியாகரணம் தர்க்கம் மீமாம்சை முதலிய வேத அங்கங்களைப் படித்தவர்களும் முறையே அப்பியசித்து ஆன்ம அனுபவம் பெற்ற மஹான்களுமே யாவர். சிற்றறிவினனாகிய அடியேனுக்கு இந்நூலிற் பொதிந்துள்ள திட்பநுட்ப அனுபவங்களை எடுத்துக் கூறும் ஆற்றல் இல்லையெனினும் என் குருநாதரின் கட்டளையை நிறைவேற்றுங் கடமையைச் சிரமேற்கொண்டு அன்னார் எனக்கு உபதேசித்ததினாலுண்டான அறிவைக்கொண்டும் சென்னை இராமசாமிப் பிள்ளையவர்களின் வித்யாசாலையில் ஸ்ரீ முக்தானந்த சுவாமிகளிடம்கற்ற சமஸ்கிருதபாஷையின் அறிவைக்கொண்டும் ஸ்ரீ அன்னபூர்ணாதேவியின் திருவருள் துணைகொண்டும் என் சிற்றறிவுக்கெட்டிய அளவில் எழுதியுளேன். இதிலுள்ள நுட்பமானதும் புதைந்து கிடப்பதுமான அரும்பெறும் பொருளை அறிவாற்றலுள்ள மஹான்கள் ஆய்ந்து அறிந்து இன்புறுவார்களாக. இதில் அன்பர்களால் பிழை திருத்தம் செய்யப்பெற்றதாயினும் இன்னும் பிழைகளை யறிகின்ற பெரியோர்களின் அறிவு மொழிகளை அன்புடன் ஏற்று மறுபதிப்பில் திருத்திக்கொள்ளப்படும்.

## விஷயக் குறிப்பு.

1. மந்திரசூசிகை ரிபு முனிவர்க்கு அன்னபூர்ணேஸ்வரி அனுக்கிரஹம் செய்தல். ஐந்துவித பிராந்தி. அவைகளின் நீக்கம். பிரம்மபாவம் நிதாகருக்கு பிரம்மோபதேசம் செய்யும் முறை உத்திதன் சமாகிதன் இவர்களின் இலக்கணம். அந்தரங்க சாதனத்தால் வாசனை நீங்கி ஸமாதி

யைப் பெறுதல். ஆன்மாஞன்ம விசாரணை செய்யும் முறை. ஸர்வத்தியாகமே மோக்ஷ மென்னும் ஸமாதியின் லக்ஷணம். ஸமாதியிலுண்டாகும் ஆனந்தமே அன்னபூர்ணேஸ்வரி. சீவன் முக்தனுடைய ஆசாரம்.

2. ஸங்கலக்ஷணம், மோக்ஷலக்ஷணம், அஸங்கலக்ஷணம் துரியம் துரியாதீத வர்ணனம், சொரூபப் பிராப்தி, சொரூப வர்ணனம் ஆசையற்றவிடத்து மோக்ஷம் சீவன் முக்தனுடைய ஆசார அனுபவங்களைக்கூறல்.

3. சீவன் முக்தன் அப்பியாசத்தால் விதேக முக்தியடையும் முறை. விதேக முக்தன் அனுபவங்களைக்கூறல். பிறகு அபேத நிலையில் மோக்ஷ மடைதல்.

4. சீவன் முக்தனுடைய இலக்ஷணம். அவனுக்கு அணிமாதி ஸித்தி பொருளன்றெனல். சீவன் முக்தர் விதேக முக்தர்களுடைய மனோநாச வேற்றுமை. அவர்களுக்கு சொரூபத்தாலும் அனுபவத்தாலுமுள்ள வேற்றுமை. மனோவாஸனையைக் கெடுத்து நிர்விகல்ப பிரம்மத்தை அடைவாய் என நிதாகருக்குக் கூறல். சுயம்பிரகாச பிரம்ம வர்ணனை ஜீவேஸ்வரர்களின் லக்ஷணம். சித்தா தலின் அவர்களின் பேதம் மிதையெனல். அநேக வாக் வியாபாரத்தை விடுத்து மனத்தால் சித்தொன்றையே அடைய வேண்டுமெனல். சுக துக்கங்களின் காரணம் சரீரமெனல். சரீரத்தின் காரணம் ஆசையுள்ள சித்தமெனல். சித்தத்தின் காரணம் பிராணனும் பாவனையும் எனல். பிராணன் விஷயவுணர்வை யுண்டுபண்ணும் காரணமெனல். இந்தக் காரணங்களை பிராணாயாமம், தியானம், யுக்தி இவைகளால் அதற்குச்சொல்லப்படும் அப்பியாஸங்களைச்செய்து போக்கி சித்த சாந்திபெற்று முத்தியடைய வேண்டுமெனல். வாஸனக்ஷயம் தத்துவஞானம் மனோநாசமாகிய மூன்றை

யும் ஒன்ருகவே அப்பியசிக்கவேண்டும். அப்பொழுது சித்த சாந்தி பெற்று முக்தியடைவனெனல். இவற்றிற்கெல்லாம் விசாரம் இன்றியமையாதெனல்.

5. அந்த விசாரணையை விரிவாய்க்கூறல். விசாரணையால் ஆன்மாவிலுள்ள பற்றை விடுத்து யோகம் தியானம் இவைகளை வைராக்கியத்துடன் முயன்று அப்பியாசித்து வாஸனையைக் கெடுத்து சித்த சாந்தி பெற்ற ஜீவன் முக்தர்களின் நிலை. இத்தன்மையதெனல். அவர்களின் பிரம்மானந்தானுபவங்களையும் ஆசாரங்களையும் கூறல். நிஷ்காம கர்மயோக தியான யோகங்களின் இலக்கணங்களைக் கூறல். அவைகளால் உண்டாகும் பயன். சுபேச்சை முதலிய ஏழு பூமிகளையும் ஜாக்கிர முதலிய ஐந்து அவஸ்தைகளையும் கூறல். துக்க நிவர்த்தியே பரமானந்த ப்ராப்தி வடிவ மோக்ஷமெனல். இன்னும் அனேக யுக்திகளும் அப்பியாசங்களும் அனுபவங்களும் விரிவாய்க்கூறப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் விரிவஞ்சி விடுத்தனன்.

இப்படி,
திரிமூர்த்தி ஸ்வாமி:

---

சிவமயம்

## கோவை வித்துவான், தி. நடேச கவுண்டர் இயற்றிய சிறப்புப்பாயிரம்.

### நேரிசையாசிரியப்பா.

---

மலர்தலை யுலகின் இலகிய மக்கள்
கதிபெறும் பொருட்டுக் கண்ணுதற் பெருமான்
அருளிய அருமறை முடிபுளாற் றெட்டுள்
அன்ன பூர்ணோப நிடத மதனொடு
தியான பிந்துவையும் தேசிகன் சாதுவின்
அருளுப தேசத் தாலநுட் டித்துச்
சித்திபெற் றன்னோன் திருவா ணையினால்
அவ்வயிரண்டற்கும் அருந்தமிழ் மொழியால்
என்னே ரனையரும் எளிதுணர்ந் துய்தி
எய்துதற் பொருட்டால் எல்லையி லருளால்
நல்லுரை வகுத்து நல்கினன் அம்ம
சாதுசாமி நற்பாத சேகரன்
ஆரிய மொழியிற் சீரிய புலவன்
திரிமூர்த்தி எனும் பெயரான்
விரிகீர்த்தி மிகுந்த மெய்த்தவத் தோனே.

### சோ. ம. பெருமாள் சுவாமிகள் இயற்றியது.

தேவியன்ன பூரணிபேர் சேர்ந்த உபநிடத
மேவுந் தமிழ்தனிலே வித்தரித்தான் - காவடிசேர்
தென்பழனி சாதுமகான் சீடன் திரிமூர்த்தி
யென்போ னினிதா யிவண்.

---

சிவமயம்

# முன்னுரை.

பழனி சைவாக்ம பாடசாலைப் பண்டிதரும் சைவ சித்தாந்த சரபமுமாகிய பிரம்மஸ்ரீ ஈசான்ய சிவாச்சாரியாரவர்கள் அன்புடன் அளித்த முன்னுரை.

ஸ்ரீ சாது சுவாமிகளின் வரலாற்றுச் சுருக்கத்திற் கூறிய ஸ்ரீ சுவாமிகளின் அடியவர் கூட்டத்துள் ஒருவரும் சிறந்த உபாசகருமாகிய ஸ்ரீ திரிமூர்த்தி சுவாமிகள் தமது இளமையிலேயே பூர்வாசிரமத்தில் சுவாமிகளால் உபதேசிக்கப் பெற்றவர். பின்பு வைராக்கியமும் அகத்துறவும் பூண்டு காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்கட்குச் சென்று சிறப்புற்று விளங்கும் பெரியோர்களுடைய மடாலயங்களையடைந்து வடமொழியில் சிறந்த நூல்களைக்கற்று வந்தார். பின்பு சன்னியாசம் பெற்றுக்கொள்ள விரும்பினார். தமது மூலமுதற்குரவராகிய சாதுசுவாமிகள் பாலேயே அதனைப் பெற விரும்பினார். சுவாமிகளும் யதேச்சையாக அப்போது காசியம்பதிக்கு விஜயம் செய்வாராயினார். தமக்கு எளி வந்த திருவருள் நியதியை உணர்ந்து, தமது கருத்தை விண்ணப்பித்துக்கொண்டு சுவாமிகளின் குறிப்பின் வழி நின்றார். வேண்டுவார் வேண்டுவதே யீவானாகிய ஆண்டவன் திருவருள் நியதி இதுவே யாதல்போலும். இங்ஙனம் சந்திக்கும் வண்ணம் துணை செய்தது. ஆதலால் திருவருள் நியதியின் வழிச் செல்கையே நாம் செயற்பாலதெனக் கொண்டு விதிப்படி சந்நியாசமும், ஸ்ரீவித்யா மந்திரோபதேசமும் செய்து, காசி ஸ்ரீ அன்னபூர்ணேசுவரி சந்நிதியில் அன்னபூர்ணா உபநிஷத்பாராயணமும் தியானபிந்துபநிஷத்பாராயணமும்

செய்யுமாறு ஆணைதந்து அதன் பொருள்களையும் விளக்கி வந்தார். பின்பு ஸ்ரீ வித்யா உபாசனையும் உபநிஷத்பாராயணமும், அதன் அரும்பெரும் பொருள்களையும் ஸ்ரீ திரிமூர்த்தி சுவாமிகள் சிறிதும் வழுவாத நிலையில் உபாசனை செய்து வருங்கால் ஸ்ரீ தேவியின் திருவருளால் வேறுபக்கங்களிலிருந்து கல்விகற்றலிலும், தமது ஆசிரியரைப்பிரிந்து இருத்தலிலும் வேறு எந்தப்பணிபுரிவதிலும் தம் மனம் செல்லவில்லை. ஆதலால் பழனியம்பதிக்கு வந்து ஸ்ரீ சாது சுவாமிகளை அடைந்து குருபணி விடைகளையும் மேற்கொண்டு ஒழுகிவரலானுர். மேற்குறித்த உபநிடதங்களுக்கு உரை எழுதி சிந்தித்து வந்தார். இதனை அறிந்த ஆசிரியர் அதனை உணர்ந்து இங்ஙனம் வேதாந்த சாஸ்திரமாகிய உபநிடதங்கள் பிரமப்பொருளை அறிவதற்கு கருவியாகிய இத்துணைப் பெருநூலைச் சிந்தித்தலும் பிறர்சிந்திக்குமாறு அந்நூற்பொருளை விளக்கம் செய்தலாகிய உரைவரைதலும் செய்யத்தக்க சிறந்ததொரு சாஸ்திர பரிபாலனமேயாம், எனக்கூறி இவ்வுரையை அச்சிட்டு வழங்கவேண்டுமெனக் கருதினர். அந்தப்பணியை மேற்கொண்டு முற்றுவித்தற்குப் பொருளுதவி செய்ய பொள்ளாச்சி அருந்தவச் செல்வி ஸ்ரீமதி தி. வெ. உண்ணுமலையம்மையார் அவர்கள் முன்வந்து உதவினர். அதனுல் இந்நூல். வெளிவருவதாகின்றது. வேதநூற் பொருள்களை அறிதற்குச் சிறந்த சாதனம். குரு உபதேசமும் அனுசந்தானமுமே என்பதனை யாரே மறுக்க வல்லார்? அந்நெறியிற்பயின்ருர்காணும் முறையிலே மற்றெத்துணைப் புலவர்தான் என் கூறவல்லார்? இங்ஙனம் உபநிஷதங்களுக்கு உரைக்குறிப்பு எழுதி வெளிப்படுத்த விரும்பிய ஸ்ரீ திரிமூர்த்தி சுவாமிகளது நோக்கம். தமது புலமையை வெளிப்படுத்திக் கொள்வதற்கல்ல என்பதை அவரோடு நன்கு பழகியோர்

அறிவர். இதற்குறிய திருத்தங்களைத் தெரிவிப்போர்க்கு நன்றி செலுத்தி ஏற்றுக்கொள்வதோடு மறுபதிப்பில் அத்துணைத்திருத்தங்களோடு வெளியிடவும் இவர் ஆயத்தமாயிருக்கின்றார் என்பதனை ஞாபகப்படுத்துகின்றேன்.

இந்த வுபநிடதநூல் உரைக்குறிப்பினால் ஒருவாறு பொருள் தெரிந்து அந்நூலிலே பிரவேசித்தற்கு மன எழுச்சி உண்டாம் வண்ணம் செய்தலே இவ்வுரையாசிரியர் உரைவரைந்ததின் நோக்கமாகும். ஆதலால் தமக்குரிய பலனை அன்பர்களுக்களிக்கும் வண்ணம் திருவருள் துணை புரிவதாக குருவருள் முன்னிற்பதாக.

இதன் உரையாசிரியருக்கு இவைபோன்ற நூல்களுக்கு உரை எழுதும் புலமையும், குன்றா நலனும் இதனை வெளியிடுவதற்குப் பொருளுபகாரம் செய்த அம்மையாருக்கு பக்தி வைராக்ய ஞானங்களும், ஸ்ரீ அன்னபூர்ணேசுவரியின் திருவருளால் உண்டாகவேண்டுமென்று சிந்தித்து வந்திக்கின்றேன்.

இங்ஙனம்,

ஸ்ரீ ஈசான சிவாச்சாரியர்.

உ

சிவமயம்.

# முன்னுரை.

அன்னபூர்ணோபநிஷத் என்னும் இந்நூல் தத்துவ விசாரணையில் செல்லுபவர்கட்கு மிகப்பயன்படும். உயர்ந்த கருத்துகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இந்நூலுள் நுழைந்தால் மனச்சாந்தியுற்று இன்பம் காணலாம். இதை மொழிபெயர்த்துதவிய பெருந்தகையாளர் திரிமூர்த்தி ஸ்வாமிகள். வடமொழி, தென்மொழி இரண்டிலும் வல்லுனர். அடக்கமும், சீலமும், உயரிய பண்பும் உடையவர். இவரின் குருபக்தி இந்நூலை ஸ்ரீ சாது ஸ்வாமிகளின் சமாதி நிலையத்திற்கு உரிமையாக்கப்பட்டுள்ளதே சாலுமானது. இதை அச்சிடப் பொருளுதவி செய்த மங்கையர்க்கரசியாம் பொள்ளாச்சி தி. வெ. உண்ணாமலையம்மையார் மைத்ரேயி போன்ற மாண்புடையவர்கள். "உதவிவரைத்தன் றுதவி யுதவி. செயப்பட்டார் சால்பின் வரைத்து". என்ற திருக்குறளுக்கு இலக்கியமானவர்கள். இவர்கள் உதவியால் இந்நூல் வெளிவந்தது பாராட்டற் குரியதாகும். இந்நூலை அறிஞர் பலரும் படித்துப் பயன் பெறுமாறு எல்லாம்வல்ல முழுமுதற் பொருளை மனமார வழுத்துகின்றேன்.

சங்கேந்தி. கு. க. சதாசிவ அடிகள்,
அன்புடன் அளித்த முன்னுரை.



பழனி ஸ்ரீ ஸாது சுவாமிகள்

ஓம்

சிவமயம்.

ஸ்ரீ ஸாதுகுரவே நம:

# ஸ்ரீலஸ்ரீ ஸாது சுவாமிகள்

## சரித்திர சுருக்கம்.

நெடுந்தாண்டகம்.

மாற்றுயர்ந்த பசும்பொன்னால் வகுத்தாற் போல
வயங்குதிரு மேனியிற்கல் லாடை யுண்டே
கீற்றுமதி போலநுதல் வெண்ணீ றுண்டே
கிளர்நுதற்கண் ணெனவொளிர்சிந் தூரமுண்டே
ஊற்றிருந்து கருணைபொழி விழிக ளுண்டே
உளங்கவரு முத்தனபுன் முறுவ லுண்டே
ஏற்றவருக் கில்லையென்று ஈகை யுண்டே
எங்கள்குரு சாதுவெனும் எதிரா சர்க்கே.

ஆதிமாதவ முனி அகத்தியன் தரு, பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி, ஓதநீர் நித்திலத் தாமம் போல், என்றும் பாய்ந்து, அண்ணல் பாகத்தை ஆளுடைய நாயகியின் உள்நெகிழ் கருணைப்போலப் பாவி எண்ணில்லாத பேரறங்களை வளர்க்கும் பேறுபெற்ற சோழவள நாடு. “நாடெல்லாம் நீர்நாடுதனை ஒவ்வா நலம் எல்லாம்” என்று சிவானுபூதிச் செல்வர்களால் சிறப்பித்து ஓதப்பெறுவது அந்நாடு.

அந்நாட்டில் விளங்கும் எண்ணற்ற சிவஸ்தலங்களில் சிறந்த ஒன்று திருப்பெருமணநல்லூர். இப்போது அத் திருப்பதி ஆச்சாள்புரம் என அழைக்கப்படுகின்றது. திரு

ஞானசம்பந்தப் பெருமானார் "கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத் தள்ளித் திருவருட்சோதியில் கலந்தருளிய புண்ணியம் பெற்றது" அத்திருநகரம்.

அத்திரு நகரில் இங்கிலவுலகு செய்த தவப்பயனாய்த் தொண்டைமண்டல வேளாளர் குலத்திலே பொன்னுச்சாமி முதலியாரும் காவேரியம்மையாரும் நோற்ற நோன்பின் பேறாகிச் சபாபதி என்ற திருப்பெயருடன் ஒரு திருமகவு பாற்கடலில் பனிமதிபோல் தோன்றிற்று. அத்திருமகவே நமது சாது சற்குருநாதனார்.

குருநந்தி பரம்பரையில் நந்தியடி சுவாமிகள் என்ற பெரியார் வேதாகம, சைவ, சித்தாந்த மந்திர சாஸ்திரங்களில் வல்லவராய் சிவாநுபூதிச் செல்வராய் விளங்கி இருந்தார்கள். அவர்கள் சிவதரிசனத்தின் பொருட்டு ஒரு தடவை ஆச்சாள்புரத்திற்கு எழுந்தருளினார்கள். அவர்களது திருவருளால் சாது சுவாமிகள் உபதேசம் பெற்றார்கள். பிறகு சிலகாலம் இல்லற நெறியிலே இருந்துகொண்டு துறவு நிலைக்குரிய நூல்களைப் பயின்று தீவிரதர பக்குவ நிலையை அடைந்தார்கள். இவரது பக்குவநிலையைக்கண்ட ஞானாசிரியர் இவரை நாள்தோறும் ஐந்து வீடுகளில் கைப் பிச்சை ஏற்று உண்டுகொண்டே வடநாடு யாத்திரை செய்து இமயமலையில் உள்ள சத்தியநாராயணமென்னும் இடத்திற்கு வரும்படி கட்டளையிட்டார்கள். அங்ஙனமே சாது சுவாமிகள் சத்தியநாராயணத்தை அடைந்தபொழுது ஞானாசிரியர் அங்கே வரவை எதிர்பார்த்து வீற்றிருந்தார்கள்.

ஞானாசிரியரைப் பணிந்து நின்ற சாது சுவாமிகளுக்கு அவர்கள் அன்னபூரணி உபாசனையை உபதேசித்துத் துறவு நிலையருளி காசியில் இருந்து அன்னபூரணியை உபாசனை

செய்யும்படி பணித்துவிட்டுச் சின்னாட்பின் தென்னாடு சென்றார்கள். பல ஆண்டுகள் அன்னபூர்ணாதேவி சந்நிதியில் தங்கியிருந்து உபாசனை செய்து சித்திபெற்று, வடமொழியையும், நன்கு பயின்றுகொண்டு தென்னாடு அடைந்து ஞானாசிரியரைத் தெரிசித்துத் திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்தார்கள். ஞானாசிரியர் நமது சுவாமிகளுக்கு மேலும் வேதாந்த நூல்களையும், மந்திர, தந்திர, யந்திர, சாஸ்திரங்களையும் செவ்வனே பயிற்று வித்தனர். ஆசிரியரின் திருவருளை முழுதும் பெற்ற சாது சுவாமிகள். நான் எனது என்பவை அற்றவராய், ஞானச்செல்வராய் பிச்சையேற்றுண்டு சதா தியான நிஷ்டாபரராய்த்தலங்கள்தோறும் சஞ்சரித்தார்கள். பிறகு போடிப்பட்டியிலிருந்த ஸ்ரீ அருணாசல சுவாமிகளிடம் கீதாபாஷ்யம், பிரம்மசூத்திர பாஷ்யம் இவைகளை படித்துக்கொண்டார்கள். பின் நந்தியடி சுவாமிகள் பழனியில் வந்திருப்பதை அறிந்து சுவாமிகள் அங்கே வந்து அவரை தரிசித்து நின்றனர். அப்போது நந்தியடி சுவாமிகள் சுவாமிகளைப் பழனியில் தங்கி இருந்து முருகனையும் அம்பிகையையும் உபாசித்து வருமாறும், தொண்டர்கள், ஏழைகள் முதலியோர்க்குப் பசிப்பிணியை அகற்றும் பணிசெய்யுமாறு, அருளிச்செய்தார்கள். பிறகு நந்தியடி சுவாமிகள் பல சிவதலங்களிலும் தங்கி இருந்து அன்பர் பலருக்கு அருளுபதேசம் செய்து பின் திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள பெருவளநல்லூரில் விதேகமுக்தியுற்றனர். அவர்கட்குச் சாதுசுவாமிகள் ஆலயமுதலியவமைத்து அதில் நந்தியம் பெருமானின் திருவுருவப்பிரதிட்டை செய்து நித்ய நைமித்திகப் பூசைகள் நடந்துவர ஏற்பாடு செய்துள்ளார்கள்.

குருநாதரின் ஆணைப்படி அம்பிகையையும் முருகனையும் உபாசித்துத் திருவருட்செல்வப்பேருடையராய் சாது

சுவாமிகள் விளங்கினர். சுவாமிகள் பெருமையை அறிந்து வந்தடைந்த அன்பர்களைக்கொண்டு பழனியாண்டவனுக்குப் பால் தயிர் நெய் முதலியனகொண்டு அபிடேகம் செய்வதும். கௌபீனம் சாத்துவிப்பதும் முதலிய பணிகள் பல காலம் செய்துவந்தார்கள்.

பிச்சையேற்றுண்டு திருவாவினன்குடியில் திட்டையிலிருந்து வந்தார்கள். பழனியாண்டவனுக்குச் சாது சுவாமிகள் செய்வித்த மகாபிடேகங்கள் போல வேறு எங்கும் எப்போதும், யாராலும் நடந்திராது.

திருத்தொண்டர்களுக்கும். ஏழைகளுக்கும், பசி நீக்குதலைப் போன்ற சிறந்த பணி வேறில்லை என்று கருத்திற் கொண்ட சுவாமிகள் அத்திருத்தொண்டினை நிகழ்வித்தார். அன்னபூரணி என்ற திருநாமத்தால் ஒரு அகண்டதீபம் அமைத்து அதன் முன்னிலையில், அடியார்களை வரிசை வரிசையாக அமரச்செய்து மகேஸ்வர பூசை நடக்கும் காட்சி கண்ணுக்கும் மனத்திற்கும் பெருவிருந்தாயிருக்கும். அறநெறியிற் பொருளீட்டிய செல்வர் பலர் இத் திருத்தொண்டிற்கு முன்வந்து உதவி செய்தனர். ஐப்பசியில் சூரசம்மாரத் திருவிழா, பங்குனியுத்தரவிழா, முதலிய திருநாட்களில் பல ஆயிரக்கணக்கான அடியார்கள் இம் மகேசுரபூசையில் உண்டு பசியாறுவர். இப்போதும் இந்த அன்னதானப் பணிக்கு மாதந்தோறும் தவறாமல் பொருளுதவி செய்து வருகின்றனர். அவ்வப்போது உதவும் அன்பர்களும் பலர் உளர்.

பழனியாண்டவனுக்கு காலை மாலையாகிய இரு வேளைகளிலும் அபிஷேகத்திற்குப் பால் வழங்குவதற்காகப் பசுமடம் ஒன்றும் அமைத்து வைத்துள்ளார்கள். நமது சுவாமி

கள் இராக்கால பூசைக்குப் புனுகு, சந்தனம், பூமாலை, பரிவட்டம், தேன், தினைமா முதலியனவும், விஸ்வரூபதரிசனத்திற்கு சுக்குச் சக்கரை முதலியனவும் வழங்குதற்கு அடியார்களை ஏற்படுத்தி வைத்துள்ளார்கள். தம்மையடைந்த அன்பர்களுக்கு அவரவர்கள் பக்குவத்திற்கு ஏற்ப உபதேசம் செய்து தானம், தருமம், செபம், பூசை, யோகம், ஞானம் முதலிய நெறிகளில் செல்லும்படிச் செய்துவந்தார்கள். சுவாமிகளின் திருவடி சம்பந்தத்தால் இம்மை மறுமைக்குரிய நன்மை அடைந்த அன்பர்கள் நூற்றுக்கணக்காக உள்ளனர். சுவாமிகள் சாக்கிரத்தே நிர்மலதுரியாதீத நிலை கைவரப்பெற்றவராயிருந்தும் உலகம் உய்தற் பொருட்டாக அனுட்டானம், ஜபம், பூசை முதலியவற்றைத் தம் இறுதிநாள்வரை அனுட்டித்தே வந்தார்கள். சாதுக்களுக்கும் ஏனையன்பர்களுக்குமாகத் தனித்தனி இரண்டு ஆசிரமங்களை அமைப்பித்து அவற்றிற்கு நந்தியடிகளாச்சிரமம் எனப் பெயர் வைத்துள்ளார்கள். சமுத்தூர் ஜமீன்தாரைக் கொண்டு அறுகோண வடிவமாய்ச் சமாதியாலயம் கட்டுவித்து அதில் கைலாசப்பிரஸ்தமென்ற ஸ்ரீ சக்கிரத்தையும் ஸ்தாபித்து அவ்விடத்திற்கு இராஜராஜேஸ்வரி மந்திரம் எனப் பெயரிட்டார்கள். விக்ருதி வருடம் ஐப்பசி மாதம் திங்கட்கிழமை உத்திர நட்சத்திரத்தில் அடியார்கள் சூழ்ந்து நிற்கப் பத்மாஸனத்தில் வீற்றிருந்து பழனியாண்டவன் மலையைத் தரிசித்துக் கருவிகரணங்களை யொடுக்கிச் சமாதி யோகத்திலிருந்து விதேக முத்தியடைந்தனர்.

வாழ்க சாதுசுவாமிகள் திருவடிப்புகழ்.

ஸ்ரீ திரிமூர்த்தி ஸ்வாமி.

ॐ

श्री अन्नपूर्णायै नमः

# ॥ स्तोत्रम् ॥

नित्यानन्दकरी वराभयकरी सौंदर्यरत्नाकरी
निर्धूताखिलघोरपावनकरी प्रत्यक्षमाहेश्वरी ।
प्रालेयाचलवंशपावनकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपावलंबनकरी मातान्नपूर्णेश्वरी ॥ १ ॥

नानारत्नविचित्रभूषणकरी हेमांबराडंबरी
मुक्ताहारविलम्बमानविलसद्वक्षोजकुंभान्तरी ।
काश्मीरागुरुवासिता रुचिकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ २ ॥

योगानन्दकरी रिपुक्षयकरी धर्मार्थनिष्ठाकरी
चन्द्रार्कानलभासमानलहरी त्रैलोक्यरक्षाकरी ।
सर्वैश्वर्यसमस्तवांछितकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ३ ॥

कैलासाचलकंदरालयकरी गौरी उमा शंकरी
कौमारी निगमार्थगोचरकरी ओंकार बीजाक्षरी ।
मोक्षद्वारकपाटपाटनकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ४ ॥

दृश्यादृश्य प्रभूतवाहनकरी ब्रह्माण्डभाण्डोदरी
लीलानाटक सूत्रभेदनकरी विज्ञानदीपांकुरी ।
श्री विश्वेशमनःप्रसादनकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ५ ॥

उर्वी सर्व जनेश्वरी भगवती मातान्नपूर्णेश्वरी
वेणीनीलसमान कुंतलधरी नित्यान्न दानेश्वरी ।
सर्वानन्दकरी सदाशुभकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ६ ॥

आदिक्षान्त समस्त वर्णनकरी शंभोस्त्रिभावाकरी
काश्मीरा त्रिजलेश्वरी त्रिलहरी नित्यांकुरा शर्वरी ।
कामाकांक्षकरी जनोदयकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ७ ॥

देवी सर्वविचित्र रत्नरचिता दाक्षायणी सुन्दरी
वामा स्वादुपयोधरप्रियकरी सौभाग्यमाहेश्वरी ।
भक्ताभीष्टकरी सदाशुभकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ८ ॥

चन्द्रार्कानल कोटिकोटि सदृशा चन्द्रांशु बिंबाधरी
चन्द्रार्काग्नि समान कुंतलधरी चन्द्रार्क वर्णेश्वरी ।
मालापुस्तक पाशसांकुशधरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ ९ ॥

क्षत्रत्राणकरी महाभयकरी माता कृपासागरी
साक्षान्मोक्षकरी सदाशिवकरी विश्वेश्वरश्रीधरी।
दक्षाक्रंदकरी निरामयकरी काशीपुराधीश्वरी
भिक्षां देहि कृपा .... ॥ १० ॥

अन्नपूर्णे सदा पूर्णे शंकरप्राणवल्लभे।
ज्ञान वैराग्य सिद्ध्यर्थं भिक्षां देहि च पार्वति ॥ ११ ॥

माता च पार्वती देवी पिता देवो महेश्वरः।
बान्धवाः शिवभक्ताश्च स्वदेशो भुवनत्रयम् ॥ १२ ॥

ब्रह्मार्पणं ब्रह्महवि ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम्।
ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्म समाधिना॥

ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥ १३ ॥

ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

॥ अन्नपूर्णास्तोत्रं संपूर्णम ॥

ஓம்

# அன்னபூர்ணா ஸ்தோத்திரம்.

ஓம் நித்யானந்தகரீ வராபயகரீ ஸௌந்தர்ய ரத்னாகரீ
நிர்தூதாகில கோரபாவனகரீ ப்ரத்யக்ஷ மாகேஶ்வரீ
ப்ராலேயாசல வம்ஶபாவனகரீ காசீபுராதீஶ்வரீ
பிக்ஷாம்தேஹி க்ருபாவலம்பனகரீ மாதான்னபூர்ணேஶ்வரீ

நானாரத்னவிசித்ர பூஷணகரீ ஹேமாம்பராடம்பரீ
முக்தாஹார விலம்பமான விலஸத் வக்ஷோஜ கும்பாந்தரீ
காஶ்மீராகுரு வாஸிதாருசிகரீ காசீ புராதிஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (2)

யோகானந்தகரீ ரிபுக்ஷயகரீ தர்மார்த்த நிஷ்டாகரீ
சந்த்ரார்கானல பாஸமான லஹரீ த்ரைலோக்ய ரக்ஷாகரீ
ஸர்வைஶ்வர்ய ஸமஸ்தவாஞ்சிதகரீ காசீபுரா தீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (3)

கைலாஸாசல கந்தராலயகரீ கௌரீ உமா ஶங்கரீ
கௌமாரீ நிகமார்த்த கோசரகரீ ஓங்கார பீஜாக்ஷரீ
மோக்ஷத்வார கபாட பாடனகரீ காசீபுராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (4)

த்ருஶ்யா த்ருஶ்ய ப்ரபூத வாஹனகரீ ப்ரஹ்மாண்ட பாண்டோதரீ
லீலாநாடக ஸூத்ரபேதனகரீ விஞ்ஞான தீபாங்குரீ
ஸ்ரீ விஶ்வேஶமனப் ப்ரஸாதனகரீ காசீபுராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (5)

உர்வீ ஸர்வ ஜனேஶ்வரீ பகவதி மாதான்ன பூர்ணேஶ்வரீ
வேணீ நீல ஸமானகுந்தளதரீ நித்யான்ன தானேஶ்வரீ
ஸர்வானந்தகரீ ஸதாசுபகரீ காசீபுராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (6)

ஆதிக்ஷாந்த ஸமஸ்த வர்ணனகரீ ஶம்போ ஸ்த்ரி பாவாகரீ
காஶ்மீரா த்ரிஜலேஶ்வரீ த்ரிலஹரீ நித்யாங்குரா ஶர்வரீ
காமாகாங்க்ஷகரீ ஜனோதயகரீ காசீபுராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (7)

தேவீ ஸர்வ விசித்ர ரத்ன ரசிதா தாக்ஷாயணீ ஸுந்தரீ
வாமாம் ஸ்வாது பயோதர ப்ரியகரீ ஸௌபாக்ய
மாஹேஶ்வரீ
பக்தா பீஷ்டகரீ ஸதாஶுபகரீ காசீ புராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (8)

சந்த்ரார்க்கானல கோடிகோடி ஸத்ருஶா சந்த்ராம்சு
பிம்பாதரீ
சந்த்ரார்க்காக்னி ஸமானகுந்தளதரீ சந்த்ரார்க வர்ணேஶ்
மாலா புஸ்தக பாஶ ஸாங்குஶதரீ காசீ புராதீஶ்வரீ [வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (9)

க்ஷத்ரத்ராணகரீ மஹாபயகரீ மாதா க்ருபா ஸாகரீ
ஸாக்ஷான் மோக்ஷகரீ ஸதாசிவகரீ விஶ்வேஶ்வர ஶ்ரீதரீ
தக்ஷாக்ரந்தகரீ நிராமயகரீ காசீ புராதீஶ்வரீ
பிக்ஷாந்தேஹி ... ... (10)

அன்னபூர்ணே ஸதா பூர்ணே ஶங்கரப்ராண வல்லபே
ஞான வைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷாந்தேஹிச பார்வதி ll

மாதாச பார்வதிதேவீ பிதாதேவோ மஹேஶ்வர:
பாந்தவா: ஶிவ பக்தாஶ்ச ஸ்வதேஶோ புவனத்ரயம் ll (12)

ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர் ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்ம
ணாஹுதம் |
ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதினா ll

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஶிஷ்யதே ll (13)

ஸ்ரீமத் சங்கராசார்யர் எழுதிய அன்னபூர்ணா
ஸ்தோத்திரம் ஸம்பூர்ணம்.

ௐ

ह्रीं अन्नपूर्णायै नमः ।

ஹ்ரீம் அன்னபூர்ணையை நம:

# ॥ अन्नपूर्णोपनिषत् ॥

# அன்னபூர்ணோபநிஷத்.

சொரூப வணக்கம்.

सर्वापह्नवसंसिद्धब्रह्ममात्रतयोज्ज्वलम् ।
त्रैपदं श्रीरामतत्त्वं स्वमात्रमिति भावये ॥

ஸர்வாபஹ்னவ ஸம்ஸித்த ப்ரஹ்ம மாத்ர தயோஜ்வலம்
த்ரைபதம் ஸ்ரீராம தத்வம் ஸ்வமாத்ர மிதி பாவயே |

(பொ) பலவகையான தோற்றத்தை நீக்கிபொழுது எஞ்சியிருப்பது பிரஹ்மத்தின் விளக்கமேயாம். முப்பதமாயும் ஸ்ரீராம தத்வமாயுமுள்ள அந்த விளக்கத்தை எனது சொரூபமென்று தியானிக்கின்றேன்.

அதர்வணவேத சாந்தி மந்திரம்.

ओं भद्रं कर्णेभिः शृणुयाम देवाः । भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवांसस्तनूभिः । व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्धश्रवाः । स्वस्तिनः पूषा विश्ववेदाः । स्वस्तिनस्तार्क्ष्यो अरिष्टनेमिः । स्वस्तिनो बृहस्पतिर्दधातु । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

ஓம் பத்ரம் கர்ணேபி: ஶ்ருணுயாம தேவா:, பத்ரம் பஶ்யேமாக்ஷபிர் யஜத்ரா:, ஸ்திரைரங்கைஸ் துஷ்டுவாம் ஸஸ்தனூபி:, வ்யஶேம தேவஹிதம் யதாயு:, ஸ்வஸ்தி ந இந்த்ரோ வ்ருத்தஶ்ரவா:, ஸ்வஸ்தி ந: பூஷா விஶ்வவேதா:, ஸ்வஸ்தி நஸ்தார்க்ஷ்யோ அரிஷ்ட நேமி:, ஸ்வஸ்தி நோ ப்ருஹஸ்பதிர் ததாது. ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:.

(பொ) ஏ பிரணவ சொரூபியாகிய பரமேஶ்வரி! தேவர்களாகிய நாங்கள் காதுகளால் மங்கள த்வனியைக் கேட்போமாக, யக்ஞங்களைக் காப்பவர்களான நாங்கள் கண்களால் நல்ல காட்சியைக் காண்போமாக. உறுதியான நல்ல கர்மேந்திரியங்களால் உம்மைச் சேவிப்போமாக. நாங்கள் ஆயுள் உள்ள பரியந்தம் நோயற்ற சரீரங்களால் தங்களுக்கு இதத்தையே செய்து வாழ்வோமாக. யாகங்களால் புகழ்பெற்ற தேவேந்திரன் எங்களுக்கு நன்மையைத் தருவானாக. உலக விளக்கான சூர்யன் எங்களுக்கு மங்களத்தைக் கொடுக்கட்டும். கெருடவாகனமும் பாபத்தையறுக்கும் சக்ராயுதமுமுள்ளவருமான விஷ்ணு எங்களுக்குச் சுகத்தைக் கொடுக்கட்டும். வாக்பதியான தேவகுரு எங்களுக்கு வாக் சாதுர்யத்தைக் கொடுக்கட்டும். ஏ ஸர்வேஶ்வரி! எங்களுக்கு சரீர சம்பந்தமான அத்யாத்ம துக்கம் இல்லாததாகட்டும். துஷ்ட மிருக முதலியவற்றால் உண்டாகும் அதிபூத துக்கம் இல்லாததாகட்டும். பஞ்சபூத சம்பந்தமான இடி மின்னல் முதலியவற்றால் உண்டாகும் அதி தெய்வ துக்கம் இல்லாததாகட்டும்.

## உபநிஷத்து ஆரம்பம்.

॥ हरिः ओम् ॥

**निदाघो नाम योगीन्द्र ऋभुं ब्रह्मविदां वरम् ।**
**प्रणम्य दण्डवद्भूमावुत्थाय स पुनर्मुनिः ॥ १ ॥**

நிதாகோ நாம யோகீந்த்ர: ருபும் ப்ரஹ்ம விதாம் வரம்
ப்ரணம்ய தண்டவத் பூமாவுத்தாய ஸ புனர் முனி: (1)

(பொ) யோகத்தில் நிபுணரான நிதாகர் பிரம்ம வித்துக்களுள் தலைசிறந்த ருபுமுனியை பூமியில் தண்டம்போற் பணிந்து எழுந்து அம்முனிவர் மீண்டும்.

**आत्मतत्त्वमनुब्रूहीत्येवं पप्रच्छ सादरम् ।**
**कयोपासनया ब्रह्मन्नीदृशं प्राप्तवानसि ॥ २ ॥**

ஆத்மதத்வ மனுப்ரூஹீத் யேவம் பப்ரச்ச ஸாதரம்
கயோபாஸனயா ப்ரஹ்மன்னீத்ருஸம் ப்ராப்தவானஸி (2)

(பொ) உள்ளன்போடு ஆன்ம தத்துவத்தை விளக்கமாகச் சொல்வீராக என்று இவ்வாறு கேட்டார். ஏ பிரம்மத்தை அறிந்தவரே? எந்த உபாஸனையால் இத்தகைய ஞானத்தைப் பெற்றவரானீர்.

**तां मे ब्रूहि महाविद्यां मोक्षसाम्राज्य दायिनीम् ।**
**निदाघ त्वं कृतार्थोऽसि शृणुविद्यां सनातनीम् ॥ ३ ॥**

தாம் மே ப்ரூஹி மஹாவித்யாம் மோக்ஷஸாம்ராஜ்ய
தாயினீம்
நிதாக த்வம் க்ருதார்த்தோஸி ஸ்ருணு வித்யாம்
ஸனாதனீம். (3)

மஹாவித்யா சொரூபிணியாயும் மோக்ஷ சாம்ராஜ்யத்தைக் கொடுப்பதுமான அந்த வித்தையை (உபாஸனையை) எனக்குச் சொல்வீராக என்று கேட்டார். ஏ நிதாக! நீ செய்ய வேண்டியவற்றைச்செய்தவனாகின்றாய். (ஆகையால்) அந்த பழமையான உபாஸனா வித்தையைக் கேட்பாயாக.

यस्या विज्ञानमात्रेण जीवन्मुक्तो भविष्यसि ।
मूलश‍ृङ्गाटमध्यस्था बिन्दुनादकलाश्रया ॥ ४ ॥

யஸ்யா விஜ்ஞான மாத்ரேண ஜீவன்முக்தோ பவிஷ்யஸி
மூல ப்ஶ்ருங்காட மத்யஸ்தா பிந்துநாத கலாப்ஶ்ரயா. (4)

எந்த வித்தையை அறிந்த மாத்திரத்தில் ஜீவன்முக்தனாவாயோ, மூல சிருங்காட மத்தியிலுள்ளதும், பிந்துநாத கலையை ஆதாரமாகப் பெற்றதும்.

नित्यानन्दा निराधरा विख्याता विलसत्कचा ।
विष्टपेशी महालक्ष्मीः कामस्तारो नतिस्तथा ॥ ५ ॥

நித்யானந்தா நிராதாரா விக்யாதா விலஸத்கசா
விஷ்டபேஶீ மஹாலக்ஷ்மீ காமஸ் தாரோ நதிஸ்ததா. (5)

எப்பொழுதும் ஆனந்தமாயிருப்பதும் ஆதாரமற்றதும், பிரசித்தி பெற்றதும் பிரகாசிக்கும் கூந்தற் கூட்டமுள்ளதும், (ஒளியின் கூட்டமுள்ளதும்) உலகத்தை நியமிப்பதும், மிக்கஐஶ்வர்யமுள்ளதும், விரும்பத்தக்கதும்,(சம்சாரத்தை) தாண்டுவிப்பதும், நமஸ்காரத்திற்குரியதும், அவ்விதமே—

भगवत्यन्नपूर्णेति ममाभिलषितं ततः ।
अन्नं देहि ततः स्वाहा मन्त्रसारेति विश्रुता ॥ ६ ॥

பகவத் யன்னபூர்ணேதி மமாபிலஷிதம் தத:
அன்னம் தேஹி தத: ஸ்வாஹா மந்த்ரஸாரேதி விஶ்ருதா (6)

பகவதி யன்னபூர்ணா எனப்பெற்றதும், ஆகையால் என்விருப்பத்திற்கு விஷயமான அன்னத்தைக் கொடுப்பாய் எனப்படுவதும், பிறகு ஸகல பற்றுகளையும் ஸ்வாஹாந்தத்தால் விடுவிப்பதுமான சிறந்த மந்திரமானது சாஸ்திரங்களில் பிரசித்தியுள்ளதாய் கேட்கப்பட்டது.

सप्तविंशति वर्णात्मा योगिनीगणसेविता।
ऐं ह्रीं सौं श्रीं क्लीमोन्नमो भगवत्यन्नपूर्णे
ममाभिलषितमन्नं देहि स्वाहा ॥ ७ ॥

ஸப்த விம்ஶதி வர்ணாத்மா யோகினீ கணஸேவிதா
ஐம், ஹ்ரீம், ஸௌம், ஶ்ரீம் க்லீம் ஓந்நமோ பகவத்யன்ன
பூர்ணே மமாபிலஷித மன்னம்தேஹி ஸ்வாஹா. (7)

அது இருபத்தேழு அக்ஷரமுள்ளதாயும் யோகினீகூட்டங்களால் உபாஸிக்கப்பட்டதாயும் உள்ளது இந்த மந்திரமாகும்.

इति पित्रोपदिष्टोऽस्मि तदादि नियमस्थितः।
कृतवान्स्वाश्रमाचारो मन्त्रानुष्ठान मन्वहम् ॥ ८ ॥

இதி பித்ரோபதிஷ்டோऽஸ்மி ததாதி நியமஸ்தித:
க்ருதவான் ஸ்வாஶ்ரமாசாரோ மந்த்ரானுஷ்டான
மன்வஹம் (8)

என்று என் தந்தையால் உபதேசிக்கப்பட்டவனானேன்; அது முதற்கொண்டு விரத நியமமுள்ளவனையும் எனது ஆசிரமத்திற்கேற்ற ஒழுக்கமுள்ளவனையும் ஒவ்வொருநாளும் மந்திரஜபம் செய்து வந்தேன்.

एवं गते वहुदिने प्रादुरासीन्ममाग्रतः।
अन्नपूर्णा विशालाक्षी स्मयमानमुखाम्बुजा ॥ ९ ॥

ஏவம் கதே பஹுதினே ப்ராதுராஸீன் மமாக்ரத:
அன்னபூர்ணா விஶாலாக்ஷீ ஸ்மயமாந முகாம்புஜா. (9)

இவ்வாறு நீண்டநாள் அப்யஸித்ததின் முடிவில் புன்சிரிப்பால் பிரகாசிக்கும் முகத்தாமரையை உடையவளும் விரிந்த கண்களையுடையவளுமான அன்னபூர்ணாதேவி என் எதிரில் தோன்றினாள்.

तां दृष्ट्वा दण्डवद्भूमौ नत्वा प्राञ्जलिरास्थितः ।
अहो वत्स कृतार्थोऽसि वरं वरय माचिरम् ॥ १० ॥

தாம் த்ருஷ்ட்வா தண்டவத் பூமௌ நத்வா ப்ராஞ்ஜ
லிராஸ்தித:
அஹோ வத்ஸ க்ருதார்த்தோஸி வரம் வரய மாசிரம். (10)

அவளைக்கண்டு பூமியில் தண்டம்போல் பணிந்து எழுந்து குவித்த கரங்களுடன் நின்றேன். (உடனே தேவி) மிக்க சந்தோஷமுள்ளவளாய் ஏ குழந்தாய் ? நீ செய்யவேண்டிய தவத்தைச்செய்து முடித்தவனாகின்றாய். (என ஆசிர்வதித்து விரும்பிய) வரத்தை விரைவில் கேட்டுக் கொள் என்றாள்.

एवमुक्तो विशालाक्ष्या मयोक्तं मुनिपुङ्गव ।
आत्मतत्त्वं मनसि मे प्रादुर्भवतु पार्वति ॥ ११ ॥

ஏவமுக்தோ விஸாலாக்ஷ்யா மயோக்தம் முனிபுங்கவ
ஆத்மதத்வம் மனஸி மே ப்ராதுர் பவது பார்வதி. (11)

ஏ முனிகட்குத் தலைவனே ? விரிந்த கண்களையுடைய தேவியால் இவ்வாறு ஏவப்பட்ட நான் "ஏ பார்வதியே ? என் மனத்தில் ஆன்மதத்வம் உண்டாகட்டும்" எனக்கேட்டேன்.

(அ) அன்னபூரணியின் அனுக்கிரகத்தைப் பெற்ற பின் ருபுமுனியின் சித்தத்தில் விசித்ர தோற்றமுண்டாதலைக் கூறுகின்றது.—

तथैवास्त्विति मामुक्त्वा तत्रैवान्तरधीयत ।
तदा मे मतिरुत्पन्ना जगद्वैचित्र्य दर्शनात् ॥ १२ ॥

ததைவாஸ்த்விதி மாமுக்த்வா தத்ரைவாந்தரதீயத
ததா மே மதிருத்பந்நா ஜகத் வைசித்ர்ய தர்சநாத் ॥ (12)

ஸ்ரீ தேவியானவள் "அவ்விதமே உனக்கு ஆத்மஞான மானது உண்டாகட்டும்" என்று அனுக்கிரஹம்செய்து அவ் விடத்திலேயே மறைந்தனள். அப்பொழுது உலகத்தி லுள்ள வேறுவேறான காட்சியைக் காண்பதால் எனது சித் தம் வெளிப்பட்டதாய்.

(அ) மூன்று மந்திரத்தால் ஐந்துவித பிராந்தியைக் கூறுகின்றது—

भ्रमः पञ्चविधो भाति तदेवेह समुच्यते ।
जीवेश्वरौ भिन्नरूपाविति प्राथमिको भ्रमः ॥ १३ ॥

ப்ரம: பஞ்சவிதோ பாதி ததேவேஹ ஸமுச்யதே,
ஜீவேஶ்வரௌ பின்னரூபா விதி ப்ராதமிகோ ப்ரம: (13)

ஐந்துவித மயக்கத்தோற்ற முள்ளதாயிற்று. அதுவே ஈண்டு சொல்லப்படுகின்றது. முதலில் உண்டான பிராந்தி ஜீவனும் ஈஶ்வரனும் வேறுவேறானவர்கள் என்பது.

आत्मनिष्ठं कर्तृगुणं वास्तवं वा द्वितीयकः ।
शरीरत्रय सम्युक्त जीवः सङ्गी तृतीयकः ॥ १४ ॥

ஆத்மநிஷ்டம் கர்த்ருகுணம் வாஸ்தவம் வா த்விதீயக:
ஶரீரத்ரய ஸம்யுக்த ஜீவ: ஸங்கீ த்ருதீயக: (14)

இரண்டாவது மயக்கம் ஜீவனிடத்துள்ள நான் கர்த்தா என்ற குணம் சத்யமேயாம் என்பது. மூன்றாவது மயக்கம் துல சூக்ஷும காரண சரீரங்களோடு சம்பந்தமுள்ளவன் ஜீவன் என்பது.

जगत्कारण रूपस्य विकारित्वं चतुर्थकः ।
कारणाद्भिन्नजगतः सत्यत्त्वं पंचमो भ्रमः ॥ १५ ॥

ஜகத்காரண ரூபஸ்ய விகாரித்வம் சதுர்த்தக:
காரணாத் பின்ன ஜகத: ஸத்யத்வம் பஞ்சமோ ப்ரம: (15)

நான்காவது மயக்கம் உலகத்தின் காரணப்பொருள் மாறுபடும் இயல்புள்ளது என்பதாம். ஐந்தாவது மயக்கம் காரணத்தின் வேறான உலகை சத்தியமே என்று சொல்வது.

(அ) ஐந்துவித பிராந்தி நிவர்த்தியைக் கூறுகின்றது.

पञ्चभ्रमनिवृत्तिश्च तदा स्फुरति चेतसि ॥
बिम्बप्रतिबिम्बदर्शनेन भेदभ्रमो निवृत्तः।
स्फटिकलोहितदर्शनेन पारमार्थिक कर्तृत्वभ्रमो निवृत्तः।

பஞ்ச ப்ரம நிவ்ருத்திஶ்ச ததா ஸ்புரதி சேதஸி |
பிம்ப ப்ரதிபிம்ப தர்சனேன பேதப்ரமோ நிவ்ருத்த:
ஸ்படிக லோஹித தர்சனேன பாரமார்த்திக கர்த்ருத்வ ப்ரமோ நிவ்ருத்த:

(அன்றியும்) அப்பொழுதே என் சித்தத்தில் ஐந்துவித மயக்கங்களின் நிவர்த்தியும் உண்டானது. (அது வருமாறு)—பிம்பவடிவ ஈஶ்வரனைக் காட்டிலும் பிரதிபிம்ப வடிவஜீவன் வேறாக இல்லை என்று விசாரித்துணர்வதால் முதலாவது பேதமயக்கம் நீங்குகின்றது.

குடஜலத்தில் காணப்படும் சந்திரன் ஆகாயத்திலுள்ள சந்திரனிலும் வேறன்று எனக் காண்பதுபோல், புத்தியில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனாகிய சித்து சிதாகாய சொரூபனாகிய பிம்பவடிவ ஈசனைக்காட்டிலும் வேறன்று என்றுணர்வதாலும் முதலாவது பேதமயக்கம் நீங்குகின்றது.

ஸ்படிகத்தில் காணும் சிவப்புநிறம் வேறு சிவந்த பொருளின் நிழலாகக் கண்டபின் ஸ்படிகத்திலுள்ள சிவப்புத் தோற்றம் மித்தையாவதுபோல், ஆன்மாவில் காணப்படும் நான் கர்த்தா என்ற தோற்றம் மனத்திலுள்ள அகங்காரத் தோற்றமேயன்றி ஆன்மாவில் இல்லை என்றுணர்வதால் இரண்டாவது மயக்கம் நீங்குகின்றது.

घटमटाकाश दर्शनेन सङ्गीतिभ्रमो निवृत्तः।
कनकरुचक दर्शनेन विकारित्वभ्रमो निवृत्तः॥

கடமடாகாச தர்சநேந ஸங்கீதி ப்ரமோ நிவ்ருத்த:
கனக ருசக தர்சநேந விகாரித்வ ப்ரமோ நிவ்ருத்த:

ஆகாசமானது குடத்தின் வளைவு மடத்தின் சுவர்மேற் கூறை முதலியவற்றின் மறைவால் குடாகாசம் மடாகாசம் எனச் சொல்லப்படினும் மறைவு நீங்கியபொழுது மஹாகாசமெனப் படுவதுபோல், ஜீவனும் விசாரத்தால் சரீரங்களாகிற உபாதியை நீக்கியபொழுது நிஸ்ஸங்கனென்று உணர்வதால் மூன்றாவது மயக்கம் ஒழிகின்றது.

சுவர்ணமே, குண்டலம் மோதிரம் முதலிய நாமரூபத்தால் வேறாகக் காணப்படினும், நாமரூப கற்பனையை நீக்கிய பொழுது எப்படி சுவர்ணமே விளங்குகின்றதோ; அப்படி, காரணமான ஆன்மாவில் நாமரூப பிரபஞ்ச கற்பனையை விடுத்து ஆன்மா நிர்விகாரி என்று உணர்வதால், விகாரப் பிராந்தி என்னும் நான்காவது மயக்கம் நீங்குகின்றது.

रज्जुसर्पदर्शनेन कारणाद्भिन्नजगतः सत्यत्वभ्रमो निवृत्तः।

ரஜ்ஜு ஸர்பதர்சனேன காரணாத் பின்னஜகத: ஸத்யத்வ ப்ரமோ நிவ்ருத்த:

எவ்வாறு கயற்றினிடத்து மயக்கத்தாற்கண்ட சர்ப்பம் மயக்கம் நீங்கியபொழுது கயறேயாகி சர்ப்பமில்லையாகிறதோ; அதுபோல் மயக்கத்தால் ஆன்மாவினும் வேறான பிரபஞ்சம் சத்தியமாகக்காணினும் மயக்கம் நீங்கியபொழுது பிரபஞ்சத் தோற்றம் மித்யையென அறிவதால் ஐந்தாவது பிராந்தி நீங்குகின்றது.

(அ) பிராந்தி நீங்கிய பின்னுள்ள சொரூப நிலையைக் கூறுகின்றது—

तदाप्रभृति मच्चित्तं ब्रह्माकारमभूत्स्वयम् ।
निदाघ त्वमपीत्थं हि तत्त्वज्ञान मवाप्नुहि ॥ १६ ॥

ததா ப்ரப்ருதி மச்சித்தம் ப்ரஹ்மாகார மபூத் ஸ்வயம்
நிதாக த்வமபீத்தம் ஹி தத்வஜ்ஞான மவாப்நுஹி. (16)

இவ்வாறு ஐந்துவித மயக்கம் நீங்கியபொழுது எனது சித்தம் தானே பிரம்ம வடிவாயிற்று. ஏ நிதாகனே? நீயும் இத்தகைய விசாரத்தால் தத்வஞானத்தை அடைவாயாக.

(அ) நிதாகர் அந்த வித்தையை எனக்குச் சொல்ல வேண்டுமெனக் கூறுகின்றார்—

निदाघः प्रणतो भूत्वा ऋभुं पप्रच्छ सादरम् ।
ब्रूहि मे श्रद्दधानाय ब्रह्मविद्यामनुत्तमाम् ॥ १७ ॥

நிதாக: ப்ரணதோ பூத்வா ருபும் பப்ரச்ச ஸாதரம்
ப்ரூஹி மே ச்ரத்ததாநாய ப்ரஹ்ம வித்யாமநுத்தமாம் (17)

இவ்வாறு தனதனுபவத்தைச் சொன்ன ருபுமுனியை நிதாகர் அன்போடு பணிந்து சிரத்தையுள்ளவனை என் பொருட்டு மேலான பிரம்ம வித்தையைச் சொல்லவேண்டும் எனக்கேட்டார்.

(அ) ருபுமுனிவர் பிரம்ம வித்தையைச் சிஷ்யனுக்கு விரிவாய் ஆறு மந்திரங்களால் உபதேசிக்கின்றார்—

तथेत्याह ऋभुः प्रीतस्तत्त्वज्ञानं वदामि ते ।
महाकर्ता महाभोक्ता महात्यागी भवानघ ॥ १८ ॥

"ததேத்யாஹ ருபு: ப்ரீதஸ் தத்வஜ்ஞானம் வதாமி தே
மஹாகர்த்தா மஹாபோக்தா மஹாத்யாகீ பவாநக" (18)

மிக்க பிரீதியடைந்த ருபுமுனிவர் " அவ்விதமே உன் பொருட்டு தத்துவ ஞானத்தைச் சொல்லுகின்றேன். நீ

அதன் மகிமையால் மகாகர்த்தா மகாபோக்தா மகாத்யாகியாக ஆவாயாக" என ஆசிர்வதித்துச் சொன்னார்.

स्वस्वरूपानुसंधानमेवं कृत्वा सुखी भव ॥

"ஸ்வ ஸ்வரூபா னுஸந்தான மேவம் க்ருத்வா சுகீ பவ"

மேல் சொல்லும் விதமாய் உனது ஆன்மானுசந்தானத்தைச் செய்து சுகமுள்ளவனாய் ஆகுக.

नित्योदितं विमल माद्य मनन्तरूपं
ब्रह्मास्मि नेतर कलाकलनं हि किंचित् ।
इत्येव भावय निरञ्जनतामुपेतो
निर्वाण मेहि सकलामलशान्तवृत्तिः ॥

"நித்யோதிதம் விமல மாத்ய மனந்த ரூபம்
ப்ரஹ்மாஸ்மி நேதரகலாகலநம் ஹி கிஞ்சித்
இத்யேவ பாவய நிரஞ்ஜனதா முபேதோ
நிர்வாணமேஹி ஸகலாமல சாந்த வ்ருத்தி:||' (19)

எப்பொழுதும் உதயமாயுள்ளதும், மலமற்றதும், முதன்மையானதும், எல்லையற்ற வடிவினதுமான பிரம்மமாகவே இருக்கின்றேன். பலவாய்க்காணப்படும் திருப்யக்கூட்டம் அற்பமுமில்லை என்று பாவனை செய். இவ்வாறு செய்வதால் பற்றற்ற எல்லாத் தன்மையையடைந்தவனும், மலமற்றதும் சாந்தமானதுமாகக் காணும் விருத்தியுள்ளவனுமாய் நிர்வாணமெனப்படும் மோக்ஷ பதத்தை அடைவாய்.

यदिदं दृश्यते किंचित्तन्नास्तीति भावय ।
यथा गन्धर्वनगरं यथा वारि मरुस्थले ॥

"யதிதம் த்ருஶ்யதே கிஞ்சித் தத்தன் நாஸ்தீதி பாவய
யதா கந்தர்வ நகரம் யதா வாரி மருஸ்தலே" (20)

எப்படி சொப்பன நகரம் மித்யையோ, எப்படி மருபூமியில் காணும் சலம் மித்தையாமோ; அப்படியே ஆன்மாவிற்கு வேறாய் யாதொன்று இது என்று அல்ப்பமாய் காணப்படுகிறதோ; அதை மித்தையான பொய்த்தோற்றமென்றே பாவனை செய்.

यत्तु नो दृश्यते किंचिद्यन्नु किंचिदिव स्थितम् ।
मनःषष्ठेन्द्रियातीतं तन्मयो भव वै मुने ॥

"யத்து நோ த்ருஶ்யதே கிஞ்சித் யன்னு கிஞ்சிதிவ ஸ்திதம்
மன: ஷஷ்டேந்த்ரியாதீதம் தன்மயோ பவ வை முனே"
(21)

ஏ சிறந்த முனிவனே! எந்த வஸ்துவானது சிறிது இருப்புள்ளது போன்றதோ; எது கண்களால் சிறிதும் காணப்படாததாமோ; அது மனமுதலிய ஆறு இந்திரியங்களையும் கடந்ததாம். அதுவாக ஆவாய்.

अविनाशी चिदाकाशं सर्वात्मकमखण्डितम् ।
नीरन्ध्रं भूरिवाशेषं तदस्मीति विभावय ॥ २२ ॥

"அவினாஶி சிதாகாஶம் ஸர்வாத்மக மகண்டிதம்
நீரந்த்ரம் பூரிவாசேஷம் ததஸ்மீதி விபாவய" (22)

நாசமற்றதும் சிதாகாசமும் எல்லாமாயிருப்பதும், கண்டிக்கப்படாததும் இடைவெளியில்லாததும் பெரிதும் மீதமின்றியதும் எதுவோ, அது நானாகின்றேன் என்று பாவனை செய்வாயாக.

(அ) சித்சாமன்யமே ஸத்தாஸாமான்யமாய் பிறகு அந்தப் பெயருமின்றியதாகிறது—என இரண்டு மந்திரங்களால் கூறப்படுகின்றது—

यदा संक्षीयते चित्तमभावात्यन्तभावनात् ।
चित्सामान्य स्वरूपस्य सत्तासामान्यता तदा ॥ २३ ॥

"யதா ஸம்க்ஷீயதே சித்தமபாவாத்யந்த பாவனாத்
சித்ஸாமான்ய ஸ்வரூபஸ்ய ஸத்தா ஸாமான்யதா ததா" (23)

எப்பொழுது நாமரூப பிரபஞ்சத்தின் முழுதுமின்மையைப் பாவனை செய்வதால் சித்தம் நாசத்தையே அடைகின்றதோ, அப்பொழுது சித்தின் சாமான்ய விளக்கம் சத்தே வடிவமாக நிலைபெறுகின்றது.

नूनं चैत्यांशरहिता चिद्यदात्मनि लीयते ।
असद्रूपवदत्यच्छा सत्तासामान्यता तदा ॥ २४ ॥

"நூநம் சைத்யாம்ஶரஹிதா சித்யதாத்மனி லீயதே
அஸத்ரூபவ தத்யச்சா ஸத்தா ஸாமான்யதா ததா" (24)

உண்மையில் விஷய விளக்கமற்ற சித்தானது எப்பொழுது ஆன்மாவில் லயத்தை அடைகின்றதோ, அப்பொழுது சாமான்ய சத்தும் அசத்துப் போன்றதாம் என்பது மிகத் தெளிவாகின்றது.

(அ) அதையே ஜீவன்முக்தர் விதேகமுக்தர்களிடத்திலுள்ள துரியாதீதமெனக் கூறுகின்றது—

दृष्टिरेषा हि परमा सदेहादेहयोः समा ।
मुक्तयोः संभवत्येव तुर्यातीतपदाभिधा ॥ २५ ॥

"த்ருஷ்டிரேஷா ஹி பரமா ஸதேஹாதேஹயோ: ஸமா
முக்தயோ: ஸம்பவத்யேவ தூர்யாதீத பதாபிதா" (25)

இந்த திருஷ்டி மிக மேலானது. இது ஜீவன்முக்தர் விதேகமுக்தர்களுக்குப்பொதுவானது. இதுவே அம்முக்தர்களுக்குத் துரியாதீதபதமென்றும் சொல்லப்படுகின்றது.

(அ) ஞானிக்கும் அஞ்ஞானிக்குமுள்ள வேற்றுமையைக் கூறுகின்றது—

व्युत्थितस्य भवत्येषा समाधिस्थस्य चानघ ।
ज्ञस्य केवलमज्ञस्य न भवत्येव बोधजा ॥
अनानन्द समानन्द मुग्धामुग्ध मुखद्युतिः ॥ २६ ॥

"வ்யுத்திதஸ்ய பவத்யேஷா ஸமாதிஸ்தஸ்ய சானக
ஜ்ஞஸ்ய கேவல மஜ்ஞஸ்ய ந பவத்யேவ போதஜா
அநாநந்த ஸமாநந்த முக்தாமுக்த முகத்யுதி:" (26)

சமாதியில் நின்றுப வெளிப்பட்டவனுக்கும் சமாதியில் நிலைத்தவனுக்கும் இந்நிலையானது உண்டாகின்றது; ஞானிக்கு ஞானத்தாலுண்டான கேவல பதமானது அஞ்ஞானிக்குண்டாவதே இல்லை. ஞானிக்கு அகத்திலுள்ள ஆனந்தானுபவத்தால் முகத்தில் தெளிவும், அஞ்ஞானிக்கு அஃதின்மையால் முகத்தில் தெளிவின்மையும் காணத்தக்கது.

(அ) ஞானமொன்றினால் தான் அந்தப்பதம் அடையப்படுமெனக் கூறல்—

चिरकाल परिक्षीण मननादि परिश्रमः ।
पदमासाद्यते पुण्यं प्रज्ञयैवैकया तथा ॥ २७ ॥

"சிரகால பரிக்ஷீண மனனாதி பரிப்ரம:
பதமாஸாத்யதே புண்யம் ப்ரஜ்ஞயை வைகயா ததா" (27)

மனனம் முதலியவற்றால் வெகுகாலம் கஷ்டமாக அப்யாசம் செய்தவன் ஞானமொன்றினாலேயே அத்தகைய புண்ய பதத்தை அடைகின்றான்.

(அ) ஸமாதியின் அனுபவம் கூறப்படுகின்றது—

इमं गुणसमाहार मनात्मत्वेन पश्यतः ।
अन्तः शीतलया यासौ समाधिरिति कथ्यते ॥ २८ ॥

"இமம் குணஸமாஹார மனாத்மத்வேன பஶ்யத:
அந்த: ஶீதளயா யாஸௌ ஸமாதிரிதி கத்யதே" (28)

இந்த சத்வ ரஜஸ்தமோ குணவடிவான பிரபஞ்சத்தை அனாத்மாவாகக் காண்பவனுக்கு உள்ளக் குளிர்ச்சியால் யாதொரு அனுபவமுண்டாகிறதோ, அதுவே ஸமாதி என்று சொல்லப்படுகின்றது.

(அ) தியானத்தால் வாஸனையைக் கெடுத்து சாந்தி பெறவேண்டுமெனக் கூறப்படுகின்றது—

अवासनं स्थिरं प्रोक्तं मनोध्यानं तदेव च।
तदेव केवलीभानं शान्ततैव च तत्सदा ॥ २९ ॥

"அவாஸனம் ஸ்திரம் ப்ரோக்தம் மனோத்யானம் ததேவச
ததேவ கேவலீபானம் ஶாந்ததைவ ச தத் ஸதா" (29)

வாசனையின் நாசமே மனதின் சலனமின்மைக்குக் காரணமெனச் சொல்லப்பட்டது. மனத்தால் சதா செய்யும் தியானமும் அதுவேயாம். அதுவே ஒப்பற்ற ஆன்ம விளக்கமாம். அதுவே தாபமற்ற சாந்தி நிலையாம்.

(அ) வாஸனை குறைந்தால் கருத்ருத்வம் நீங்கி மனம் சாந்தியடையுமெனக் கூறல்—

तनुवासन मत्युच्चैः पदायोद्यतमुच्यते।
अवासनं मनोऽकर्तृपदं तस्मात्तवाप्यते ॥ ३० ॥

"தனுவாஸன மத்யுச்சை: பதாயோத்யத முச்யதே
அவாஸனம் மனோऽகர்த்ரு பதம் தஸ்மாத் தவாப்யதே"(30)

வாஸனையைக் குறைப்பது மிக்க உயர்ந்த பதம்பெறும் வழியெனச் சொல்லப்பட்டது. வாஸனை முழுதும் நீங்கிய மனமே நான் எனது என்ற அகந்தையற்ற பதமாம். ஆகையால் வாஸனையின் நாசத்தைச் செய்த உனக்கு அப்பதம் அடைவுற்றதாம்.

(அ) மிகுந்தவாஸனை துன்பத்தின் காரணமெனக் கூறல்—

घनवासनमेतत्तु चेतः कर्तृत्त्व भावनम् ।
सर्वदुःखप्रदं तस्मा द्वासनां तनुतां नयेत् ॥ ३१ ॥

"கனவாஸனமேதத்து சேத: கர்த்ருத்வ பாவனம்
ஸர்வது:கப்ரதம் தஸ்மாத் வாஸனாம் தனுதாம் நயேத்"(31)

மிகுந்த வாஸனையானது சித்தத்தில் கர்த்ருத்தன்மையை உண்டாக்கி எல்லாத் துன்பங்களையும் கொடுப்பதாம். ஆகையால் வாஸனையைக் குறைத்துக் கொள்ளல் வேண்டும்.

(அ) அந்தர்முக திருஷ்டியால் வெளியில் செய்யும் அகண்ட பாவனையை விடின் சித்தம் பர வெளியில் கலந்து விடும் எனக் கூறப்படுகின்றது—

चेतसा संपरित्यज्य सर्वभावात्म भावनाम् ।
सर्वमाकाशतामेति नित्यमन्तर्मुखस्थितेः ॥ ३२ ॥

"சேதஸா ஸம்பரித்யஜ்ய ஸர்வபாவாத்ம பாவனாம்
ஸர்வமாகாஶதாமேதி நித்யமந்தர் முகஸ்திதே: (32)

எல்லாம் ஆன்மா எனச்செய்யும் பாவனையைச் சித்தத்தால் நன்றாய் மீதமின்றி விடுத்து எப்பொழுதும் அந்தர் முகத்தில் நிலைபெற்ற யதியின் சித்தம் எல்லாம் நிறைந்த சிதாகாசமே ஆகின்றது.

அ) ஞானி கிராமத்தை வனமாகக் காண்கின்றான் என்பதை திருட்டாந்தத்துடன் இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

यथा विपणगा लोका विहरन्तोऽप्यसत्समाः ।
असंबन्धात्तथा ज्ञस्य ग्रामोऽपि विपिनोपमः ॥ ३३ ॥

"யதா விபணகா லோகா விஹரந்தோப்ய ஸத்ஸமா:
அஸம்பந்தாத் ததா ஜ்ஞஸ்ய க்ராமோபி விபிநோபம:" (33)

எப்படிக் கடைத்தெருவில் போதல் வருதலைச் செய்கின்ற சனங்களுக்குக் கடைப்பொருள்களோடு சம்பந்தமின்மையால் அப்பொருள்கள் இருந்தும் இல்லாதனவே ஆகின்றனவோ, அப்படி ஞானிக்கு உலகத்தோடு சம்பந்தமின்மையால் கிராமமும் வனமே ஆகின்றது.

अन्तर्मुखतया नित्यं सुप्तो बुद्धो व्रजन्पठन् ।
पुरं जनपदं ग्राममरण्यमिव पश्यति ॥ ३४ ॥

"அந்தர் முகதயா நித்யம் சுப்தோ புத்தோ வ்ரஜன் படன்
புரம் ஜனபதம் க்ராம மரண்யமிவ பஸ்யதி" (34)

தூங்கினும் விழித்திருப்பினும் செல்லினும் படித்துக் கொண்டிருப்பவனாயினும் ஞானி எப்பொழுதும் அந்தர்முக திருஷ்டியால் ஜனங்களோடுள்ள பட்டணத்தையும், கிராமத்தையும் அரண்யத்தைப்போன்று பார்க்கின்றான்.

(அ) அகத்திலுள்ளது புறத்தில் தோன்றுமென்பதை இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

अन्तः शीतलतायां तु लब्धायां शीतलं जगत् ।
अन्तस्तृष्णोपतप्तानां दावदाहमयं जगत् ॥ ३५ ॥

"அந்த: சீதளதாயாந்து லப்தாயாம் சீதளம் ஜகத்
அந்தஸ்த்ருஷ்ணோபதப்தாநாம் தாவதாஹமயம் ஜகத்"(35)

உள்ளம் குளிர்ந்தபொழுது உலகம் குளிர்ந்ததாம். உள்ளம் ஆசையாகிற அக்கினியால் தாபமடைந்தவர்களுக்கு உலகம் காட்டுத்தீயால் தகிக்கப்படுவது போன்று காணப்படும்.

भवत्यखिलजन्तूनां यदन्तस्तद्बहिः स्थितम् ॥ ३६ ॥

"பவத்யகில ஜந்தூனும் யதந்தஸ்தத் பஹி: ஸ்திதம்" (36)

எல்லா ஜீவர்களுக்கும் உள்ளத்தில் எப்படியோ அஃதே புறத்தும் உண்டாயிற்கும்.

(அ) சுகதுக்கங்கட்கு அடிமையாகாதவன் ஜிதேந்திரியன் எனக் கூறல்—

यस्त्वात्मरतिरेवान्तः कुर्वन्कर्मेन्द्रियैः क्रियाः ।
न वशो हर्षशोकाभ्यां स समाहित उच्यते ॥ ३७ ॥

"யஸ்த்வாத்மரதிரேவாந்த: குர்வன் கர்மேந்த்ரியை: க்ரியா:
ந வசோ ஹர்ஷ சோகாப்யாம் ஸ ஸமாஹித
உச்யதே॥". (37)

உள்ளத்தின்கண் ஆன்மாவினிடத்தேயே ரமிக்கின்ற எந்த ஞானி வெளியில் கர்மேந்திரியங்களால் கிரியைகளைச் செய்கின்றவனாய் சந்தோஷ விஷாதங்களுக்கு அடிமையாகாதவனுவானோ, அவன் சமாகிதனென்று சொல்லப்படுகின்றான்.

(ஆ) உண்மையில் தன்னுடைமை போன்று பிறர் பொருளைக்காண்பான் உண்மையைக் காண்பன் எனக் கூறப்படுகின்றது—

आत्मवत्सर्वभूतानि परद्रव्याणि लोष्ठवत् ।
स्वभावादेव न भयाद्यः पश्यति स पश्यति ॥ ३८ ॥

"ஆத்மவத் ஸர்வ பூதானி பரத்ரவ்யாணி லோஷ்டவத்
ஸ்வபாவாதேவ ந பயாத் ய: பஶ்யதி ஸ பஶ்யதி" (38)

எவன் எல்லாசீவர்களையும் தன்னைப்போற் காண்பவனும் பிறர்பொருளை ஓடுபோலவும் பயத்தினலன்றி இயற்கையிற் காண்கின்றானோ, அவன் உண்மையைக் காண்கின்றான்.

(அ) ஞானி மரணத்தைக் கண்டு பயப்படான் என திருஷ்டாந்தத்துடன் கூறுகின்றார்—

अद्यैव मृतिरायातु कल्पान्त निचयेन वा ।
नासौ कलङ्कमाप्नोति हेम पङ्कगतं यथा ॥ ३९ ॥

"அத்யைவ ம்ருதிராயாது கல்பாந்த நிசயேன வா
நாஸௌ கலங்க மாப்னோதி ஹேம பங்ககதம் யதா" (39)

இன்றே மரணம்வரினும் அல்லது கல்பகோடி காலத்திற்குப் பிறகு வருவதாயினும் இவன் துக்கப்படுவதில்லை. எப்படித் தங்கம் சேற்றில் கிடப்பினும் அதை அழுக்கு பற்றுவதில்லையோ; அதுபோல்.

(அ) இவ்வாறு விசாரம் செய்யின் மேலான பயன் பெறுவர் எனக் கூறுகின்றார்—

कोऽहं कथमिदं किं वा कथं मरणजन्मनी ।
विचारयान्तरे वेत्थं महत्तत्फलमेष्यसि ॥ ४० ॥

"கோऽஹம் கதமிதம் கிம் வா கதம் மரணஜன்மநீ
விசாரயாந்தரேவேத்தம் மஹத் தத் பலமேஷ்யஸி" (40)

நான் யார்? இந்தக் காணப்படுகின்ற ஜகத்து எவ்வாறு உண்டாயிற்று? இதன் காரணம் யாது? இறப்புப் பிறப்புகள் எவ்வாறு உண்டாகின்றன? என்று இவ்வாறு உள்ளத்தின் கண்ணேயே விசாரிப்பாயாக. இத்தகைய விசாரத்தால் பெரும்பயனை அடைவாய்.

(அ) விசாரத்தால் மனமொடுங்கி சாந்தி பெறுவன் எனக் கூறுகின்றார்—

विचारेण परिज्ञात स्वभावस्य सतस्तव ।
मनः स्वरूपमुत्सृज्य शममेष्यति विज्वरम् ॥ ४१ ॥

"விசாரேண பரிஜ்ஞாத ஸ்வபாவஸ்ய ஸதஸ்தவ
மன: ஸ்வரூபமுத்ஸ்ருஜ்ய ஶமமேஷ்யதி விஜ்வரம்" (41)

விசாரத்தால் உண்மை ஞானத்தைப் பெற்றிருப்பவனுன உனது மனம் தாபமற்றதாய் சொரூபத்தையிழந்து சமம் எனப்படும் அடக்கத்தை அடையப் போகின்றது.

(அ) சாந்திபெற்ற மனம் சம்சாரத்தைக் கடக்குமெனத் திருட்டாந்தத்துடன் கூறுகின்றார்.

विज्वरत्वं गतं चेतस्तव संसारवृत्तिषु ।
न निमज्जति तद्ब्रह्मन्गोष्पदेष्विव वारणः ॥ ४२ ॥

"விஜ்வரத்வம் கதம் சேதஸ் தவ ஸம்ஸார வ்ருத்திஷு
ந நிமஜ்ஜதி தத் ப்ரஹ்மன் கோஷ்பதேஷ்விவ வாரண:"(42)

ஏ பிரம்மத்தை அறிந்தவனே! பசுவின் குளப்படி ஜலத்தில் எப்படி யானை மூழ்குவதில்லையோ, அதுபோல் விஷயதாப மற்றுச் சாந்தமான உனது சித்தமானது பிறவியைத்தரும் ஸம்சார விஷயங்களில் மூழ்குவதில்லை.

(அ) சாந்திபெருத மனம் சம்சாரத்தில் மூழ்கித் தவிக்குமெனத் திருட்டாந்தத்துடன் கூறுகிறார்—

कृपणं तु मनो ब्रह्मन्गोष्पदेऽपि निमज्जति ।
कार्ये गोष्पदतोयेऽपि विशीर्णो मशको यथा ॥ ४३ ॥

"க்ருபணந்து மனோ ப்ரஹ்மந் கோஷ்பதேऽபி நிமஜ்ஜதி
கார்யே கோஷ்பததோயேऽபி விஶீர்ணோ மஶகோ யதா"
(43)

ஏ பிரம்மத்தையறிந்தவனே! எவ்வாறு பலமில்லாத கிழக்கொசுவானது பசுவின் குளப்படி ஜலத்திலும் மூழ்கித்

தவிக்கின்றதோ, அவ்வாறு ஏழையின் பணமான அறிய மான சம்சாரத்தில் மூழ்கித் தவிக்கின்றது.

(அ) விஷயப்பற்று நீங்கின் ஆன்மாவேயுள்ளதாம் என இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

यावद्यावन्मुनिश्रेष्ठ स्वयं संत्यज्यतेऽखिलम्।
तावत्तावत्परालोकः परमात्मैव शिष्यते ॥ ४४ ॥

"யாவத்யாவத் முனிஶ்ரேஷ்ட ஸ்வயம் ஸம்த்யஜ்யதேऽகிலம்
தாவத்தாவத் பராலோக: பரமாத்மைவ ஶிஷ்யதே" (44)

ஏ முனிவர்களுள் சிறந்தவனே! எவ்வளவு, எவ்வளவு விஷயப்பற்றை விடுத்ததாய் சித்தம்தானே முடிவில் எல்லாப் பற்றையும் விடுத்ததாமோ: அவ்வளவுக்கவ்வளவு ஆன்ம ஒளியின் பெருக்குண்டாய் முடிவில் பரமாத்மாவாகவே மிஞ்சுகின்றது.

यावत्सर्वं न संत्यक्तं तावदात्मा न लभ्यते।
सर्ववस्तु परित्यागे शेष आत्मेति कथ्यते ॥ ४५ ॥

"யாவத் ஸர்வம் ந ஸம்த்யக்தம் தாவதாத்மா ந லப்யதே
ஸர்வ வஸ்து பரித்யாகே சேஷ ஆத்மேதி கத்யதே" (45)

புருஷன் எது பரியந்தம் எல்லாப்பற்றையும் விடுகிறதில்லையோ, அதுபரியந்தம் ஆன்மாவை அடைவதில்லை. எல்லாப்பற்றும் அற்றவிடத்து மீதமுள்ளது ஆன்மாவென்றே சொல்லப்படுகின்றது.

(அ) முயற்சியால் எல்லாப்பற்றையும் விடுத்து உண்மை நிலையைப் பெறவேண்டுமெனக் கூறுகின்றார்.

आत्मावलोकनार्थन्तु तस्मात्सर्वं परित्यजेत्।
सर्वं संत्यज्य दूरेण यच्छिष्टं तन्मयो भव ॥ ४६ ॥

"ஆத்மாவலோகனார்த்தந்து தஸ்மாத் ஸர்வம் பரித்யஜேத்
ஸர்வம் ஸம்த்யஜ்ய தூரேண யச்சிஷ்டம் தன்மயோ பவ்"(46)

ஆகையால் ஆன்மாவைக்காணும் பொருட்டாகவே எல்லாப்பற்றையும் விடுப்பானாக. நீயும் எல்லாப்பற்றையும் தூரத்தில் விடுத்து எது மீதமுள்ளதாமோ அதுவாகஆவாய்.

(அ) காணப்படுகின்ற யாவும் சித்தின் தோற்றமே என்று அறிய வேண்டுமெனக் கூறுகிறார்—

सर्वं किंचिदिदं दृश्यं दृश्यते यज्जगद्गतम् ।
चिन्निष्पन्दांशमात्रं तन्नान्यत्किंचन शाश्वतम् ॥ ४७ ॥

"ஸர்வம் கிஞ்சிதிதம் த்ருஶ்யம் த்ருஶ்யதே யஜ்ஜகத் கதம்
சின்னிஷ்பந்தாம்ஶமாத்ரம் தந்நான்யத் கிஞ்சந
ஶாஶ்வதம்" (47)

உலகத்தில் எது காணப்பட்டதாமோ இந்த திருஶ்யமானஎல்லாம் அல்பமே; அதுவும் சித்தின்சலன மாத்திரமேயாம். சித்தினும் வேறு நிலைத்தபொருள் எதுவும் இல்லை.

(அ) எல்லாவற்றையும் சித்தின் தோற்றமெனக்காணும் உண்மையறிவே மேலானதென்றும், அதுவே கலக்கமற்ற சமாதி என்றும், அதுவே துரீய நிலை என்றும், அதுவே நனவிற் சுழுத்தி நிலை என்றும் ஐந்து மந்திரங்களால் கூறுகின்றார்—

समाहिता नित्यतृप्ता यथा भूतार्थ दर्शिनी।
ब्रह्मन्समाधि शब्देन परा प्रज्ञोच्यते बुधैः ॥ ४८ ॥

"ஸமாஹிதா நித்யத்ருப்தா யதா பூதார்த்த தர்ஶினீ
ப்ரஹ்மன் ஸமாதி ஶப்தேன பரா ப்ரஜ்ஞோச்யதே
புதை:" (48)

ஏ பிரம்ம வித்தே! எந்த அறிவானது எல்லாவற்றையும் தன்னுள் அடக்கியதும் நித்யமான ஆன்மாவில் திருப்தியுள்ளதும் பொருளையுள்ளவாறு காட்டுவதுமாமோ; அந்த ப்ரஜ்ஞையே புத்திமான்களால் மேலான ஸமாதி என்று சொல்லப்படுகின்றது.

अक्षुब्धा निरहंकारा द्वन्द्वेष्वननुपातिनी ।
प्रोक्ता समाधिशब्देन मेरोः स्थिरतरा स्थितिः ॥ ४९ ॥

"அக்ஷுப்தா நிரஹங்காரா த்வந்த்வேஷ்வனனுபாதிநீ
ப்ரோக்தா ஸமாதி ஶப்தேந மேரோ: ஸ்திரதரா
ஸ்திதி:" (49)

கலங்காததும், அகங்காரமில்லாததும், சுகதுக்கங்களில் வீழ்த்தாததும், மேரு மலைபோன்று மிக்க உறுதியான நிலையை உடையதும் எந்த பிரஜ்ஞையோ; அந்த அறிவன் நிலையானது ஸமாதியென்ற பெயரால் சொல்லப்பட்டது.

निश्चिता विगताभीष्टा हेयोपादेय वर्जिता ।
ब्रह्मन्समाधिशब्देन परिपूर्णा मनोगतिः ॥ ५० ॥

"நிஶ்சிதா விகதாபீஷ்டா ஹேயோபாதேய வர்ஜிதா
ப்ரஹ்மன் ஸமாதி ஶப்தேன பரிபூர்ணா மனோகதி:" (50)

ஏ பிரம்மவித்தே! குரு சாஸ்திரங்களால் நிச்சயிக்கப்பட்டதும், ஆசையற்றதும், தள்ளுதலும் கொள்ளுதலுமற்றதுமான, மனோகதியின் முடிவான பூர்ணநிலை யாதோ அது ஸமாதி சப்தத்தால் சொல்லப்படுகின்றது.

केवलं चित्प्रकाशांश कल्पिता स्थिरतां गता ।
तुर्या सा प्राप्यते दृष्टिर्महद्भि र्वेदवित्तमैः ॥ ५१ ॥

"கேவலம் சித்ப்ரகாசாம்ச கல்பிதா ஸ்திரதாம் கதா
துர்யா ஸா ப்ராப்யதே த்ருஷ்டிர் மஹத்பிர் வேதவித்தமை:"

ஒப்பற்ற சின் மாத்திரத்தின் பிரகாச லேசத்தால் உண்டானதும், உறுதியான நிலையை அடைந்ததுமான அந்த ஞானமான்து வேதவித்துக்களான மகான்களால் துரீய பதமாக அடையப்படுகின்றது.

अदूरगतसादृश्या सुषुप्तस्योपलक्ष्यते ।
मनोऽहंकारविलये सर्वभावान्तरस्थिता ॥ ५२ ॥

“அதூரகத ஸாத்ருஶ்யா ஸுஷுப்தஸ்யோபலக்ஷ்யதே
மனோऽஹங்காரவிலயே ஸர்வபாவாந்தரஸ்திதா” (52)

மனமும் அகங்காரமும் லயமடைந்த பொழுது எல்லா பாவனையையும் தன்னுள் அடக்கியதான துரிய நிலை சுழுப்தியின் நெருங்கிய ஸாதிருஶ்யமுள்ளதாம் என்று குறிப்பிடப்படுகின்றது.

(அ) அசுத்தமனதைக் கெடுப்பின் ஆனந்த வடிவ அன்னபூர்ணேஶ்வரி தோன்றுவள் எனக் கூறல்—

समुदेति परानन्दा या तनुः पारमेश्वरी ।
मनसैव मनश्छित्त्वा सा स्वयं लभ्यते गतिः ॥ ५३ ॥

“ஸமுதேதி பரானந்தா யா தனு: பாரமேஶ்வரீ
மனஸைவ மனஶ்சித்த்வா ஸா ஸ்வயம் லப்யதே கதி:” (53)

பரமேஶ்வரி சம்பந்தமான துரீய வடிவ எந்த சரீரமுளதோ, அதுமேலான ஆனந்தவடிவாய் உதயமாகின்றது. அப்யாஸியான புருஷனால் சுத்தமனதால் அசுத்த மனத்தைக் கெடுப்பின் அந்த ஆனந்தத்தின் பிராப்தியானது தானகவே அடையப்படுகின்றது.

(அ) இந்த அத்யாயத்தில் முக்யமான ப்ரயோஜனமிதுவெனக் கூறுகின்றார்—

तदनु विषयवासनाविनाशा
स्तदनु शुभः परमः स्फुटः प्रकाशः ।
तदनु च समतावशात्स्वरूपे
परिणमनं महतामचिन्त्यरूपम् ॥ ५४ ॥

"ததனு விஷய வாஸனா விநாஶ:
ததனு சுப: பரம: ஸ்புட:ப்ரகாஶ:
ததனு ச ஸமதாவஶாத் ஸ்வரூபே
பரிணமனம் மஹதாமசிந்த்யரூபம்" (54)

அன்னபூர்ணா உபாஸனைக்குப் பிறகு சித்தத்தில் விஷய வாசனையின் நாசமேற்படுகின்றது. அதன் பிறகு மேலான சுகமும், தெளிவான பிரகாசமும், அதன் பிறகு உயர்வு தாழ்வற்ற சமத்வ நிலையும் ஏற்படுவதால் மகான்களுடைய சித்தம் ஆன்ம சொரூபமாகப் பரிணமித்ததாய் அசிந்திய நிலையை அடைகின்றது.

(அ) சித்தத்தில் விஷய பரிணாமம் நீங்கில் ஆன்மானுபவமுண்டாம் எனக் கூறல்—

अखिलमिदमनन्त मात्मतत्त्वं
दृढपरिणामिनि चेतसि स्थितोऽन्तः ।
बहिरुपशमिते चराचरात्मा
स्वयमनुभूयत एव देवदेवः ॥ ५५ ॥

"அகிலமித மனந்த மாத்ம தத்வம்
த்ருட பரிணாமினி சேதஸி ஸ்திதோ ऽந்த:
பஹிருபஶமிதே சராசராத்மா
ஸ்வய மனுபூயத ஏவ தேவதேவ:" (55)

எல்லா மானதும் எல்லையற்றதுமான இந்த ஆன்மா தன்னிடமாகப் பரிணமித்த சித்தத்தினுள் இருக்கின்றான். சராசர

வடிவ சித்தமானது பகிர்முக பரிணாமத்தினின்றும் அடக்கப்பட்டபொழுது சராசர வடிவனான தேவ தேவனாகிய பரமேஸ்வரன் சொரூபமாகவே அனுபவிக்கப்படுகின்றான்.

(அ) பற்றுள்ள மனம், பற்றற்ற மனமின்னதென்று கூறல்—

असक्तं निर्मलं चित्तं युक्तं संसार्यपि स्फुटम् ।
सक्तन्तु दीर्घतपसा मुक्तमप्यतिबद्धवत् ॥ ५६ ॥

"அஸக்தம் நிர்மலம் சித்தம் யுக்தம் ஸம்ஸார்யபிஸ்புடம்
ஸக்தந்து தீர்க்க தபஸா முக்த மப்யதி பத்தவத்" (56)

விஷயப்பற்று நீங்கிய சித்தம் தூயதாய் நன்மைக்கேதுவாம். பற்றுள்ள சித்தம் இறப்புப் பிறப்பாகிய ஸம்சாரமுள்ளதாய் தெளிவற்றதாம். சித்தம் நீண்டநாள் சிரவண மனன நிதித்யாஸன முதலிய தபஸால் பந்தத்தினின்றும் விடுபட்டதாயினும் மிக்க பந்தமுள்ளது போன்று காணப்படும்.

(அ) யான் எனது என்னும் அபிமானமற்ற முக்தன் இஷ்டப்படி இருப்பன் எனக் கூறல்—

अन्तः संसक्ति निर्मुक्तो जीवो मधुरवृत्तिमान् ।
बहिः कुर्वन्न कुर्वन्वा कर्ता भोक्ता न हि क्वचित् ॥ ५७ ॥

"அந்த: ஸம்ஸக்தி நிர்முக்தோ ஜீவோ மதுர வ்ருத்திமான்
பஹி: குர்வன்னகுர்வன்வா கர்த்தா போக்தா ந ஹி க்வசித்"

ஸகலப்பற்றையும் விடுத்த ஜீவன் உள்ளே இனியவொழுக்கமுள்ளவனாய் வெளிக்கார்யங்களைச் செய்யினும் செய்யாதவிடினும் எந்த விடத்தும் கர்த்தாவுமல்லன் போக்தாவுமல்லன்.

॥ ஓம் சாந்தி: ॥

முதல் அத்யாயம் முற்றிற்று.

## अथ द्वितीयोऽध्यायः ॥

## இரண்டாவது அத்தியாயம்.

ருபுமுனிவரை நிதாகர் கேட்கின்றார்:—

**सङ्गः कीदृश इत्युक्तः कश्च बन्धाय देहिनाम् ।**
**कश्च मोक्षाय कथितः कथं त्वेष चिकित्स्यते ॥ १ ॥**

"ஸங்க: கீத்ருஶ இத்யுக்த: கஶ்ச பந்தாய தேஹிநாம்
கஶ்ச மோக்ஷாய கதித: கதம் த்வேஷ சிகித்ஸ்யதே" (1)

ஜீவர்களுக்குச் சங்கமென்பது எத்தகையதாய்ச் சொல்லப்பட்டது? எந்த சங்கம் பந்தத்தின் பொருட்டாம்? எந்த சங்கம் மோக்ஷத்தின் பொருட்டாம்? இது எவ்வாறு சிகித்ஸை செய்யப்படுகின்றது?

(அ) தேகம் தேகி இவைகளில் தேகத்தைக் கருதுவது சங்ககாரணமென்றும், தேகத்தில் பற்றுவைத்தல் பந்தகாரணமென்றும் கூறுகின்றார்—

**देहदेहिविभागैक परित्यागेन भावना ।**
**देहमात्रे हि विश्वासः सङ्गो बन्धाय कथ्यते ॥ २ ॥**

"தேஹ தேஹி விபாகைக பரித்யாகேன பாவநா
தேஹமாத்ரே ஹி விஶ்வாஸ: ஸங்கோ பந்தாய கத்யதே"(2)

தேகமித்தகையது, ஆன்மா இத்தகையது எனப் பிரித்தறியாது விடுத்து தேகத்தைக் கருதுவது சங்ககாரணமாகும். தேகத்தில் மிக்கப் பற்றுவைத்தல் பந்தகாரணமாகுமெனச் சொல்லப்படுகிறது.

(அ) அஸங்கலக்ஷணம் கூறுகின்றார்.

सर्वमात्मेदमत्राहं किं वाञ्छामि त्यजामि किम्।
इत्यसङ्ग स्थितिं विद्धि जीवन्मुक्त तनुस्थिताम् ॥ ३ ॥

"ஸர்வ மாத்மேதமத்ராஹம் கிம் வாஞ்சாமி த்யஜாமி கிம்
இத்யஸங்கஸ்திதிம் வித்தி ஜீவன்முக்த தனுஸ்திதாம்" (3)

ஈண்டுக் காணப்பட்டன எல்லாம் ஆன்மாவே, இந்த ஆன்ம சொரூபத்தில் நான் எதை விரும்புவேன். எதை விடுவேன். என்று ஜீவன்முக்தன்சரீரத்திலுள்ள அனுபவ நிலையானது அசங்கமென்று அறிவாய்.

नाहमस्मि न चान्योऽस्ति न चायं न च नेतरः।
सोऽसङ्ग इति संप्रोक्तो ब्रह्मास्मीत्येव सर्वदा ॥ ४ ॥

"நாஹமஸ்மி ந சான்யோऽஸ்தி ந சாயம் நச நேதர:
ஸோऽஸங்க இதி ஸம்ப்ரோக்தோ ப்ரஹ்மா ஸ்மீத்
யேவ ஸர்வதா" (4)

நானுமில்லை, அன்யமென்பதுமில்லை, முன்னிலையும் இல்லை, படர்க்கையுமில்லை, சதாகாலமும் பிரம்மமாகவே இருக்கின்றேன் என்ற அனுபவம் யாதோ, அதுவே அசங்க நிலை என்று சொல்லப்படும்.

नाभिनन्दति नैष्कर्म्यं न कर्मस्वनुषज्जते।
सुसमो यः परित्यागी सोऽसंसक्त इति स्मृतः ॥ ५ ॥

"நாபிநந்ததி நைஷ்கர்ம்யம் ந கர்மஸ்வனுஷஜ்ஜதே
ஸுஸமோ ய: பரித்யாகீ ஸோऽஸம்ஸக்த இதி ஸ்ம்ருத:"(5)

எந்தப் புருஷன் கர்மம் செய்யாமையைக் குறித்து சந்தோஷிக்காதவனும், கர்மங்களில் விருப்பமில்லாதவனும், எங்கும் நல்ல ஸமத்வ புத்தியுள்ளவனும், சகல பற்றையும் விடுத்தவனுமாவனோ; அவன் அஸங்கனென்று கருதப்படுகின்றான்.

सर्वकर्मफलादीनां मनसैव न कर्मणा ।
निपुणो यः परित्यागी सोऽसंसक्त इति स्मृतः ।। ६ ।।

"ஸர்வகர்ம பலாதீநாம் மனஸைவ ந கர்மணா
நிபுணோ ய: பரித்யாகீ ஸோऽஸம்ஸக்த இதி ஸ்ம்ருத:" (6)

சர்வபற்றையும் விடுத்து சமர்த்தனை எந்த யோகி கர்மங்களை விடாமலும், கருமத்தின் பலனை மனதினால் விரும்பாமலும் உள்ளவனாவானோ, அவன் அசங்கனென்று சொல்லப்படுகின்றான்.

(அ) சங்கல்பநீக்கமே மோக்ஷகாரணமெனக் கூறல்—

असंकल्पेन सकलाश्चेष्टा नाना विजृम्भिताः ।
चिकित्सिता भवन्तीह श्रेयः संपादयन्ति हि ।। ७ ।।

"அஸங்கல்பேன ஸகலாஶ்சேஷ்டா நாநா விஜ்ரும்பிதா:
சிகித்ஸிதா பவந்தீஹ ஶ்ரேய: ஸம்பாதயந்தி ஹி" (7)

சங்கல்பத்தால் கிரியைகள் பலவாய் விரிந்துள்ளன. நிஸ்ஸங்கல்பமாகிய வாளால் சிகிச்சைசெய்யப்பட்டதாயின், அவைகள் இவ்வுலகின்கண் மோக்ஷவின்பத்தை உண்டு பண்ணுகின்றன.

(அ) ஆன்மவின்பத்தின் மேன்மையைக் கூறுகின்றார்—

न सक्तमिह चेष्टासु न चिन्तासु न वस्तुषु ।
न गमागम चेष्टासु न कालकलनासु च ।। ८ ।।
केवलं चिति विश्रम्य किंचिच्चैत्यावलम्ब्यपि ।
सर्वत्र नीरसमिह* तिष्ठाम्यात्मरसं मनः ।। ९ ।।

"ந ஸக்தமிஹ சேஷ்டாஸு ந சிந்தாஸு ந வஸ்துஷு
ந கமாகம சேஷ்டாஸு ந காலகலனாஸு ச" (8)

* तिष्ठते- என்றிருக்கல் நலம். ஆத்மாவொன்றிலேயே ரமிக்கும் மனம் இவ்வுலகின்கண் நீரஸத்தன்மையை யடையும்- என்பது பொருள்.

"கேவலம் சிதி விஶ்ரம்ய கிஞ்சிச் சைத்யாவலம்ப்யபி
ஸர்வத்ர நீரஸமிஹ திஷ்டாம்யாத்ம ரஸம் மன:" (9)

ஈண்டு ஒப்பற்ற ஆன்ம ரசத்தையுண்டு சிதான்மாவில் விச்ராந்தியுள்ள மனது கர்மேந்திரியச் செயல்களில் பற்று வதில்லை. விஷய சிந்தனைகளைச் செய்வதில்லை. பொருள் களையும் பற்றுவதில்லை. போதல் வருதலைச் செய்வதில்லை. காலபேதங்களையும் அறிவதில்லை. சிறிது விஷயவிளக்கம் உண்டாயினும் இவ்வுலகப் பொருள் எவற்றினும் ரசமின் மையால் ஆன்மா ஒன்றிலேயே ரமிக்கின்றேன்.

(அ) ஆன்மாவில் ரமிப்பவன் நிஷ்கிரியன் எனக் கூறு கின்றார்—

व्यवहारमिदं सर्वं मा करोतु करोतु वा ।
अकुर्वन्वापि कुर्वन्वा जीवः स्वात्मरतिक्रियः ॥ १० ॥

"வ்யவஹாரமிதம் ஸர்வம் மா கரோது கரோது வா
அகுர்வன்வாபி குர்வன்வா ஜீவ: ஸ்வாத்மரதிக்ரிய:" (10)

ஆன்மாவில் ரமித்தலையே தொழிலாகக்கொண்ட சீவன் இந்த உலக விவகாரம் எல்லாம் செய்யாமலிருக்கட்டும், அல் லது செய்யட்டும், செய்யாதிருந்தும் செய்தும் பயனில்லை என்பதாம்.

अथवा तमपि त्यक्त्वा चैत्यांशं शान्तचिद्घनः ।
जीवस्तिष्ठति संशान्तो ज्वलन्मणिरिवात्मनि ॥ ११ ॥

"அதவா தமபி த்யக்த்வா சைத்யாம்ஶம் ஶாந்தசித்கந:
ஜீவஸ்திஷ்டதி ஸம்ஶாந்தோ ஜ்வலன்மணி ரிவாத்மநி" (11)

அந்த விஷய சம்பந்த லேசத்தையும் விடுத்ததால் சாந்த னும் நெருங்கிய ஒளியுள்ளவனுமான சீவன் பிரகாசிக்கின்ற ரத்தினம் போன்று ஆன்மாவினிடத்துப் பூரண சாந்தி யுள்ளவனாய் நிலை பெறுகின்றான்.

(அ) நனவிற்சுழுத்தி நிலையைக் கூறுகின்றார்—

चित्ते चैत्यदशाहीने या स्थितिः क्षीणचेतसाम् ।
सोच्यते शान्तकलना जाग्रत्येव सुषुप्तता ॥ १२ ॥

"சித்தே சைத்யதசாஹீனே யா ஸ்திதி: க்ஷீணசேதஸாம்
ஸோச்யதே சாந்தகலனா ஜாக்ரத்யேவ ஸுஷுப்ததா"

மனோநாசமுள்ளவர்களுக்குச் சித்தத்தின்கண்ணுள்ள விஷய சம்பந்தம் நீங்கியபொழுது எந்த நிலையுள்ளதாமோ; அந்த மிக்க சாந்த வடிவமே நனவிற்சுழுத்திநிலை எனப் படுகின்றது.

(அ) அதுவே முதிர்ச்சியுள்ளதாய் துரியமெனப்படு கின்றது எனக் கூறுகின்றார்—

एषा निदाघ सौषुप्तस्थितिरभ्यासयोगतः ।
प्रौढा सती तुरीयेति कथिता तत्त्वकोविदैः ॥ १३ ॥

"ஏஷா நிதாக ஸௌஷுப்த ஸ்திதி ரப்யாஸ யோகத:
ப்ரௌடா ஸதீ துரீயேதி கதிதா தத்வகோவிதை:" (13)

ஏ நிதாக! இந்த நனவிற் சுழுத்திநிலையானது அப்யாச முதிர்ச்சியால் திடமுள்ளதாகின்றது, இதுவே மிகுந்ததானால் தத்துவ ஞானிகளால் துரியாவத்தை என்று சொல்லப்பட்டது.

(அ) இதுவே முதிர்ச்சியால் துர்யாதீதமென இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

अस्यां तुरीयावस्थायां स्थितिं प्राप्याविनाशिनीम् ।
आनन्दैकान्तशीलत्वा दनानन्दपदं गतः ॥ १४ ॥
अनानन्द महानन्द कालातीतस्ततोऽपि हि ।
मुक्त इत्युच्यते योगी तुर्यातीतपदं गतः ॥ १५ ॥

"அஸ்யாம் துரீயாவஸ்தாயாம் ஸ்திதிம் ப்ராப்யா விநாசிநீம்
ஆனந்தைகாந்த சீலத்வா தனானந்த பதம் கத:" (14)

"அனானந்த மஹானந்த காலாதீதஸ் ததோபி ஹி
முக்த இத்யுச்யதே யோகீ தூர்யாதீத பதம் கத:" (15)

இந்த தூர்யாவஸ்தையின்கண் அழிவற்ற நிலையை அடைந்து ஆனந்தமே மிகுதியாயுள்ள இந்நிலையைப் பெற்றிருப்பதால் அனானந்த பதத்தை அடைந்தான்.

ஆனந்தமின்மை பேரானந்தம் காலம் இவைகளைக் கடந்தவனும் அதற்குமேல் நிலையான தூரியாதீத பதத்தை அடைந்தவனுமான யோகி முக்தனென்றே சொல்லப்படுகின்றான்.

(அ) ஆன்மாவோடுள்ள அபேத நிலையைக் கூறுகின்றார்—

परिगलित समस्त जन्म पाशः
सकलविलीन तमोमयाभिमानः।
परमरसमयीं परात्म सत्तां
जलगत सैन्धव खण्डवन्महात्मा ॥ १६ ॥

"பரிகளித ஸமஸ்த ஜன்ம பாஶ:
ஸகல விலீன தமோமயாபிமான:
பரம ரஸமயீம் பராத்ம ஸத்தாம்
ஜலகத ஸைந்தவ கண்டவன் மஹாத்மா" (16)

ஜன்ம ஏதுவான எல்லாப் பற்றுகளையும் விடுத்தவனும், அஞ்ஞானவடிவ தேகாதி பிரபஞ்சத்திலுள்ள எல்லா அபிமானத்தையும் விடுத்தவனுமான துரியாதீதத்தையடைந்த மகாத்மாவான யோகி, ஜலத்தினுள் சென்ற உப்புக்கட்டி போன்று, சிறந்த அமிர்தமயமான பரமாத்மாவின்கண் சத்தே வடிவமானான்.

(அ) இத் ஜடங்களின் மத்ய நிலையை ஆன்மாவெனக் கூறுகின்றார்—

**जडाजडदृशोर्मध्ये यत्तत्वं पारमार्थिकम् ।**
**अनुभूतिमयं तस्मात्सारं ब्रह्मेति कथ्यते ॥ १७ ॥**

"ஜடாஜட த்ருசோர் மத்யே யத் தத்வம் பாரமார்த்திகம்
அனுபூதி மயம் தஸ்மாத் ஸாரம் ப்ரஹ்மேதி கத்யதே"(17)

ஜடசித்துக்களின் மத்தியில் அனுபவ வடிவமான எந்த உண்மைத் தத்துவமுளதோ, அதுவே மேலான பிரம்மமென்று சொல்லப்படுகின்றது.

(அ) விஷய சம்பந்தமே பந்தமென்றும், அதை விடுவதே மோக்ஷமென்றும் கூறுகின்றார்—

**दृश्यसंवलितो बन्धस्तन्मुक्तौ मुक्तिरुच्यते ।**
**द्रष्ट्दर्शन संबन्धे यानुभूतिरनामया ॥ १८ ॥**
**तामवष्टभ्य तिष्ठ त्वं सौषुप्तिं भजते स्थितिम् ।**
**सैव तुर्यत्वमाप्नोति तस्यां दृष्टिं स्थिरां कुरु ॥ १९ ॥**

"த்ருஶ்ய ஸம்வலிதோ பந்தஸ்தன்முக்தௌ முக்திருச்யதே
த்ரஷ்ட்ரு தர்சன ஸம்பந்தே யானுபூதி ரனாமயா" (18)
"தாமவஷ்டப்ய திஷ்ட த்வம் ஸௌஷுப்திம் பஜதே ஸ்திதிம்
ஸைவ துர்யத்வமாப்நோதி தஸ்யாம் த்ருஷ்டிம் ஸ்திராம் குரு"(19)

விஷயத்தோடுள்ள தொடர்பு பந்தமாம், அதை விடுத்திருப்பது முக்தியாம்—என்று சொல்லப்பட்டது. விஷயத்திற்கும், ஞானத்திற்குமுள்ள தொடர்பில் யாதொரு குற்றமில்லாத அனுபவமுளதோ; அந்நிலையைப்பற்றி நீ நிற்பாயாக. அதுவே நனவிற் சுழுத்தி நிலையை அடைகின்றது.

அந்நிலையில் திருட்டியை உறுதியுள்ளதாகச் செய். அதுவே ஆரியமாகின்றது.

(அ) அந்த சித்-ஜடங்களின் மத்யநிலையே சிறந்ததெனை மூன்று மந்திரங்களால் கூறுகின்றார்—

आत्मा स्थूलो न चैवाणुः न प्रत्यक्षो न चेतरः।
न चेतनो न च जडो न चैवासन्न सन्मयः॥ २०॥

"ஆத்மா ஸ்தூலோ ந சைவாணுர் ந ப்ரத்யக்ஷோ ந சேதர:
ந சேதநோ நச ஜடோ ந சைவாஸந்ந ஸன்மய: (20)

ஆத்துமா தூலவத்துவன்று, நுண்ணிய பொருளுமன்று, நேரில்காணும் பொருளுமன்று, அறியாத பொருளுமன்று, சித்துமன்று, சடமும்மன்று, சத்துமன்று, அசத்து மன்று.

नाहं नान्यो न चैवैको न चानेकोऽद्वयोऽव्ययः।
यदीदं दृश्यतां प्राप्तं मनः सर्वेन्द्रियास्पदम्॥ २१॥

"நாஹம் நான்யோ ந சைவைகோ ந சாநேகோऽத்
வயோऽவ்யய:
யதிதம் த்ருஶ்யதாம் ப்ராப்தம் மந: ஸர்வேந்த்ரியாஸ்பதம்"
(21)

நானுமன்று, அன்யமுமன்று, ஒன்றுமன்று, அநேகமுமன்று, இரண்டலாததாம், நாசமற்றதுமாம். ஆனால் மனம் முதலிய எல்லா இந்திரியங்களுக்கும் ஆதாரமாய் உள்ள வத்துவைக் காண்பாய்.

दृश्यदर्शनसंबन्धे यत्सुखं पारमार्थिकम्।
तदतीतं पदं यस्मात्तन्न किंचिदिवैव तत्॥ २२॥

"த்ருஶ்ய தர்ஶன ஸம்பந்தே யத் ஸுகம் பாரமார்த்திகம்
ததீதம் பதம் யஸ்மாத் தந்ந கிஞ்சிதிவைவ தத்" (22)

விஷயம் விஷயஞானம் இவ்விரண்டின் தொடர்பில் யாதொரு சுகமுளதாமோ, அது உண்மைப்பொருளாம், எக்காரணத்தாலெனின், அது மனவாக்கிற்கு எட்டாத பதமாம். ஆதலின் அது இந்த அநித்யப் பொருள்போன்று சொல்லப் படுவதன்று.

(அ) மோக்ஷமின்னதென்று கூறுகின்றார்—

न मोक्षो नभसः पृष्ठे न पाताले न भूतले ।
सर्वाशासंक्षये चेतःक्षयो मोक्ष इतीष्यते ॥ २३ ॥

"ந மோக்ஷா நபஸ: ப்ருஷ்டே ந பாதாளே ந பூதலே
ஸர்வாஶாஸம்க்ஷயே சேத:க்ஷயோ மோக்ஷ இதீஷ்யதே"
(23)

மோக்ஷமானது ஆகாசத்தின் பின்புறத்திலில்லை. பாதாள உலகத்திலுமில்லை. பூலோகத்திலுமில்லை. எல்லா ஆசையுமற்ற விடத்து சித்தநாசமுண்டாகின்றது. அந்த சித்த நாசமே மோக்ஷமென்று சொல்லப்படுகின்றது.

(அ) பந்தமின்னதென்று கூறுகின்றார்—

मोक्षो मेऽस्त्विति चिन्तान्तर्जाता चेदुत्थितं मनः ।
मननोत्थे मनस्येषः बन्धः सांसारिको दृढः ॥ २४ ॥

"மோக்ஷா மேऽஸ்த்விதி சிந்தாந்தர் ஜாதா
சேதுத்திதம் மன:
மனனோத்தே மனஸ்யேஷ: பந்த: ஸாம்ஸாரிகோ
த்ருட:" (24)

மோக்ஷம் எனக்கு உண்டாகட்டும் எனக் கருதின் மனம் உண்டாம். அம்மனத்தில் சங்கல்பமுண்டாகில் இந்த சம்சார பந்தமானது திடமாகின்றது.

(அ) சங்கல்ப நாசமே செய்யத்தக்கதெனக் கூறுகின்றார்—

**आत्मन्यतीते सर्वस्मात्सर्वरूपेऽथ वा तते।**
**को बन्धः कश्च वा मोक्षो निर्मूलं मननं कुरु ॥ २५ ॥**

"ஆத்மன்யதீதே ஸர்வஸ்மாத் ஸர்வரூபேऽதவா ததே
கோ பந்த: கஶ்ச வா மோக்ஷோ நிர்மூலம் மனனம்
குரு" (25)

எல்லாவற்றைக்காட்டிலும் வியாபகமானதும், எல்லாமாயிருப்பதும் மனவாக்கிற்கு எட்டாததுமான ஆத்மாவில் பந்தம் யாது, மோக்ஷம் யாது, என்ற சங்கல்பத்தை நாசம் செய்வாயாக.

(அ) சாந்தி பெற்றவன் இச்சையற்றிருப்பனெனக் கூறுகின்றார்—

**अध्यात्मरतिराशान्तः पूर्णपावनमानसः।**
**प्राप्तानुत्तमविश्रान्तिर्न किंचिदिह वाञ्छति ॥ २६ ॥**

"அத்யாத்ம ரதிராஶாந்த: பூர்ண பாவன மானஸ:
ப்ராப்தானுத்தம விஶ்ராந்திர் ந கிஞ்சிதிஹ வாஞ்சதி" (26)

எல்லாவற்றிற்கு மாதாரமான ஆத்மாவினிடம் ரமிப்பவனும் எல்லா ஆசையுமற்றதாலுண்டான சாந்தமுள்ளவனும், மிக்கவோய்வு பெற்றவனுமான முனிவன் இவ்வுலகின்கண் எதையும் விரும்புவதில்லை.

(அ) ஆத்மாவில் ரமிப்பவன் ஜீவன்முக்தனென்று கூறுகின்றார்—

**सर्वाधिष्ठानसन्मात्रे निर्विकल्पे चिदात्मनि।**
**यो जीवति गतस्नेहः स जीवन्मुक्त उच्यते ॥ २७ ॥**

"ஸர்வாதிஷ்டான ஸன்மாத்ரே நிர்விகல்பே சிதாத்மநி
யோ ஜீவதி கதஸ்னேஹ: ஸ ஜீவன்முக்த உச்யதே" (27)

எல்லாவற்றிற்கும் ஆதாரமும், ஸத்தே வடிவானதும், இரண்டில்லாததுமான சிதான்மாவில் எந்த முனிவன் ஆசையற்றவனாய் ஜீவித்திருப்பானோ; அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகின்றான்.

(அ) அவன் காலத்தைக்கடந்து கருமம் செய்வனெனக் கூறுகின்றார்—

नापेक्षते भविष्यच्च वर्तमाने न तिष्ठति ।
न संस्मरत्यतीतं च सर्वमेव करोति च ॥ २८ ॥

"நாபேக்ஷதே பவிஷ்யச்ச ந வர்தமானே ந திஷ்டதி
ந ஸம்ஸ்மரத்யதீதம் ச ஸர்வமேவ கரோதி ச" (28)

அம்முனிவன் எதிர்காலத்திலுண்டாவதையும் விரும்புவதில்லை. நிகழ்காலத்திலுள்ளதையும் கருதுவதில்லை. சென்றதையும் நினைப்பதில்லை. எல்லாவற்றையும் செய்கின்றான்.

(அ) ஜீவன்முக்தனுடைய ஆசாரத்தை மூன்று மந்திரங்களால் கூறுகின்றார்—

अनुबन्धपरे जन्तावसंसर्गमनाः सदा ।
भक्ते भक्तसमाचरः शठे शठ इव स्थितः ॥ २९ ॥

"அனுபந்தபரே ஜந்தாவஸம்ஸர்கமனா: ஸதா
பக்தே பக்த ஸமாசார: ஶடே ஶட இவ ஸ்தித:" (29)

எப்பொழுதும் தன்னிடத்தில் மிக்க பிரீதியுள்ளவரிடத்து பற்றாத மனமுள்ளவனும், பக்தனிடத்தில் பக்தன் போலவும், மூடனிடத்தில் மூடன் போலவும் இருப்பான்,

बालो बालेषु वृद्धेषु वृद्धो धीरेषु धैर्यवान् ।
युवा यौवनवृत्तेषु दुःखितेषु सुदुःखधीः ॥ ३० ॥
धीरधीरुदितानन्दः पेशलः पुण्यकीर्तनः ।
प्राज्ञः प्रसन्नमधुरो दैन्यादपगताशयः ॥ ३१ ॥

"பாலோ பாலேஷு வ்ருத்தேஷு வ்ருத்தோ
தீரேஷு தைர்யவான்
யுவா யௌவன வ்ருத்தேஷு து:கிதேஷு ஸுது:கதீ:" (30)

"தீரதீருதிதானந்த: பேஶல: புண்ய கீர்த்தன:
ப்ராஜ்ஞ: ப்ரஸன்ன மதுரோ தைன்யாதபகதாஶய:" (31)

குழந்தைகளிடத்துக் குழந்தை போலவும், வயது முதிர்ந்தவர்களிடத்து வயோதிகன் போலவும், தீரர்களிடத்துப் பலவானும், வாலிபர்களிடத்து வாலிபனும், துக்கமுள்ளவர்களிடத்து துக்கமுள்ளவன் போலவும் இருப்பவனுய், கம்பீரமான புத்தியுள்ளவனும், தத்துவ ஞானத்தாலுண்டான சந்தோஷமுள்ளவனும், யாவருக்கும் எளியவனும், புனிதமான சொற்களைப்பேசுபவனும், சிறந்த ஞானமுள்ளவனும், சந்தோஷத்தால் இனிய வார்த்தையைப் பேசுகிறவனும், ஏழ்மையில்லாத அபிப்பிராயமுள்ளவனுமான யோகி ஜீவன்முக்தனெனப்படுகின்றான்.

(அ) அப்பியாஸத்தால் பிராணனையும் மனதையும் கெடுத்து மோக்ஷமடைய வேண்டுமெனக் கூறுகின்றார்—

अभ्यासेन परिस्पन्दे प्राणानां क्षयमागते ।
मनः प्रशममायाति निर्वाणमवशिष्यते ॥ ३२ ॥

"அப்யாஸேன பரிஸ்பந்தே ப்ராணானும் க்ஷயமாகதே
மன: ப்ரஶமமாயாதி நிர்வாண மவஶிஷ்யதே" (32)

அப்பியாஸத்தால் பிராணன்களின் அசைவு நீங்கிய பொழுது மனோநாசமுண்டாகின்றது. அம்மனோநாசமே முக்தியாய் மிஞ்சுகின்றது.

(அ) வஸ்து நிச்சயத்தை ஐந்து மந்திரங்களால் கூறுகின்றார்—

यतो वाचो निवर्तन्ते विकल्पकलनान्विताः ।
विकल्पसंक्षयाज्जन्तोः पदं तदवशिष्यते ॥ ३३ ॥

अनाद्यन्तावभासात्मा परमात्मैव विद्यते ।
इत्येतन्निश्चयं स्फारं सम्यग्ज्ञानं विदुर्बुधाः ॥ ३४ ॥

यथाभूतार्थदर्शित्वमेतावद्भुवनत्रये ।
यदात्मैव जगत्सर्वमिति निश्चित्य पूर्णता ॥ ३५ ॥

सर्वमात्मैव कौ दृष्टौ भावाभावौ क्व वा स्थितौ ।
क्व बन्धमोक्षकलने ब्रह्मैवेदं विजृम्भते ॥ ३६ ॥

सर्वमेकं परं व्योम को मोक्षः कस्य बन्धता ।
ब्रह्मेदं बृंहिताकारं बृहद्बृहदवस्थितम् ॥ ३७ ॥

"யதோ வாசோ நிவர்தந்தே விகல்ப கலனான்விதா:
விகல்ப ஸம்க்ஷயாஜ்ஜந்தோ: பதம் ததவஸிஷ்யதே" (33)

"அநாத்யந்தாவபாஸாத்மா பரமாத்மைவ வித்யதே
இத்யேதந்நிஸ்சயம் ஸ்பாரம் ஸம்யக்ஜ்ஞானம்
விதுர்புதா:" (34)

"யதாபூதார்த்த தர்ஸித்வம் ஏதாவத் புவனத்ரயே
யதாத்மைவ ஜகத் ஸர்வமிதி நிச்சித்ய பூர்ணதா" (35)

"ஸர்வ மாத்மைவ கௌ த்ருஷ்டௌ பாவாபாவௌ க்வ
வா ஸ்திதௌ
க்வ பந்தமோக்ஷகலனே ப்ரஹ்மைவேதம் விஜ்ரும்பதே (36)
"ஸர்வமேகம் பரம் வ்யோம கோ மோக்ஷ: கஸ்ய பந்ததா
ப்ரஹ்மேதம் ப்ருஹ்ஹிதாகாரம் ப்ருஹத் ப்ருஹத
வஸ்திதம்" (37)

எதனிடத்திருந்து பேதத்தோற்றத்தோடு கூடிய மன வாக்குகள் திரும்பிவிடுகின்றனவோ, பேத ஞானத்தை நாசம் செய்த ஜீவன்முக்தனுக்கு அந்த பதம் முடிவான நிலையாக மிஞ்சுகின்றது.

ஆதியந்தமற்ற ஸ்வப்பிரகாச பரமான்மாவே உள்ளதாம்—என்ற திடநிச்சயத்தைப் புத்திமான்கள் சிறந்தஞானமென்று அறிகின்றார்கள்.

இதுவே மூன்றுலகத்தின் கண்ணும் அறியத் தகுந்த உண்மைத் தத்துவமாம். இந்த உலகமெல்லாம் ஆன்மாவே என்று நிச்சயித்து பூர்ணத்தன்மையை அடைவதேயாம்.

எல்லாம் ஆன்மாவே. இருப்பு இன்மைகளைக் கண்டவர்கள் எவர்கள்? இவைகள் எங்கே இருந்தன? பந்தமோக்ஷங்களின் ஞானத்தில் என்ன பேசவுளது? பிரம்மம் ஒன்றே எல்லாமாய் விரிகின்றது.

இந்தக்காணப்படும் எல்லாம் சிதாகாசமொன்றேயாம், யாருக்கு எது மோக்ஷமாம்? யாருக்கு எது பந்தமாம்? இந்த பிரம்மமானது பெரிய வடிவுள்ளதாய் பெரியதற்கெல்லாம் பெரியதாய் இருப்பதாம்.

(அ) இவ்வாறு நிச்சயித்து சங்கல்பத்தையொழித்து சொரூபமாத்திரமாய் இருப்பாய் என மூன்று மந்திரங்களால் கூறுகின்றார்—

दूरादस्तमितद्वित्वं भवात्मैव त्वमात्मना।
सम्यगालोकिते रूपे काष्टपाषाणवाससाम् ॥ ३८ ॥
मनागपि न भेदोऽस्ति क्वासि संकल्पनोन्मुखः।
आदावन्ते च संशान्तस्वरूपमविनाशि यत् ॥ ३९ ॥
वस्तूनामात्मनश्चैतत्तन्मयो भव सर्वदा।

"தூராத ஸ்தமிதத்வித்வம் பவாத்மைவ த்வமாத்மநா
ஸம்யகாலோகிதே ரூபே காஷ்ட பாஷாணவாஸஸாம்"(38)

"மனாகபி ந பேதோऽஸ்தி க்வாஸி ஸங்கல்பனோன்முக:
ஆதாவந்தே ச ஸம்சாந்த ஸ்வரூப மவிநாசி யத்" (39)

"வஸ்தூநா மாத்மனஶ்சைதத் தன்மயோ பவ ஸர்வதா (40)

பேதமானது வெகு தூரத்தில் கெட்டொழிந்தது, சத்துவகுணமனதால் நீ ஆத்மாவாகவே இருப்பாய். கட்டை, கல், துணி, இவைகளின் நாமரூபங்களை நன்ருய் ஆராயும் பொழுது அல்ப்பமேனும் பேதமென்பது இல்லை. ஏன் சங்கல்பம் செய்ய முயல்கின்ருய். ஆதியிலும், அந்தத்திலும் சாந்தமே சொரூபமாயும், அழியாததாயும் உள்ளது எதுவோ, அதுவாக ஆவாய். அதுவே விஷயப்பொருள்களுக்கும், ஆன்மாவிற்கும் முடிந்த இடமாம். ஆகையால் நீ எப்பொழுதும் அப்பொருள் வடிவாய் இருப்பாயாக.

(அ) பல்வேறு தோற்றங்களால் ஆன்மாவே விளங்குகின்றதெனக் கூறுகின்ருர்—

द्वैताद्वैतसमुद्भेदैर्जरामरणविभ्रमैः ॥ ४० ॥
स्फुरत्यात्मभिरात्मैव चित्रैरब्धीव वीचिभिः।

"த்வைதா த்வைத ஸமுத்பேதைர் ஜராமரண விப்ரமை:
ஸ்புரத்யாத்மபிரா த்மைவ சித்தை ரப்திவ வீசிபி:" (41)

நானாவித அலைகளால் சமுத்திரம் விளங்குவது போல், துவைதம், அத்வைதம் இவற்றாலுண்டான பேதங்களாலும் ஜரை மரணமாகிய சுழல்களாலும், சங்கல்பங்களாகிய அலைகளாலும், பலவித ஜீவர்களாலும் பிரம்மமொன்றே விளங்குகின்றது.

(அ) திடஞானிக்கு எவ்வித இடையூறுமில்லையென இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

आपत्करञ्जपरशुं परा या निर्वृतेः पदम् ॥ ४१ ॥
शुद्धमात्मान मालिङ्ग्य नित्यमन्तःस्थया धिया ।
यःस्थितस्तं क आत्मेह भोगो बाधयितुं क्षमः ॥ ४२ ॥
कृतस्फार विचारस्य मनोभोगादयोऽरयः ।
मनागपि न भिन्दन्ति शैलं मन्दानिला इव ॥ ४३ ॥

"ஆபத்கரஞ்ஜ பரசும் பரா யா நிர்வ்ருதே: பதம்" (41)
"சுத்த மாத்மான மாலிங்க்ய நித்ய மந்த: ஸ்தயா தியா
ய: ஸ்திதஸ்தம் க ஆத்மேஹ போகோ பாதயிதும் க்ஷம:" (42)
"க்ருதஸ்பார விசாரஸ்ய மனோபோகாதயோऽரய:
மனாகபி ந பிந்தந்தி சைலம் மந்தாநிலா இவ" (43)

ஆபத்தாகிய முள் நிறைந்த மரத்தை வெட்டும் பரசாயுதம் போன்றதும், உயர்ந்த ஆனந்தத்திற்கு ஸ்தானமுமான ஆன்மஸ்வரூபத்தை எப்பொழுதும் அந்தர்முகதிருஷ்டியுள்ள மனதால் சுத்தமான ஆன்மசொரூபத்தை தழுவி எந்த முனிவன் இருக்கின்றானோ, அம்முனிவனை இவ்வுலகின்கண் எந்த

மூடனைக் கெடுக்கச் சமர்த்தனானவன், எந்த போகமானது அவனைக்கெடுக்கும் ஆற்றலுள்ளதாம். நன்றாக ஆன்ம அனான்ம விசாரம் செய்த திடஞானியை, மனம் போகமுதலிய சத்துருக்கள் மலையைத் தென்றல்காற்று அசைக்கமுடியாதது போல் சிறிதும் அசைப்பன அல.

(அ) திடவிசாரமுள்ள ஞானி முக்தன் எனக் கூறுகின்றார்—

नानात्वमस्ति कलनासु न वस्तुतोऽन्त-
र्नानाविधासु सरसीषु जलादिवान्यत्
इत्येकनिश्चयमयः पुरुषो विमुक्तः
इत्युच्यते समवलोकित सम्यगर्थः ॥ ४४ ॥

" நாநாத்வமஸ்தி கலானாஸு ந வஸ்துதோऽந்தர்
நானாவிதாஸு ஸரஸீஷு ஜலாதிவான்யத்
இத்யேக நிஶ்சயமய: புருஷோ விமுக்த:
இத்யுச்யதே ஸமவலோகித ஸம்யகர்த்த: " (44)

பல்வேறு நாமரூபமுள்ள நதிகளில் ஜலத்திற்குப் புறம்பாய் எதுவும், இல்லாததுபோல் நாமரூப விஷயங்களில் பலவிதத்தோற்றம் இருப்பதாயினும், உண்மையாக உள்ளே ஆன்மாவினிடத்து எவ்விதத் தோற்றமுமில்லை, என்று நன்றாய் விசாரித்து உண்மையில் நிலைபெற்றவனும் திடநிச்சயமுள்ளவனுமான புருஷன் முக்தனென்று சொல்லப்படுகின்றான்.

॥ ஓம் சாந்தி: ॥

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

|| अथ तृतीयोऽध्यायः ||

# மூன்றாவது அத்தியாயம்.

(அ) ரிபுமுனிவரை நிதாகர் விதேகமுக்தியின் இலக்கணம் கேட்கின்றார்—

विदेहमुक्तेः किं रूपं तद्वान्को वा महामुनिः ।
कं योगं समुपस्थाय प्राप्तवान्परमं पदम् ॥ १ ॥

"விதேஹமுக்தே: கிம் ரூபம் தத்வான் கோவா மஹாமுனி:
கம் யோகம் ஸமுபஸ்தாய ப்ராப்தவான் பரமம் பதம்" (1)

விதேஹ முக்தியின் இலக்ஷணம் யாது? அந்த விதேக முக்தியடைந்த மஹாபுருஷன் யார்? எந்த யோகத்தை அப்யாஸம் செய்து மேலான பரம பதத்தை அடைந்தார்.

(அ) பாண்டவ்யர் என்னும் ஜீவன்முக்தனின் வரலாறு கூறுகின்றார்—

सुमेरोर्वसुधापीठे पाण्डव्यो नाम वै मुनिः ।
कौण्डिन्यात्तत्त्वमास्थाय जीवन्मुक्तो भवत्यसौ ॥ २ ॥

" சுமேரோர்வசுதாபீடே பாண்டவ்யோ நாம வை முனி:
கௌண்டின்யாத் தத்வமாஸ்தாய ஜீவன்முக்தோ
பவத்யஸௌ " (2)

மேருமலையின் தாழ்வரையில் பாண்டவ்யர் என்று பெயர்பெற்ற முனிவர் இருந்தார். அவர் கௌண்டின்ய மஹரிஷியிடம் இருந்து தத்துவ ஞானத்தைப்பெற்று ஜீவன்முக்தி நிலையை அடைந்தவரானார்.

जीवन्मुक्तिदशां प्राप्य कदाचिद्ब्रह्मवित्तमः ।
सर्वेन्द्रियाणि संहर्तुं मनश्चक्रे महामुनिः ॥ ३ ॥

“ ஜீவன்முக்திதபாம் ப்ராப்ய கதாசித் ப்ரஹ்மவித்தம:
ஸர்வேந்த்ரியாணி ஸம்ஹார்தும் மனஶ்சக்ரே மஹாமுனி:(3)

பிரம்மத்தை அறிந்தவருள் தலைசிறந்த அம்முனிவர் ஜீவன்முக்தியை அடைய விரும்பி ஒரு காலத்தில் எல்லா இந்திரியங்களையும் கெடுக்கவேண்டுமென்று மனதில் நிச்சயித்தார்.

அ) பாண்டவ்யர் அப்யாஸத்தால் ப்ரத்யாஹாரம் செய்ததை ஏழு மந்திரங்களால் கூறுகின்றார்—

बद्धपद्मासनस्तिष्ठन्नर्धोन्मीलितलोचनः ।
बाह्यानाभ्यन्तरांश्चैव स्पर्शान्परिहरञ्छनैः ॥ ४ ॥

“ பத்தபத்மாஸனஸ்திஷ்டன்னர்த்தோன்மீலிதலோசன:
ப்ராஹ்யானாப்யந்தராஞ்ஶ்சைவ ஸ்பர்ஶான்பரிஹரஞ்சனை:”(4)

அம்முனிவர் பத்தபத்மாசனத்தில் அமர்ந்தவரும் பாதி திறந்த கண்களையுடையவருமாய் வெளியிலும் உள்ளிலுமுள்ள சப்தஸ்பரிச முதலிய விஷயங்களை மெதுவாக நீக்கினவராய்.

ततः स्वमनसः स्थैर्यं मनसा विगतैनसा ।
अहो नु चञ्चलमिदं प्रत्याहृतमपि स्फुटम् ॥ ५ ॥

“ தத: ஸ்வமனஸ: ஸ்தைர்யம் மனஸா விகதைநஸா
அஹோ நு சஞ்சலமிதம் ப்ரத்யாஹ்ருதமபி ஸ்புடம்” (5)

பிறகு மலவிக்ஷேபங்களற்ற சுத்த மனதால் அசுத்த மனத்தை உறுதியாகத் தடுத்து உண்முகமாக திருப்பப் பட்டதாயினும் இந்த மனதின் சஞ்சலம் மிக்கவாச்சர்யமாய் இருக்கிறது.

पटाद्घटमुपायाति घटाच्छकटमुत्कटम् ।
चित्तमर्थेषु चरति पादपेष्विव मर्कटः ॥ ६ ॥

" படாத் கடமுபாயாதி கடாச்சகடமுத்கடம்
சித்தமர்த்தேஷு சரதி பாதபேஷ்விவ மர்க்கட:" (6)

குரங்கு மரக்கிளைகளில் தாவுவதுபோல் சித்தமானது படத்தைப்பற்றிச் செல்கின்றது. அதைவிடுத்து குடத்தைப் பற்றிச் செல்கின்றது. அதையும் விடுத்து தலைகீழாய் உருளும் சக்கிரத்தைப்பற்றுகின்றது. இவ்வாறு விஷயங்களில் செல்கின்றது.

पञ्च द्वाराणि मनसा चक्षुरादीन्यमून्यलम् ।
बुद्धीन्द्रियाभिधानानि तान्येवालोकयाम्यहम् ॥ ७ ॥

" பஞ்ச த்வாராணி மனஸா சக்ஷுராதீன்யமூன்யலம்
புத்தீந்த்ரியாபிதானி தான்யேவாலோகயாம்யஹம் " (7)

மனதோடு ஐந்து துவாரமுள்ள இந்த இந்திரியக்கூட்டங்களின் உறவுபோதும் இனி நான் புத்தீந்திரியங்களென்று பெயருள்ளவைகளான அந்த அகக்கரணங்களையே நிரோதம் செய்ய முயலுகின்றேன்.

हन्तेन्द्रियगणा यूयं त्यजताकुलतां शनैः ।
चिदात्मा भगवान्सर्वसाक्षित्वेन स्थितोऽस्म्यहम् ॥ ८ ॥

" ஹந்தேந்த்ரியகணா யூயம் த்யஜதாகுலதாம் ஶனை:
சிதாத்மா பகவான் ஸர்வஸாக்ஷித்வேன
ஸ்திதோऽஸ்ம்யஹம் " (8)

ஆச்சர்யம்! ஏ இந்திரியக் கூட்டங்களே! நீங்கள் மெதுவாக விஷய நீக்கத்தாலுண்டான சோர்வை விட்டுவிடுங்கள். ஆறு ஐஶ்வர்யமுள்ள சிதாத்மாவான நான் எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருக்கின்றேன்.

तेनात्मना बहुज्ञेन निर्ज्ञाताश्चक्षुरादय ।
परिनिर्वामि शान्तोऽस्मि दिष्ट्यास्मि विगतज्वरः ॥ ९ ॥

“ தேனாத்மனா பஹுஜ்ஞேன நிர்ஜ்ஞாதாஸ்சக்ஷுராதய:
பரிநிர்வாமி ஶாந்தோऽஸ்மி திஷ்ட்யாஸ்மி விகதஜ்வர: ” (9)

எல்லாவற்றையும் அறியும் சாக்ஷிவடிவான என்னால் நேத்திரம் முதலிய இந்திரியங்கள் நன்றாய் அறியப்பட்டன. ஆகையால் தைவகதியாக நான்கு பக்கத்திலுமுள்ள விஷயப் பற்றில் நின்றும் நீங்கினேன். இந்திரியங்களின் நீக்கத்தால் ஓய்வுபெற்றேன். அகக்கரண நிரோதத்தால் ஆசையாலுண்டாகும் தாபமற்றேன்

(அ) பிறகு பாண்டவ்யர் தனது அனுபவங்களைக் கூறுகின்றார் —

स्वात्मन्येवावतिष्ठेऽहं तुर्यरूपपदेऽनिशम् ।
अन्तरेव शशामास्य क्रमेण प्राणसन्ततिः ॥ १० ॥

“ ஸ்வாத்மன்யேவாவதிஷ்டேऽஹம் துர்யரூபபதேऽநிஶம்
அந்தரேவ ஶஶாமாஸ்ய க்ரமேண ப்ராணஸந்ததி: ” (10)

நான் எப்பொழுதும் துர்யவடிவான எனதான்மாவினிடத்திலேயே நிலைத்தவனாகின்றேன், ஆகையால் என்னுடைய பிராணகதியானது மெதுவாக ஆன்மாவினிடத்திலேயே அடங்கிவிட்டது.

ज्वालाजालपरिस्पन्दो दग्धेन्धन इवानलः ।
उदितोऽस्तं गत इव ह्यस्तं गत इवोदितः ॥ ११ ॥

“ ஜ்வாலாஜாலபரிஸ்பந்தோ தக்தேந்தன இவானல:
உதிதோऽஸ்தம் கத இவ ஹ்யஸ்தங்கத இவோதித: ” (11)

அக்னியின் சுவாலைகள் விறகிற்பற்றிய பொழுது உண்டாகி விறகை எரித்தபின் அக்னியில் அடங்கி அக்கினியும் அணைந்து விடுவதுபோல், மனமும் விஷயவாசையுள்ள போது உண்டாகியும் விஷயவாசை நீங்கியபொழுது ஆன்மாவில் சங்கலப வடிவத்தை இழந்து மாய்கிறது.

समः समरसाभासस्तिष्ठामि स्वच्छतां गतः ।
प्रबुद्धोऽपि सुषुप्तिस्थः सुषुप्तिस्थः प्रबुद्धवान् ॥ १२ ॥

" ஸம: ஸமரஸாபாஸ: திஷ்டாமி ஸ்வச்சதாம் கத:
ப்ரபுத்தோऽபி சுஷுப்திஸ்த: சுஷுப்திஸ்த:
ப்ரபுத்தவான் " (12)

எங்கும் சமமாயுள்ளவனும் எங்கும் சமமாய் விளங்குகின்றவனுமான நான் ஆன்மாவில் தெளிவையடைந்தவனாய் இருக்கின்றேன். ஆசையால் இந்திரியக்கூட்டம் வெளி விஷயங்களில் விழிப்புள்ளது போல் காணப்படினும் தூங்குகிறவனும், இந்திரியக்கூட்டம் செயலற்று தூங்குவதுபோல் காணப்படினும் ஆன்மாவில் விழிப்புள்ளவனுமாய் இருக்கின்றேன்.

तुर्यमालम्ब्य कायान्तस्तिष्ठामि स्तम्भितस्थितिः ।
सबाह्याभ्यन्तरान्भावान्स्थूलान्सूक्ष्मतरानपि ॥ १३ ॥

" தூர்யமாலம்ப்ய காயாந்தஸ்திஷ்டாமி ஸ்தம்பிதஸ்திதி:
ஸபாஹ்யாப்யந்தரான் பாவான் ஸ்தூலான் ஸூக்ஷ்
மதரானபி " (13)

மூன்று சரீரத்திலும் சாட்சி வடிவாயுள்ள துரியத்தை ஆதாரமாகப்பெற்று தம்பம்போன்று அசைவற்று நிற்கின்றேன். உள்ளிலும், வெளியிலுமுள்ள தூலம் சூக்குமம் அதிசூக்குமமாயுள்ள பாவனைகளையும்

त्रैलोक्यसंभवांस्त्यक्त्वा संकल्पैकविनिर्मितान् ।
सह प्रणवपर्यन्तदीर्घनिःस्वनतन्तुना ॥ १४ ॥

“ த்ரைலோக்யஸம்பவாம்ஸ்த்யக்த்வா ஸங்கல்பைக
விநிர்மிதான்
ஸஹ ப்ரணவபர்யந்ததீர்க்கநிஸ்வனதந்துநா ” (14)

சங்கல்ப மாத்திரத்தால் உண்டுபண்ணப்பட்ட மூவுலக விஷயங்களையும் பிரணவ மிறுதியாகச் சொல்லப்பட்ட மந்திரங்களின் நீண்ட தொனியோடு கூட விடுத்து.

जहाविन्द्रियतन्मात्रजालं खग इवानिलः ।
ततोऽङ्गसंविदं स्वच्छां प्रतिभासमुपागताम् ॥ १५ ॥

“ ஜஹாவிந்திரியதன்மாத்ரஜாலம் கக இவாநில:
ததோऽங்க ஸம்விதம் ஸ்வச்சாம் ப்ரதிபாஸ முபாகதாம்(15)

அம்முனிவன் காற்று ஆகாயத்தில் ஓய்ந்து அடங்குவதுபோல் ஸூக்ஷ்ம இந்திரியங்களாகிய வலையை விடுத்தான். அங்ஙனம் விடுத்ததால் தூய்மையானதும் ஒவ்வொரு இந்திரியங்களையும் விளக்கவடிவாய் அடைந்ததுமான சரீரத்தினுள்ளேயுள்ள ஞானவடிவ ஆன்மாவையடைந்தான்

सद्योजातशिशुज्ञानं प्राप्तवान्मुनिपुङ्गवः ।
जहौ चित्तं चैत्यदशां स्पन्दशक्तिमिवानिलः ॥ १६ ॥

“ ஸத்யோஜாதசிசுஜ்ஞானம் ப்ராப்தவான் முனிபுங்கவ:
ஜஹௌ சித்தம் சைத்யதசாம் ஸ்பந்தசக்தி மிவாநில: ”
(16)

காற்று அசைக்குந் தொழிலை விடுத்திருப்பதுபோல் சித்தம் விஷய சிந்தனையை விடுத்தது. பிறகு அம்முனிவரின் தலைவன் அன்று பிறந்த சிசுவின் ஞானத்தைப்போன்ற நிலையை அடைந்தான்.

चित्सामान्यमथासाद्य सत्तामात्रात्मकं ततः ।
सुषुप्तपदमालम्ब्य तस्थौ गिरिरिवाचलः ॥ १७ ॥

" சித்ஸாமன்யமதாஸாத்ய ஸத்தாமாத்ராத்மகம் தத:
சுஷுப்தபதமாலம்ப்ய தஸ்தௌ கிரிரிவாசல:" (17)

பிறகு சித்தின் பொது நிலையைப்பெற்றும், அதன் பிறகு கேவல சத்வடிவத்தையடைந்தும், பிறகு நனவிற் சுழுத்தி நிலையை அடைந்தும், மலைபோன்று அசைவற்று இருந்தான்.

सुषुप्तस्थैर्यमासाद्य तुर्यरूपमुपाययौ ।
निरानन्दोऽपि सानन्दः सच्चासच्च बभूव सः ॥ १८ ॥

" சுஷுப்தஸ்தைர்ய மாஸாத்ய துர்யரூபமுபாயயௌ
நிரானந்தோZபி ஸானந்த: ஸச்சாஸச்ச பபூவ ஸ:" (18)

பிறகு நனவிற்சுழுத்தி நிலையில் திடானுபவத்தை அடைந்து நான்காம் பூமியை அடைந்தான். பிறகு அம்முனிவன் ஆனந்தமுற்றவனும், ஆனந்தமற்றவனும், சத்தாயும், அசத்தாயும் இருந்தான்.

ततस्तु संबभूवासौ यद्गिरामप्यगोचरः ।
यच्छून्यवादिनां शून्यं ब्रह्म ब्रह्मविदां च यत् ॥ १९ ॥

" ததஸ்து ஸம்பபூவாஸௌ யத் கிராம்யகோசர:
யச்சூன்யவாதினாம் ஶூன்யம் ப்ரஹ்ம ப்ரஹ்மவிதாம் ச
யத்" (19)

பிறகு அம்முனிவன் எது வாக்குகளுக்கும் எட்டாத நிலையோ அதுவாக ஆனன். எந்த வத்துவானது சூன்ய வாதிகளுக்குச் சூன்யமாயும், பிரம்மவாதிகளுக்கு பிரம்ம மாயும்.

विज्ञानमात्रं विज्ञानविदां यदमलात्मकम् ।
पुरुषः सांख्यदृष्टीनामीश्वरो योगवादिनाम् ॥ २० ॥

" விஜ்ஞானமாத்ரம் விஜ்ஞானவிதாம் யதமலாத்மகம்
புருஷ: ஸாங்க்ய த்ருஷ்டீனாமீப்வரோ யோகவாதினாம் "
(20)

அமலமான எவ்வத்துவானது விஞ்ஞானவாதிகளுக்கு விஞ்ஞானமாத்திரமாயும், தத்துவங்களை எண்ணிக்கையிட்டுக் காணும் சாங்கியர்களுக்குப்புருஷனையும், யோகவாதிகளுக்கு ஈப்வரனையும்.

शिवः शैवागमस्थानां कालः कालैकवादिनाम् ।
यत्सर्वशास्त्रसिद्धान्तं यत्सर्वहृदयानुगम् ॥ २१ ॥

" சிவ: சைவாகமஸ்தானாம் கால: காலைகவாதினாம்
யத்ஸர்வசாஸ்த்ரஸித்தாந்தம் யத்ஸர்வஹ்ருதயானுகம்"(21)

சைவாகமத்தைக் கொண்டவர்களுக்குச் சிவனையும், காலத்தைப் பிரமாணமாகக் கொண்டவர்களுக்குக் காலமாயும், எது எல்லா சாஸ்திரத்தின் முடிந்த பொருளாமோ, எந்தத் தத்துவம் எல்லாருடைய இருதயத்தையும் அடைந்துளதோ.

यत्सर्वं सर्वगं वस्तु यत्तत्त्वं तदसौ स्थितः ।
यदनुक्तमनिष्पन्दं दीपकं तेजसामपि ॥ २२ ॥
स्वानुभूत्यैकमानं च यत्तत्त्वं तदसौ स्थितः ।

" யத் ஸர்வம் ஸர்வகம் வஸ்து யத் தத்வம் ததஸௌ ஸ்தித:
யதநுக்தமனிஷ்பந்தம் தீபகம் தேஜஸாமபி
ஸ்வாநுபூத்யைகமானஞ் ச யத் தத்வம் ததஸௌ ஸ்தித: "
(22)

எந்த வத்து எல்லாவற்றையும் அடைந்து எல்லமா யிருப்பதோ, எது உண்மைத் தத்துவமோ அதுவாக அம் முனிவன் ஆனான். எது வாக்குகளால் சொல்ல முடியா ததோ, எது சலனமற்றதோ, சூரியன், சந்திரன், விளக்கு முதலிய தேஜஸுகளுக்கும் தேஜஸாய் எது இருப்பதா மோ, எது தனது அனுபவமொன்றினால் மாத்திரம் அறியத் தகுந்த உண்மைத் தத்துவமோ, அதுவாக ஆனான்.

यदेकं चाप्यनेकं च साञ्जनं च निरञ्जनम्।
यत्सर्वं चाप्यसर्वं च यत्तत्त्वं तदसौ स्थितः ॥ २३ ॥

" யதேகம் சாப்யனேகம் ச ஸாஞ்ஜனம் ச நிரஞ்ஜனம்
யத் ஸர்வம் சாப்யஸர்வம் ச யத்தத்வம் ததஸௌ ஸ்தித: "
(23)

எது ஒன்றாயினும் அனேகமாயும், குற்றமுள்ளதா யினும், குற்றமற்றதாயும், எது எல்லாமாயும், எல்லாமன்று யும் உள்ள தத்துவம் எதுவோ; அதுவாக அம்முனிவன் இருந்தான்.

(அ) இவ்வித அனுபவங்களைப்பெற்று மோக்ஷமடைந் தனர் எனக் கூறுகின்றார்—

अजममरमनाद्यमाद्यमेकं
पदममलं सकलं च निष्कलं च

स्थित इति स तदा नभःस्वरूपा
दपि विमलस्थितिरीश्वरः क्षणेन ॥ २४ ॥

" அஜமமரமனுத்ய மாத்ய மேகம்
பதமமலம் ஸகலம் ச நிஷ்களம் ச
ஸ்தித இதி ஸ ததா நப:ஸ்வரூபா
தபி விமலஸ்திதிரீஶ்வர: க்ஷணேந " (24)

பிறப்பற்றதும், இறப்பற்றதும் தனக்கு முதலில் ஒன்றை உடைத்தாகாததும், தானே முதன்மையானதும், மலமற்றதும், ஸகுண வடிவானதும், நிர்குண வடிவானதுமாகவுள்ள எந்த பதத்தில் இருந்தானோ, அந்தபதத்தில் எப்பொழுதும் ஆகாயத்தைக் காட்டிலும் தூய்மையுள்ளவனும் ஒரு கணநேரத்தில் அந்தக் கௌண்டின்ய முனிவன் ஈஶ்வர சொரூபத்தில் கலந்தவனானன்.

॥ ஓம் சாந்தி: ॥

மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

## ॥ अथ चतुर्थोऽध्यायः ॥
## நான்காவது அத்தியாயம்.

(அ) ருபுமுனிவரை நிதாகர் ஜீவன்முக்தரின் இலக்கணம் வினவுகின்றார்—

जीवन्मुक्तस्य किं लक्ष्म ह्याकाशगमनादिकम् ।
तथा चेन्मुनिशार्दूल तत्र नैव प्रलक्ष्यते ॥ १ ॥

" ஜீவன்முக்தஸ்ய கிம் லக்ஷ்ம ஹ்யாகாச கமனாதிகம்
ததாசேன் முனிசார்தூல தத்ர நைவ ப்ரலக்ஷ்யதே " (1)

ஏ முனிவர் தலைவ! ஜீவன்முக்தனுடைய லக்ஷணம் யாது? ஆகாசகமன முதலியவற்றைச் சொல்வோமாயின் அவை ஆன்மாவை அறிந்த ஜீவன்முக்தனிடம் காணப்படவில்லையே.

(அ) ருபுமுனிவர் விடைகூறுகின்றார்—

अनात्मविद्मुक्तोऽपि नभोविहरणादिकम् ।
द्रव्यमन्त्रक्रियाकालशक्त्याप्नोत्येव स द्विजः ॥ २ ॥

" அனாத்மவிதமுக்தோऽபி நபோவிஹரணாதிகம்
த்ரவ்யமந்த்ர க்ரியாகால சக்த்யாப்னோத்யேவ ஸ த்விஜ: " (2)

ஆத்மாவை அறியாதவனும் ஜீவன்முக்தி அடையாதவனுமான புருஷனும் திரவியம், மந்திரம், கிரியை, காலம், சக்தி இவற்றாலேயே ஆகாசகமன முதலியவற்றை அடைந்துள்ளான்.

नात्मज्ञस्यैष विषय आत्मज्ञो ह्यात्ममात्रदृक् ।
आत्मनात्मनि संतृप्तो नाविद्यामनुधावति ॥ ३ ॥

" நாத்மஜ்ஞஸ்யைஷ விஷய ஆத்மஜ்ஞோ ஹ்யாத்ம மாத்ரத்ருக்
ஆத்மனாத்மனி ஸந்த்ருப்தோ நாவித்யா மனுதாவதி " (3)

ஆன்மாவையறிந்த முக்தனுக்கு இந்த ஆகாசகமன முதலியவை அடையத்தகுந்த விஷயமல்ல. ஏனெனில், ஆத்மஞானி ஆன்மாவொன்றிலேயே கருத்துள்ளவனாகின்றான். ராகத்துவேஷாதி மலமற்ற சுத்தமனத்தால் தனது உண்மை சொரூபத்தில் திருப்தியுள்ளவன் மீண்டும் அஞ்ஞானமே வடிவாயுள்ள சித்தியை விரும்பி ஓடுவதில்லை.

ये ये भावाः स्थिता लोके तानविद्यामयान्विदुः ।
त्यक्ताविद्यो महायोगी कथं तेषु निमज्जति ॥ ४ ॥

"யே யே பாவா: ஸ்திதா லோகே தானவித்யாமயான் விதுः
த்யக்தாவித்யோ மஹாயோகீ கதம் தேஷு நிமஜ்ஜதி" (4)

உலகத்தில் எந்த எந்த நாமரூபவடிவமான பாவபதார்த்தங்கள் உள்ளனவோ, அவற்றை அவித்தையின் சொரூபமாகவே அறிகின்றார்கள் அவ்வாறு அவித்யை விடுத்த பெரியயோகி மீண்டும் எவ்வாறு அவற்றில் மூழ்குவன்.

यस्तु मूढोऽल्पबुद्धि र्वा सिद्धिजालानि वाञ्छति ।
स सिद्धिसाधनैर्योगैस्तानि साधयति क्रमात् ॥ ५ ॥

" யஸ்து மூடோऽல்ப புத்திர்வா ஸித்தி ஜாலானி வாஞ்சதி
ஸ: ஸித்தி ஸாதனைர் யோகைஸ் தானி ஸாதயதி க்ரமாத் " (5)

மூடனும் அல்பபுத்தியுள்ளவனுமே சித்திக்கூட்டங்களை விரும்புவன். அவன் சித்திக்குரிய சாதனங்களாலும் யோகப் பயிற்சியாலும் அவைகளை முறையாக அடைகின்றான்.

द्रव्यमन्त्रक्रियाकालयुक्तयः साधुसिद्धिदाः ।
परमात्मपदप्राप्तौ नोपकुर्वन्ति काश्चन ॥ ६ ॥

" த்ரவ்ய மந்த்ர க்ரியாகால யுக்தய: ஸாதுஸித்திதா:
பரமாத்ம பதப்ராப்தௌ நோபகுர்வந்தி காஸ்சந " (6)

திரவியம் மந்திரம் கிரியை காலம் யுக்தி இவைகள் நன்றாகச் சித்தியைக் கொடுப்பனவாம். ஆனால் பரமான்ம பதத்தையடையும் விஷயத்தில் இவற்றுள் ஒன்றேனும் ஒருதவியையும் செய்வது அன்று.

यस्येच्छा विद्यते काचित्सा सिद्धिं साधयत्यहो ।
निरिच्छोः परिपूर्णस्य नेच्छा संभवति क्वचित् ॥ ७ ॥

" யஸ்யேச்சா வித்யதே காசித் ஸா ஸித்திம் ஸாதயத்யஹோ
நிரிச்சோ: பரிபூர்ணஸ்ய நேச்சா ஸம்பவதி க்வசித் " (7)

எவனுக்கு யாதானுமொரு சித்தி விஷயகமான இச்சை உளதாமோ, அந்த இச்சையானது சித்தியைச்சாதிக்கின்றது. ஆச்சரியம், ஆன்மாவில் நிறைவுபெற்று இச்சையற்ற முக்தனுக்கு எந்த சித்தியிலும் இச்சையுண்டாவதில்லை.

सर्वेच्छाजालसंशान्तावात्मलाभो भवेन्मुने ।
स कथं सिद्धिजालानि नूनं वाञ्छत्यचित्तकः ॥ ८ ॥

'ஸர்வேச்சா ஜாலஸம்ஶாந்தா வாத்மலாபோ பவேன்முனே
ஸ கதம் ஸித்தி ஜாலானி நூனம் வாஞ்சத்யசித்தக: " (8)

ஏ முனிவனே ! எல்லா வாசைக் கூட்டங்களும் ஒழிந்த பொழுதே ஆன்மாவின் அடைவு ஏற்படுவதாகும். அவ்வாறு இருக்க, சித்தநாசஞ்செய்த அந்த ஜீவன்முக்தன் எவ்வாறு சித்திக்கூட்டங்களை இச்சிப்பான்? உண்மையில் இச்சிக்கவே மாட்டான் என்பதாம்.

अपि शीतरुचावर्के सुतीक्ष्णेऽपीन्दुमण्डले ।
अप्यधः प्रसरत्यग्नौ जीवन्मुक्तो न विस्मयी ॥ ९ ॥

" அபி பீத ருசாவர்க்கே ஸுதீக்ஷ்ணேZபீந்து மண்டலே
அப்யத: ப்ரஸரத்யக்னௌ ஜீவன்முக்தோ ந விஸ்மயீ " (9)

இத்தகைய ஜீவன்முக்தன் சூர்யன் சீத கிரணங்களைப் பரப்பினும், சந்திரன் உஷ்ண கிரணங்களைப் பரப்பினும், அக்கினி கீழ் நோக்கி எரியினும், ஆச்சரியப்படுகிறதில்லை.

अधिष्ठाने परे तत्वे कल्पिता रज्जुसर्पवत् ।
कल्पिताश्चर्यजालेषु नाभ्युदेति कुतूहलम् ॥ १० ॥

" அதிஷ்டானே பரே தத்வே கல்பிதா ரஜ்ஜுஸர்பவத்
கல்பிதாப்சர்ய ஜாலேஷு நாப்யுதேதி குதூஹலம் " (10)

கயிற்றினிடத்தில் மித்தையான சர்ப்பம் காணப்படுவது போல், எல்லாவற்றிற்கும் ஆதாரமான பரமான்ம தத்துவத்தில் நாமரூபப்பிரபஞ்சங்கள் கற்பனையாகக் காணப்படுகின்றன. இத்தகைய கற்பித விசித்திரத் தோற்றங்களில் ஜீவன் முக்தனுக்குச் சந்தோஷமுண்டாவதில்லை.

ये हि विज्ञातविज्ञेया वीतरागा महाधियः ।
विच्छिन्नग्रन्थयः सर्वे ते स्वतन्त्रास्तनौ स्थिताः ॥ ११ ॥

" யே ஹி விஜ்ஞாத விஜ்ஞேயா வீதராகா மஹாதிய:
விச்சின்ன க்ரந்தய: ஸர்வே தே ஸ்வதந்த்ராஸ்
தனௌ ஸ்திதா : " (11)

பேரறிவுள்ளவர்களாய் அறியவேண்டியதை அறிந்தவர்களும், ஆசையை விடுத்தவர்களும், இருதயத்திலுள்ள பிரம்ம கிரந்தி விஷ்ணு கிரந்தி ருத்திர கிரந்தியாகிய முடிச்

சுக்களை நாசம் செய்தவர்களும் ஆன அவர்களெல்லாம், சரீரத்தில் சுதந்திரர்களாய் இருக்கின்றார்கள்.

सुखदुःखदशाधीरं साम्यान्न प्रोद्धरन्ति यम् ।
निश्वासा इव शैलेन्द्रं चित्तं तस्य मृतं विदुः ॥ १२ ॥

" சுகதுःகதபாதீரம் ஸாம்யாந்ந ப்ரோத்தரந்தி யம்
நிப்வாஸா இவ பைலேந்த்ரம் சித்தம் தஸ்ய ம்ருதம் விது: "
(12)

மேருமலையை மூச்சுக் காற்றுக்கள் எவ்வாறு அசைக்கும் சக்தி யற்றனவோ, அது போல் எந்தத் தீரபுருஷனை சுகதுக்கங்களின் செயல்கள் சமீபத்தில் இருப்பனவாயினும் அசைக்கும் ஆற்றலற்றனவாமோ, அந்த புருஷனின் சித்தம், இறந்ததாய் அறிகின்றார்கள்.

आपत्कार्पण्यमुत्साहो मदो मान्द्यं महोत्सवः ।
यं नयन्ति न वैरूप्यं तस्य नष्टं मनो विदुः ॥ १३ ॥

" ஆபத் கார்பண்ய முத்ஸாஹோ மதோ மாந்த்யம்
மஹோத்ஸவ:
யம் ந யந்தி ந வைரூப்யம் தஸ்ய நஷ்டம் மனோ விது: "(13)

ஆபத்தும் அதைர்யமும் மனதிலுள்ள சந்தோஷமும், மதமும் சோம்பலும், உலகத்தில் செய்யும் பெரிய உற்சவங்களும் எந்த ஞானியை விகாரமடையச் செய்வதில்லையோ, அவனது மனம் இறந்ததாய் அறிகின்றார்கள்.

द्विविधश्चित्तनाशोऽस्ति सरूपोऽरूप एव च ।
जीवन्मुक्तौ सरूपः स्यादरूपोऽदेहमुक्तिगः ॥ १४ ॥

" த்விவிதப்சித்த நாபோऽஸ்தி ஸரூபோऽரூப ஏவச
ஜீவன்முக்தௌ ஸரூப: ஸ்யா தரூபோऽதேஹமுக்திக: "(14)

சொரூபநாசம், அரூபநாசம் எனச் சித்தநாசம் இரு வகைத்து அவற்றுள் ஜீவன்முக்தனிடத்தில் சொரூபநாசமும், விதேகமுக்தனிடம் அரூபநாசமும் உள்ளதாகிறது.

**चित्तसत्तेह दुःखाय चित्तनाशः सुखाय च ।**
**चित्तसत्तां क्षयं नीत्वा चित्तं नाशमुपानयेत् ॥ १५ ॥**

" சித்தஸத்தேஹ து:காய சித்தநாஶ: ஸுகாய ச
சித்தஸத்தாம் க்ஷயம் நீத்வா சித்தம் நாஶமுபாநயேத்"(15)

ஈண்டு சித்தமிருப்பது துக்கத்தின் பொருட்டாம், சித்த நாசம் சுகத்தின் பொருட்டாம், ஆகையால் சித்தத்திலுள்ள சிந்தனுவடிவத்தை நாசம் செய்து சித்தத்தை அடியோடு கெடுக்கவேண்டும்.

**मनस्तां मूढतां विद्धि यदा नश्यति सानघ ।**
**चित्तनाशाभिधानं हि तत्स्वरूपमितीरितम् ॥ १६ ॥**

" மனஸ்தாம் மூடதாம் வித்தி யதா நஶ்யதி ஸாநக
சித்தநாஶாபிதானம் ஹி தத்ஸ்வரூப மிதீரிதம் " (16)

ஏ நோயற்றவனே ! விஷய சிந்தனுவடிவ மனத்தை மூடம் என்று அறிவாய். அத்தகைய மனதின் மூடத் தன்மை எப்பொழுது கெடுகிறதோ, அதுவே சித்தத்தின் நாசமென்று அறிவாய். அதுவே தனது இயற்கையான சொரூபமென்று அறிவாய்.

**मैत्र्यादिभिर्गुणैर्युक्तं भवत्युत्तमवासनम् ।**
**भूयो जन्मविनिर्मुक्तं जीवन्मुक्तस्य तन्मनः ॥ १७ ॥**

" மைத்ர்யாதிபிர் குணைர்யுக்தம் பவத்யுத்தமவாஸநம்
பூயோ ஜந்மவினிர்முக்தம் ஜீவன்முக்தஸ்ய தன்மன: " (17)

மைத்ரி, கருணை, முதிதை, உபேக்ஷை என நான்கு குணங்களோடு கூடிய மனம் நல்ல பழக்கமுள்ளதாம். அந்த நல்ல வாசனையுள்ள மனமே ஜீவன்முக்தனுக்கு இனிவரும் பிறவியைக்கெடுப்பதாகின்றது.

सरूपोऽसौ मनोनाशो जीवन्मुक्तस्य विद्यते ।
निदाघारूपनाशस्तु वर्तते देहमुक्तिके ॥ १८ ॥

"ஸரூபோऽஸௌ மனோ நாசோ ஜீவன்முக்தஸ்ய வித்யதே
நிதாகாரூப நாசஸ்து வர்ததே தேஹமுக்திகே" (18)

ஏ பாவமற்றவனே! ஜீவன்முக்தனுடைய அந்த மனமானது சொரூபநாசமுள்ளதாக இருக்கிறது. விதேகமுக்தனிடத்தில் மனதின் அரூபநாசமுளது.

विदेहमुक्त एवासौ विद्यते निष्कलात्मकः ।
समग्राग्र्यगुणाधारमपि सत्वं प्रलीयते ॥ १९ ॥

"விதேஹமுக்த ஏவாஸௌ வித்யதே நிஷ்களாத்மக:
ஸமக்ராக்ர்யகுணாதாரமபி ஸத்வம் ப்ரலீயதே" (19)

விதேகமுக்தன் ஒருவனே சங்கல்ப விகல்பமற்றவனாய் இருக்கின்றான். எல்லா வஸ்துக்களின் முதன்மையான குணங்களுக்கு ஆதாரமான அந்தக்கரண மிருப்பினும் ஆன்மாவினிடத்திலேயே இலயத்தையடைகின்றது.

विदेहमुक्तौ विमले पदे परमपावने ।
विदेहमुक्तिविषये तस्मिन्सत्त्वक्षयात्मके ॥ २० ॥

चित्तनाशे विरूपाख्ये न किंचिदिह विद्यते ।
न गुणा नागुणास्तत्र न श्रीर्नाश्रीर्न लोकता ॥ २१ ॥

"விதேஹமுக்தெள விமலே பதே பரமபாவநே
விதேஹமுக்தி விஷயே தஸ்மின் ஸத்வக்ஷயாத்மகே" (20)

"சித்தநாபேப விரூபாக்யே ந கிஞ்சிதிஹ வித்யதே
ந குணோ நாகுணஸ்தத்ர ந ஸ்ரீர்நாஸ்ரீர் ந லோகதா" (21)

விதேக முக்தியானது ஆணவம் மாயை காமியமாகிய மலமற்றதும் மிக்க புனிதமுமான பதமாம். விதேகமுக்திக்கு விஷயமான அந்தப் பதமானது சித்தநாசமுள்ளதும், ரூப மற்றதுமாம். அந்தப் பதத்தில் ஈண்டு காணப்படுமெதுவும் இல்லை என்பதாம். அந்தப் பதத்தில் குணமுமில்லை, குண மின்மையுமில்லை, ஐஸ்வர்யமுமில்லை, ஐஸ்வர்யமின்மையும் இல்லை. அது பார்க்கப்படுவதுமன்று.

**न चोदयो नास्तमयो न हर्षामर्षसंविदः ।**
**न तेजो न तमः किंचिन्न संध्यादिनरात्रयः ।**

"ந சோதயோ நாஸ்தமயோ ந ஹர்ஷாமர்ஷஸம்வித:
ந தேஜோ ந தம: கிஞ்சிந் ந ஸந்த்யா தினராத்ரய:" (22)

உதயமுள்ளது மன்று, அஸ்தமனமுள்ளது மன்று, சந்தோஷம், பொறுமை, ஞானம் இவைகளுமில்லை. ஒளி யுமில்லை. இருட்டுமில்லை. சந்தியாகாலம் பகல் இரவு இவைகளும் இல்லை. அப்பதத்தில் இவைகளுள் எதுவும் இல்லை என்பதாம்.

**न सत्तापि न चासत्ता न च मध्यं हि तत्पदम् ॥ २२॥**
**ये हि पारं गता बुद्धेः संसाराडम्बरस्य च ।**
**तेषां तदास्पदं स्फारं पवनानामिवाम्बरम् ॥ २३ ॥**

"ந ஸத்தாபி ந சாஸத்தா ந ச மத்யம் ஹி தத் பதம்
யே ஹி பாரம் கதா புத்தே: ஸம்ஸாராடம்பரஸ்ய ச
தேஷாம் ததாஸ்பதம் ஸ்பாரம் பவநாநா மிவாம்பரம்" (23)

அந்தப் பதமானது சத்துமன்று, அஸத்துமன்று, சதசத்து மன்று என்பதாம். எவர்கள் புத்தியினுடையவும், இறப்பு பிறப்பாகிய பிரவாஹத்தினுடையவும் கரையை அடைந்தவர்களோ, காற்றுகளுக்கு ஆகாயம் ஓய்ந்து ஒடுங்குமிடமாவது போல் அவர்களுக்கும் அந்த விதேகமுக்தி பதமானது வியாபகமான இடமாகின்றது.

संशान्तदुःखमजडात्मकमेकसुप्त-
मानन्दमन्थरमपेतरजस्तमो यत् ।
आकाशकोशतनवोऽतनवो महान्त-
स्तस्मिन्पदे गलितचित्तलवा भवन्ति ॥ २४ ॥

" ஸம்பாந்தது:கமஜடாத்மகமேகஸுப்த
மானந்தமந்தரமபேதரஜஸ்தமோ யத்
ஆகாபகோபதனவோ ऽதனவோ மஹாந்தஸ்
தஸ்மின் பதே களித சித்தலவா பவந்தி " (24)

எந்தப் பதமானது துக்கமென்பது சிறிதுமில்லாததும், சித்தே வடிவானதும் ஒரே சுழுப்தி போன்ற நிலையையுடையதும், ஆனந்தப்பெருக்கையுடையதும், ரஜஸ்தமோகுணங்கள் அற்றதுமாமோ; அந்தப் பதத்தில் சத்துவமயமான திவ்ய சரீரத்தைப்பெற்றவர்களும், ஸ்தூலசூக்ஷ்ம காரண சரீரங்களற்றவர்களுமான மஹான்கள் சித்தநாசமுள்ளவர்களாக இருக்கின்றார்கள்.

हे निदाघ महाप्राज्ञ निर्वासनमना भव ।
बलाच्चेतः समाधाय निर्विकल्पमना भव । २५ ॥

" ஹே நிதாக மஹாப்ராஜ்ஞ நிர்வாஸனமனா பவ
பலாச்சேத: ஸமாதாய நிர்விகல்பமனா பவ " (25)

பேரறிவுள்ள ஏ நிதாகனே! நல்ல முயற்சி செய்து வாசனையற்ற மனமுள்ளவனுவாயாக. விசாரபலத்தால் சித்தத்தை நன்ருய் அடக்கி விகல்பமற்ற மனமுள்ளவனுவாயாக.

यज्जगद्भासकं भानं नित्यं भाति स्वतः स्फुरत् ।
स एव जगतः साक्षी सर्वात्मा विमलाकृतिः ॥ २६ ॥

" யஜ்ஜகத்பாஸகம் பானம் நித்யம் பாதி ஸ்வத: ஸ்புரத்
ஸ ஏவ ஜகத: ஸாக்ஷீ ஸர்வாத்மா விமலாக்ருதி: " (26)

எது உலகை விளங்கச்செய்யும் ஒளியாயும் எப்பொழுதும் தன்னில் தானே விளக்கமுள்ளதாய் ஒளிர்வதாயும் எல்லாருடைய ஆன்மாவாயும் குற்றமற்ற வடிவுள்ளதுமாமோ அதுவே உலகிற்குச் சாட்சியாகவும் விளங்குகிறது.

(அ) வேதாந்தத்திற்கு விஷயமானது அந்த பிரம்மமொன்றேயாம் எனக் கூறுகின்ருர்—

प्रतिष्ठा सर्वभूतानां प्रज्ञानघनलक्षणः ।
तद्विद्याविषयं ब्रह्म सत्यज्ञानसुखाद्वयम् ॥ २७ ॥

" ப்ரதிஷ்டா ஸர்வபூதானும் ப்ரஜ்ஞானகனலக்ஷண:
தத்வித்யாவிஷயம் ப்ரஹ்ம ஸத்யஜ்ஞான சுகாத்வயம் "(27)

ஜீவர்களுடைய இருப்பிடமானதும், சிறந்த அறிவின் பெருக்கையே இயல்பாயுடையதும், சத்யமாயும், ஞானமாயும், சுகமாயும், அத்வயமாயும் உள்ள அந்த வஸ்துவானது சாத்திர ஞானத்திற்கு விஷயமான பிரம்மம் என்பதாம்.

(அ) அறியவேண்டிய தத்துவத்தைக் கூறுகின்ருர்—

एकं ब्रह्माहमस्मीति कृतकृत्यो भवेन्मुनिः ॥ २८ ॥
सर्वाधिष्ठानमद्वन्द्वं परं ब्रह्म सनातनम् ।
सच्चिदानन्दरूपं तदवाङ्मनसगोचरम् ॥ २९ ॥

"ஏகம் ப்ரஹ்மாஹமஸ்மீதி க்ருதக்ருத்யோ பவேன் முனி:" (28)

"ஸர்வாதிஷ்டானமத்வந்த்வம் பரம் ப்ரஹ்ம ஸனாதனம்
ஸச்சிதானந்தரூபம் தத்வாங்மானஸகோசரம்" (29)

மனன சீலனாகிய முனிவன் அத்வைத வடிவான பிரம்மமாகவே ஆகின்றேன் என்று தியானம் செய்து செய்யவேண்டியதைச் செய்து முடித்தவனாக ஆகட்டும். எல்லாவற்றிற்கும் ஆதாரமானதும், இரண்டற்றதும், மேலானதும், பெரிதானதும், பழமையானதும், சச்சிதானந்த லட்சணமுள்ளதுமான அது மனோவாக்குகளுக்கு எட்டாத நிலையை உடையதாம்.

न तत्र चन्द्रार्कवपुः प्रकाशते
न वान्ति वाताः सकलाश्च देवताः ।
स एव देवः कृतभावभूतः स्वयं
विशुद्धो विरजः प्रकाशते ॥ ३० ॥

"ந தத்ர சந்த்ரார்க வபு: ப்ரகாசதே
ந வாந்தி வாதா: ஸகலாச்ச தேவதா:
ஸ ஏவ தேவ: க்ருதபாவ பூத:
ஸ்வயம் விசுத்தோ விரஜ: ப்ரகாசதே" (30)

அத்தகைய ஆன்மாவின் முன்னிலையில் சந்திர சூரியர்களின் விளக்கவடிவானது பிரகாசிப்பதில்லை. அவ்விதமே காற்றுகள் செயலற்றனவாம். எல்லாத் தேவர்களும் ஒளியற்றவர்களாம். அவன் ஒருவனே தேவன். முன்னமே பாவபதார்த்தங்களைச் செய்தவனும், ரஜஸாகிய மலமற்றவனும், ஆகையினாலேயே சுத்தமுள்ளவனுமான அந்த தேவன் தானே பிரகாசிக்கின்றான்.

(அ) அதைக்காணின் எல்லா சந்தேகங்களும் நீங்குகின்றன எனக் கூறுகின்றார்—

भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥ ३१ ॥

" பித்யதே ஹ்ருதய க்ரந்திஶ் சித்யந்தே ஸர்வஸம்ஶயா:
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்ருஷ்டே பராவரே(31)

மற்றவர்களைக் கீழாக்கி நின்று விளங்கும் அந்த பரவஸ்துவைக் கண்டமாத்திரத்தில் இந்த ஞானியினுடைய இருதயத்திலுள்ள நான் எனது என்ற அஹங்காரகிரந்தி பிளவுபட்டதாகிறது. எல்லா ஸந்தேஹங்களும் அறுபடுகின்றன. கருமங்களும் அழிவுறுகின்றன.

(அ) ஜீவேஶ்வரர்களின் பேதகாரணங் கூறுகின்றார்—

द्वौ सुपर्णौ शरीरेऽस्मिञ्जीवेशाख्यौ सह स्थितौ ।
तयोर्जीवः फलं भुङ्क्ते कर्मणो न महेश्वरः ॥ ३२ ॥

" த்வௌ ஸுபர்ணௌ ஶரீரேऽஸ்மிந் ஜீவேசாக்யௌ
ஸஹ ஸ்திதௌ
தயோர்ஜீவ: பலம் புங்க்தே கர்மணோ ந மகேஶ்வர:"(32)

இந்த சரீரமாகிய விருக்ஷத்தின் கண் ஜீவேஶ்வரர்களாகிய இரண்டு பட்சிகள் கூடி வஸிக்கின்றன. அவைகளில் ஜீவனாகிய பட்சி கருமபலத்தை அனுபவிக்கின்றது. ஈஶ்வரனாகிய பட்சி கருமபலத்தை அனுபவிப்பதில்லை.

(அ) அந்த பேதம் மாயையால் உண்டானது எனக் கூறுகின்றார்—

केवलं साक्षिरूपेण विना भोगो महेश्वरः ।
प्रकाशते स्वयं भेदः कल्पितो मायया तयोः ।

" கேவலம் ஸாக்ஷிரூபேண விநாபோகோ மஹேச்வர:
ப்ரகாசதே ஸ்வயம் பேத: கல்பிதோ மாயயா தயோ:" (33)

போகமில்லாமல் மகேச்வரன் சாட்சி மாத்திரமாய் தானே பிரகாசிக்கின்றான். அந்த ஜீவேச்வரர்களுக்குள்ள பேதம் மாயையால் உண்டானது.

(அ) இரண்டும் சித்தாதலின் பேதமில்லை எனக் கூறுகின்றார்—

चिच्चिदाकारतोऽभिन्ना न भिन्ना चित्त्वहानितः ॥ ३३ ॥
तर्कतश्च प्रमाणाच्च चिदेकत्वव्यवस्थितेः ।
चिदेकत्वपरिज्ञाने न शोचति न मुह्यति ॥ ३४ ॥

" சித்சிதாகாரதோ ஽பின்னா ந பின்னா சித்வஹானித:
தர்க்கதச்ச ப்ராமாணாச்ச சிதேகத்வ வ்யவஸ்திதே:
சிதேகத்வ பரிஜ்ஞானே ந சோசதி ந முஹ்யதி " (34)

சித்தாகிய ஜீவன் ஈச்வரனாகிய சித்தைக் காட்டிலும் வேறன்று. பின்னம் எனின் சித்துத்தன்மைக்கு அழிவுண்டாம். ஆதலால் பேதமென்று சொல்லக்கூடாது. தர்க்க யுக்தியாலும், சாஸ்திரப் பிரமாணத்தாலும் சித்து ஒன்றே என நிச்சயிக்கப்பட்டுளது. இவ்வாறு சித்து ஒன்றே என நன்றாய் அறிந்த பொழுது புருஷன் சோகமடைவதில்லை. மோகமடைவதில்லை.

(அ) ஸோ஽ஹம் பாவனையால் சோகத்தைக்கடப்பன் எனக் கூறுகின்றார்—

अधिष्ठानं समस्तस्य जगतः सत्यचिद्घनम् ।
अहमस्मीति निश्चित्य वीतशोको भवेन्मुनिः ॥ ३५ ॥

" அதிஷ்டானம் ஸமஸ்தஸ்ய ஜகத: ஸத்ய சித்கனம்
அஹமஸ்மீதி நிச்சித்ய வீதசோகோ பவேன்முனி: " (35)

எல்லாவுலகத்திற்கும் ஆதாரமானதும், சத்தாகியும், சித்தே வடிவாயுமுள்ளது எதுவோ, அதுவே நானாகின்றேன் என்று நிச்சயம் செய்த முனிவன் சோகமற்றவனாகின்றான்.

(அ) மலமற்றவர்களே ஆன்மாவைக்காண்பர் எனக் கூறுகின்றார்—

स्वशरीरे स्वयंज्योतिःस्वरूपं सर्वसाक्षिणम् ।
क्षीणदोषाः प्रपश्यन्ति नेतरे मायया वृताः ॥ ३६ ॥

“ ஸ்வசரீரே ஸ்வயம் ஜ்யோதி: ஸ்வரூபம் ஸர்வஸாக்ஷிணம்
க்ஷீணதோஷா: ப்ரபஶ்யந்தி நேதரே மாயயா வ்ருதா:”(36)

தனது சரீரத்தில் எல்லாவற்றிற்கும் சாட்சியாயுள்ள ஸ்வப்பிரகாச சோதிரூபத்தை மலவிட்சேப தோஷங்களற்ற யோகிகள் காண்கிறார்கள். மாயையால் வசீகரிக்கப்பட்ட மற்றவர்கள் காண்கின்றிலர்.

(அ) ஆன்மாவை அறியவேண்டின் மௌனம் வேண்டுமெனக் கூறுகின்றார்—

तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः ।
नानुध्यायाद्बहूञ्छब्दान्वाचो विग्लापनं हि तत् ॥ ३७ ॥

“ தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண:
நானுத்யாயாத் பஹூ-ஞ்சப்தான் வாசோ
விக்லாபனம் ஹி தத் ” (37)

பிராம்மணனாகிய தீரன் அந்த சோதி ஒன்றையே அறியும் விஷயத்தில் அறிவைச் செலுத்துவானாக. அதிகமான சப்தங்களை வாக்கால் பேசாதிருப்பானாக ஏனெனில் அந்த வார்த்தை துன்பத்தையே தருவதாம்.

(அ) ஆன்ம நிச்சயம் செய்தவன் மனனமே செய்ய வேண்டுமெனக் கூறுகின்றார்—

बाल्येनैव हि तिष्ठासेन्निर्विद्य ब्रह्मवेदनम् ।
ब्रह्मविद्यां च बाल्यं च निर्विद्य मुनिरात्मवान् ॥ ३८ ॥

"பால்யேனைவ ஹி திஷ்டாஸேந்நிர்வித்ய ப்ரஹ்மவேதனம்
ப்ரஹ்மவித்யாஞ்ச பால்யம் ச நிர்வித்ய முனிராத்மவான்" (38)

ஆன்மாவை அறியும் அவாவுள்ள முனிவன் ப்ரம்மத்தை அறிவிக்கும் சாஸ்திரத்தையும், மனனத்தின் லட்சணத்தையும், ஆசாரியன் முன்னிலையில் நன்றாய் விசாரித்து பிறகு பிரம்மஞானத்தையும் நன்றாய் நிச்சயித்து மனன மௌனத்தையே அப்யசிப்பானாகை.

(பிரும்ம ஞானத்தைப்பெற்று பாலன் போலத் தன் மஹிமையை வெளிப்படுத்தாமலிருக்கக் கடவன்; பிரும்ம வித்யையும், பால்யத்தன்மையையும் பெற்று உயரிய மன்னமுடையவனாக வேண்டும்.)

(அ) சரீரம் சம்சாரத்திற்கு வித்து என்று கூறுகின்றார்—

अन्तर्लीनसमारम्भः शुभाशुभमहाङ्कुरम् ।
संसृतिव्रततेर्बीजं शरीरं विद्धि भौतिकम् ॥ ३९ ॥

"அந்தர் லீந ஸமாரம்ப: ஶுபாஶுப மஹாங்குரம்
ஸம்ஸ்ருதி வ்ரததேர்பீஜம் ஶரீரம் வித்தி பௌதிகம்" (39)

உள்ளத்தின் கண் மனதின் சங்கல்ப வடிவ முளைப்பை கெடுப்பதற்காக நல்ல முயற்சி செய்யும் நீ சுக துக்கங்களாகிற பெரிய முளைக்குக் காரணமானதும் பஞ்சபூத வடிவமுமான இந்த சரீரமானது இறப்புப்பிறப்பாகிய கொடி வடிவ ஸம்ஸாரத்திற்கு வித்து என்றறிவாய்.

(அ) சரீரத்திற்கு ஆசையுள்ள சித்தமே வித்தெனக் கூறுகின்றார்—

भावाभावदशाकोशं दुःखरत्नसमुद्रकम् ।
बीजमस्य शरीरस्य चित्तमाशावशानुगम् ॥ ४० ॥

“ பாவாபாவ தசாகோசம் து:கரத்னஸமுத்ககம்
பீஜமஸ்ய சரீரஸ்ய சித்தமாசாவசாநுகம் ” (40)

தோன்றி மறையும் இயல்புள்ளதாம், ஆன்மாவை மறைப்பதால் கோசமாகவும், துக்கமாகிய ரத்தினத்தை மறைத்து வைப்பதால் பெட்டியாகவும் இந்தச் சரீரத்தை அறிவாய். இத்தகைய சரீரத்திற்கு வித்து ஆசையில் கட்டுப்பட்ட சித்தமென்றறிவாய்.

(அ) அந்த சித்தத்திற்குப் பிராணனும் பாவனையும் வித்தெனக் கூறுகின்றார்—

द्वे बीजे चित्तवृक्षस्य वृत्तिव्रततिधारिणः ।
एकं प्राणपरिस्पन्दो द्वितीयो दृढभावना ॥ ४१ ॥

“ த்வே பீஜே சித்தவ்ருக்ஷஸ்ய வ்ருத்திவ்ரததிதாரிண:
ஏகம் ப்ராணபரிஸ்பந்தோ த்விதீயோ த்ருடபாவனா ” (41)

சங்கல்ப விகல்பவடிவ விருத்திகளாகிய கொடிகளைத் தாங்குகின்ற சித்தமாகிய விருட்சத்திற்கு இரண்டு வித்துக்கள் உள்ளன. அவற்றுள் பிராணனின் அசைவு ஒன்று, இரண்டாவது விஷயங்களிலுள்ள திடபாவனை என்று அறிவாய்.

(அ) சித்தத்திற்குப் பிராணன் காரணமாகும் விதத்தைக் கூறுகின்றார்—

यदा प्रस्पन्दते प्राणो नाडीसंस्पर्शनोद्यतः ।
तदा संवेदनमयं चित्तमाशु प्रजायते ॥ ४२ ॥

" யதா ப்ரஸ்பந்ததே ப்ராணோ நாடீஸம்ஸ்பர்ஶனோத்யத:
ததா ஸம்வேதனமயம் சித்தமாஶு ப்ரஜாயதே " (42)

எப்பொழுது சரீரத்தினுள் பிராணனின் அசைவுண்டாமோ அப்பொழுதே நரம்புகளின் உறுத்தல் ஏற்படுகின்றது. பிறகு விஷயவுணர்வு வடிவமான சித்தமானது விரைவில் வெளிப்படுகின்றது.

(அ) பிராணனையும் உணர்வின் வெளித்தோற்றத்தையும் தடுக்கவேண்டுமெனக் கூறுகின்றார்—

सा हि सर्वगता संवित्प्राणस्पन्देन बोध्यते ।
संवित्संरोधनं श्रेयः प्राणादिस्पन्दनं वरम् ॥ ४३ ॥

" ஸா ஹி ஸர்வகதா ஸம்வித்ப்ராணஸ்பந்தேன போத்யதே
ஸம்வித்ஸம்ரோதனம் ஶ்ரேய: ப்ராணாதி ஸ்பந்தனம் வரம்" (43)

பிராணனின் அசைவால் எங்கும்நிறைந்த அந்த அறிவு வடிவ சம்வித்தானது எழுப்பப்பட்டதாகின்றது. அறிவை விஷயாகாரத்தினின்றும் தடுப்பது நலமாம். அதன் பொருட்டு பிராணாதிகளின் அசைவைத் தடுப்பதும் நலமாம்.

(அ) அப்பியாசத்தில் பிராணநிரோதம் செய்யின் சித்த சாந்தியுண்டாம் எனக் கூறுகின்றார்—

योगिनश्चित्तशान्त्यर्थं कुर्वन्ति प्राणरोधनम् ।
प्राणायामैस्तथा ध्यानैः प्रयोगैर्युक्तिकल्पितैः ॥ ४४ ॥

चित्तोपशान्तिफलदं परमं विद्धि कारणम् ।
सुखदं संविदः स्वास्थ्यं प्राणसंरोधनं विदुः ॥ ४५ ॥

" யோகினச்சித்தசாந்த்யர்த்தம் குர்வந்தி ப்ராண
ரோதனம்

ப்ராணாயாமைஸ்ததா த்யானை: ப்ரயோகைர்யுக்தி கல்பிதை: (44)

" சித்தோபசாந்திபலதம் பரமம் வித்தி காரணம்
சுகதம் ஸம்வித:' ஸ்வாஸ்த்யம் ப்ராணஸம்ரோதனம் விது:" (45)

யோகிகள் சித்த சாந்தியின் பொருட்டுப் பிராணாயாமங்களாலும், தியானம்—உபாசனை முதலிய பல உபாயங்களாலும் பிராணனின் தடையைச்செய்கின்றார்கள். பிராண சலனத்தைத் தடுப்பது சித்த சாந்தியாகிய பலனைக்கொடுக்கும் சிறந்த காரணமாக அறிவாய். பிராண நிரோதனத்தை அறிவின் சொரூப நிலையான சுகத்தைக்கொடுக்கும் சாதனமாகத் தத்துவஞானிகள் அறிகின்றார்கள்.

(அ) வாசனையின் இலக்கணம் கூறுகின்றார்—

दृढभावनया त्यक्तपूर्वापरविचारणम् ।
यदादानं पदार्थस्य वासना सा प्रकीर्तिता ॥ ४६ ॥

" த்ருட பாவனயா த்யக்த பூர்வாபரவிசாரணம்
யதாதானம் பதார்த்தஸ்ய வாஸநா ஸா ப்ரகீர்திதா ". (46)

முன்பின் விசாரணையின்றித் திட பாவனையால் பொருளைக் கிரகிப்பது எதுவோ அது வாசனையெனப்படுகிறது.

(அ) பாவனையை விடுவதால் சித்தநாசமுண்டாமெனக் கூறுகின்றார்—

यदा न भाव्यते किंचिद्धेयोपादेयरूपि यत् ।
स्थीयते सकलं त्यक्त्वा तदा चित्तं न जायते ॥ ४७ ॥

" யதா ந பாவ்யதே கிஞ்சித் ஹேயோபாதேய ரூபி யத்
ஸ்தீயதே ஸகலம் த்யக்த்வா ததா சித்தம் ந ஜாயதே" (47)

எப்பொழுது சித்தமானது தள்ளத்தகுந்ததும் கொள்ளத்தகுந்ததுமான விஷயத்தைச் சிறிதும் பாவனை

செய்வதில்லையோ, எல்லாவற்றையும் விடுத்திருப்பதாமோ, அப்பொழுது சித்தமானது வெளிப்படுகிறதில்லை.

(அ) வாசனையின் நீக்கத்தாலும் சித்தநாசமுண்டாமெனக் கூறுகின்றார்—

**अवासनत्वात्सततं यदा न मनुते मनः ।**
**अमनस्ता तदोदेति परमोपशमप्रदा ॥ ४८ ॥**

"அவாஸனத்வாத் ஸததம் யதா ந மநுதே மந:
அமனஸ்தா ததோதேதி பரமோபஶமப்ரதா" 48

எப்பொழுது மனமானது சதாகாலமும் வாசனையற்றிருப்பதால் சங்கல்பமற்றதாமோ, அப்பொழுது மேலான அடக்கத்தைத் தருவதான அமனஸ்கத்தன்மை உண்டாகிறது

**यदा न भाव्यते भावः क्वचिज्जगति वस्तुनि ।**
**तदा हृदम्बरे शून्ये कथं चित्तं प्रजायते ॥ ४९ ॥**

"யதா ந பாவ்யதே பாவ: க்வசிஜ் ஜகதி வஸ்துநி
ததா ஹ்ருதம்பரே ஶூன்யே கதம் சித்தம் ப்ரஜாயதே"
(49)

எப்பொழுது சித்தத்தால் உலகப்பொருளில் சிறிதும் பாவனை செய்யப்படுவதில்லையோ, அப்பொழுது ஒன்றுமில்லாத இருதய ஆகாயத்தின்கண் சித்தம் எவ்வாறு உண்டாம்?

**यदभावनमास्थाय यदभावस्य भावनम् ।**
**यद्यथा वस्तुदर्शित्वं तदचित्तत्वमुच्यते ॥ ५० ॥**

"யதபாவனமாஸ்தாய யதபாவஸ்ய பாவனம்
யத்யதா வஸ்துதர்ஶித்வம் ததசித்தத்வமுச்யதே" (50)

எந்த சித்தமானது சூன்ய பாவனையை அடைந்து, எதுவும் இன்மையை பாவிப்பதாமோ, எந்த சித்தமானது, உண்மைப் பொருளைக் கண்டதுமாமோ அந்த சித்தம் இறந்ததென்று சொல்லப்படுகிறது.

सर्वमन्तः परित्यज्य शीतलाशयवर्ति यत् ।
वृत्तिस्थमपि तच्चित्तमसद्रूपमुदाहृतम् ॥ ५१ ॥

" ஸர்வமந்த: பரித்யஜ்ய ஶீதலாஶய வர்த்தி யத்
வ்ருத்திஸ்தமபி தச்சித்த மஸத்ரூப முதாஹ்ருதம் " (51)

உள்ளத்தின் கண் எல்லாப் பற்றையும் விடுத்து குளிர்ந்த நிலையில் இருப்பது எதுவோ; அந்தச்சித்தம் விஷயத்தைப்பற்றி நிற்பினும் இல்லாததென்று சொல்லப்படுகின்றது.

(அ) சித்தநாசமுள்ளவர்கள் ஜீவன்முக்தர்கள் எனக் கூறுகின்றார்—

भ्रष्टबीजोपमा येषां पुनर्जननवर्जिता ।
वासना रसनाहीना जीवन्मुक्ता हि ते स्मृताः ॥ ५२ ॥

" ப்ரஷ்ட பீஜோபமா யேஷாம் புனர்ஜனனவர்ஜிதா
வாஸனா ரஸனாஹீனா ஜீவன்முக்தா ஹி தே ஸ்ம்ருதா: "
(52)

எவர்களுடைய மனம் வறுத்தவிதை போன்றதும், மீண்டும் பிறவியில்லாததும், வாசனையைச் சுவைக்கும் நாவற்றதுமாமோ, அத்தகைய மனமுள்ளவர்கள் ஜீவன் முக்தர்கள் என்றே கருதப்படுகின்றார்கள்.

सत्त्वरूपपरिप्राप्तचित्तास्ते ज्ञानपारगाः ।
अचित्ता इति कथ्यन्ते देहान्ते व्योमरूपिणः ॥ ५३ ॥

" ஸத்வரூப பரிப்ராப்த சித்தாஸ்தே ஜ்ஞானபாரகா:
அசித்தா இதி கத்யந்தே தேஹாந்தே வ்யோம ரூபிண:(53)

ரஜஸ்தமஸற்று சத்வவடிவத்தை யடைந்த சித்தமுள்ளவர்களும், ஞானத்தின் முடிவையடைந்தவர்களும் தேகத்தின் முடிவில் ஆகாயம் போன்று வியாபகமான ஆன்மாவில் கலப்பவர்களுமான அவர்கள் சித்தமிறந்தவர்களென்று சொல்லப்படுகின்றார்கள்.

(அ) விஷயவுணர்வை விடுப்பதால் பிராணனும் வாசனையும் நாசமுறும் எனக்கூறுகின்றார்—

संवेद्यसपरित्यागात्प्राणस्पन्दनवासने ।
समूलं नश्यतः क्षिप्रं मूलच्छेदादिव द्रुमः ॥ ५४ ॥

" ஸம்வேத்ய ஸம்பரித்யாகாத் ப்ராணஸ்பந்தன வாஸனே
ஸமூலம் நச்யத: க்ஷிப்ரம் மூலச்சேதா திவ த்ரும: " (54)

விஷயத்தை முற்றும் விடுவதால் பிராணனின் சலனம் வாசனை இவைகள் வேரை வெட்டுவதால் மரம் இறந்துவிழுவதுபோல், விரைவில் அடியோடு நாசத்தை அடைகின்றன.

(அ) விஷய விளக்கத்தினின்றும் அறிவை நீக்க வேண்டுமெனக் கூறுகின்றார்—

पूर्वदृष्टमदृष्टं वा यदस्याः प्रतिभासते ।
संविदस्तत्प्रयत्नेन मार्जनीयं विजानता ॥ ५५ ॥

" பூர்வத்ருஷ்ட மத்ருஷ்டம் வா யதஸ்யா: ப்ரதி பாஸதே
ஸம்விதஸ்தத் ப்ரயத்நேந மார்ஜனீயம் விஜாநதா " (55)

இந்த சம்வித்வடிவ அறிவின் ஒளியானது முன் பார்க்கப்பட்டதும் புதிதாய்ப்பார்க்கப்படுவதுமான பொருளை நன்றாய் விளக்குகின்றது. உண்மையை யறிந்த புருடனால் அந்த விஷய விளக்கமானது நல்ல முயற்சியால் துடைக்க வேண்டும்.

(அ) அதன் நீங்காமை பந்தமென்றும் நீக்கமே மோக்ஷமென்றும் கூறுகின்றார்—

तदमार्जनमात्रं हि महासंसारतां गतम् ।
तत्प्रमार्जनमात्रं तु मोक्ष इत्यभिधीयते ॥ ५६ ॥

" ததமார்ஜன மாத்ரம் ஹி மஹாஸம்ஸாரதாம் கதம்
தத் ப்ரமார்ஜன மாத்ரந்து மோக்ஷ இத்யபிதீயதே " (56)

அந்த அறிவின் ஒளியை விஷய விளக்கத்தினின்றும், துடையா திருப்பதே பெரிய சம்சாரத்தினடைதலாம், (அறிவின் விளக்கத்தை சகாயமாகப்பெற்று பிராணன்களின் அசைவும், அவற்றினசைவால் சித்தம் உண்டானது, அந்தச் சித்தத்தில் வாஸனை உண்டானது, அவ்வாசனையால் சித்தம் இந்திரிய விஷயங்களில் பற்றி யான் எனது என்ற அபிமானத்தையுண்டாக்கி சம்சாரத்தைவளர்ப்பதாகிறது.) ஆகையால் அறிவின் விளக்கத்தை விஷயசம்பந்தத்தினின்றும் துடைப்பதுவே மோக்ஷமென்றும் சொல்லப்படுகின்றது.

अजडो गलितानन्दस्त्यक्तसंवेदनो भव ॥ ५७ ॥

" அஜடோ கலிதானந்தஸ்த்யக்த ஸம்வேதநோ பவ " (57)

சித்வடிவனும், விஷய சம்பந்தமான ஆனந்தமற்றவனுமான நீ விஷயவுணர்வை நீக்கி இருப்பாயாக.

(அ) விஷயப்பற்று நீங்கியவன் ஜீவன்முக்தன் எனக் கூறுகின்றார்—

संविद्वस्तुदशालम्बः सा यस्येह न विद्यते ।
सोऽसंविदजडः प्रोक्तः कुर्वन्कार्यशतान्यपि ॥ ५८ ॥

" ஸம்வித்வஸ்து தபாலம்ப: ஸா யஸ்யேஹ ந வித்யதே
ஸோऽஸம்விதஜட: ப்ரோக்த: குர்வன் கார்ய பதாந்யபி " (58)

இவ்வுலகின்கண் எந்தப் புருஷனுக்கு அந்த சம்வித் வடிவஞானமானது விஷயத்தொடர்பை அடைந்ததாக ஆவதில்லையோ, அவன் அளவற்ற தொழில்களைச் செய்பவனாயினும் பாஹ்யவுணர்வற்றவன் சித்வடிவினன் என்று சொல்லப்படுகின்றான்.

संवेद्येन हृदाकाशे मनागपि न लिप्यते ।
यस्यासावजडा संविज्जीवन्मुक्तः स कथ्यते ॥ ५९ ॥

" ஸம்வேத்யேன ஹ்ருதாகாசே மனாகபி ந லிப்யதே
யஸ்யாஸாவஜடா ஸம்வித் ஜீவன்முக்த: ஸ கத்யதே " (59)

எவனுடைய மனவெளியில் விஷயத்தோடுள்ள சம்பந்தம் சிறிதும் கலவாதிருப்பதாமோ, அவன் சித்வடிவினன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகின்றான்.

(அ) வாசனையும் பாவனையும் அற்றவிடத்துச் சிறந்த ஞானமேயுளது எனக் கூறுகின்றார்—

यदा न भाव्यते किंचिन्निर्वासनतयात्मनि ।
बालमूकादिविज्ञानमिव च स्थीयते स्थिरम् ॥ ६० ॥

" யதா ந பாவ்யதே கிஞ்சிந் நிர்வாஸநதயாத்மநி
பாலமூகாதி விஜ்ஞானமிவ ச ஸ்தீயதே ஸ்திரம் " (60)

எப்பொழுது சித்தத்தில் வாசனை நீங்கியதால் எந்த விஷயமும் பாவிக்கப்படுவதில்லையோ, அம்முக்தனுக்கு பாலன் ஊமை இவர்களைப்போன்று விஞ்ஞானம் திடமாய் அமைகின்றது.

(அ) இத்தகைய ஞானமுள்ளவன் மீண்டும் விஷயத்தில் கலவான் எனக் கூறுகின்றார்—

तदा जाड्यविनिर्मुक्तमसंवेदनमाततम् ।
आश्रितं भवति प्राज्ञो यस्माद्भूयो न लिप्यते ॥ ६१ ॥

"ததா ஜாட்ய விநிர்முக்த மஸம்வேதனமாததம் (61)
ஆச்ரிதம் பவதி ப்ராஜ்ஞோ யஸ்மாத் பூயோ ந லிப்யதே"

அப்பொழுது அறிவிற் சிறந்த முனிவன் எங்கிலையை அடைந்ததால் மீண்டும் விஷயத்தால் தாக்கப்படுவதில்லையோ, அறியாமையினின்றும் நீங்கியதும் இந்திரியத்தால் அறியப்படாததும் வியாபகமானதுமான அப்பதத்தை அடைந்தவனாகின்றான்.

(அ) இந்த ஞானத்தால் நிர்விகல்ப சமாதியைப் பெற்று சொரூபமாத்திரமாயிருப்பன் எனக் கூறுகின்றார்—

समस्ता वासनास्त्यक्त्वा निर्विकल्पसमाधितः ।
तन्मयत्वादनाद्यन्ते तदप्यन्तर्विलीयते ॥ ६२ ॥

"ஸமஸ்தா வாஸனாஸ் த்யக்த்வா நிர்விகல்ப ஸமாதித:
தன்மயத்வா தனாத்யந்தே ததப்யந்தர் விலீயதே" (62)

எல்லா வாசனைகளையும் விடுத்து நிர்விகல்ப சமாதியின் அப்யாஸத்தால் ஆத்யந்தமற்ற ஆன்ம ஸ்வரூபத்தில் நிலை பெறுகின்றான். அவன் சொரூபமாத்திரமாயிருப்பவனாதலின் அந்த சமாதி பழக்கமும் உள்ளத்தின் கண்ணேயே ஓய்ந்து விடுகின்றது.

(அ) இந்த ஞானி எதைச் செய்தும் பற்றற்றவனாய் சுகமே வடிவானவன் எனக் கூறுகின்றார்—

तिष्ठन्गच्छन्स्पृशञ्जिघ्रन्नपि तल्लेपवर्जितः ।
अजडो गलितानन्दस्त्यक्तसंवेदनः सुखी ॥ ६३ ॥

" திஷ்டன் கச்சன் ஸ்ப்ருசஞ் ஜிக்ரன்னபி தல்லேப வர்ஜித:
அஜடோ கலிதானந்தஸ் த்யக்த ஸம்வேதன: சுகீ " (63)

நிற்பினும், செல்லினும், தொடினும், முகரினும் அந்தந்த விஷயத்தைப் பற்றாத யோகி சித்வடிவினனும் விஷயானந்தமற்றவனும் விஷயவுணர்வு நீங்கினவனுமாய் சுகமுள்ளவனாகின்றான்.

(அ) அப்யாசத்தால் சம்சாரத்தைக் கடக்கவேண்டுமெனக் கூறுகின்றார்—

एतां दृष्टिमवष्टभ्य कष्टचेष्टायुतोऽपि सन् ।
तरेद्दुःखाम्बुधेः पारमपारगुणसागरः ॥ ६४ ॥

" ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய கஷ்ட சேஷ்டாயுதோऽபி ஸன்
தரேத் துக்காம்புதே: பாரமபாரகுண ஸாகர:" (64)

அளவிடமுடியாத குணங்களையுடைய சமுத்திரம் போன்ற புருஷன் இத்தகைய சிதான்மஞான திருட்டியைப் பற்றி கஷ்டமான அப்யாசத்தைச் செய்தாயினும் துக்க சமுத்திரத்தினின்றும் கரையை அடைவானாக.

(அ) அப்பதம் சத்தே வடிவானதென்று இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

विशेषं संपरित्यज्य सन्मात्रं यदलेपकम् ।
एकरूपं महारूपं सत्तायास्तत्पदं विदुः ॥ ६५ ॥

कालसत्ता कलासत्ता वस्तुसत्तेयमित्यपि ।
विभागकलनां त्यक्त्वा सन्मात्रैकपरो भव ॥ ६६ ॥

" விசேஷம் ஸம்பரித்யஜ்ய ஸன்மாத்ரம் யதலேபகம்.
ஏகரூபம் மஹாரூபம் ஸத்தாயாஸ்தத் பதம் விது: " (65)

" கால ஸத்தா கலாஸத்தா வஸ்து ஸத்தேயமித்யபி
விபாக கலனும் த்யக்த்வா ஸன்மாத்ரைக பரோ பவ (66)

விசேட ஞானத்தை விடுத்து, பற்றில்லாததும், சத்தே வடிவாயுள்ளதும் எதுவோ, அது ஒன்றாயிருப்பதும், பெரிய ரூபமுள்ளதுமாம். அதைச் சத்தினுடைய பதமாக அறிகின்றார்கள். இது கால சத்தை, இது கலாசத்தை, இது வத்து சத்தை என்று சொல்லப்பட்ட வேற்றுமையறிவை விடுத்து, சத்து ஒன்றையே முக்கியமாகக் கொண்டிருப்பாயாக.

(அ) அந்த சத் பதத்தையே பற்றி நிற்கவேண்டுமெனக் கூறுகின்றார்—

सत्तासामान्यमेवैकं भावयन्केवलं विभुः ।
परिपूर्णः परानन्दि तिष्टापूरितदिग्भरः ।। ६७ ॥

" ஸத்தா ஸாமான்யமேவைகம் பாவயன் கேவலம் விபு:
பரிபூர்ண: பரானந்தி திஷ்டாபூரித திக்பர: " (67)

ஒப்பற்றதும் பொதுமையானதுமான சத்து ஒன்றையே தியானம் செய்பவனும், வியாபகமானவனும், எங்குமுள்ளவனும், மேலானவானந்தமுள்ளவனும் எல்லாத் திசைகளிலும் நிறம்பியவனுமாக நிற்பாய்.

सत्तासामान्यपर्यन्ते यत्तत्कलनयोज्झितम् ।
पदमाद्यमनाद्यन्तं तस्य बीजं न विद्यते ॥ ६८ ॥

" ஸத்தா ஸாமான்யபர்யந்தே யத்தத் கலனயோஜ்ஜிதம்
பதமாத்ய மனாத்யந்தம் தஸ்ய பீஜம் ந வித்யதே " (68)

சத்தா சாமான்யத்தின் இறுதி பர்யந்தம் விஷயவுணர்வால் விடுபட்ட யாதொரு அனுபவமுளதோ அது முதலீறற்ற முதற்பதமாகின்றது. அதற்குக் காரணம் எதுவும் இல்லை.

(அ) அதையே நிர்விகல்பமென்றும், துக்கமற்றதென்றும் கூறுகின்றார்—

तत्र संलीयते संविन्निर्विकल्पं च तिष्ठति ।
भूयो न वर्तते दुःखे तत्र लब्धपदः पुमान् ॥ ६९ ॥

“ தத்ர ஸம்லீயதே ஸம்விந்நிர்விகல்பஞ்ச திஷ்டதி
பூயோ ந வர்ததே து:கே தத்ர லப்த பத: புமாந்” (69)

அந்த சத்பதத்தில் சம்வித் வடிவ விகல்ப ஞானம் லயமடைகின்றது. அந்த சத்பதம் விகல்பமற்றதாகவே இருக்கின்றது. அதை அடைந்த புருஷன் மீண்டும் துக்கத்தில் திரும்புவதில்லை.

(அ) அந்த சத்பதமே எல்லாவற்றிற்கும் காரணமென்று இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

तद्धेतुः सर्वभूतानां तस्य हेतुर्न विद्यते ।
स सारः सर्वसाराणां तस्मात्सारो न विद्यते । ७० ॥
तस्मिंश्चिद्दर्पणे स्फारे समस्ता वस्तुदृष्टयः ।
इमास्ताः प्रतिबिम्बन्ति सरसीव तटद्रुमाः ॥ ७१ ॥

“ தத்ஹேது: ஸர்வபூதாநாம் தஸ்ய ஹேதுர் ந வித்யதே
ஸ: ஸார: ஸர்வஸாராணாம் தஸ்மாத் ஸாரோ ந வித்யதே ” (70)

தஸ்மின்ஸ்சித்தர்பணே ஸ்பாரே ஸமஸ்தா வஸ்துத்ருஷ்டய:
இமாஸ்தா: ப்ரதிபிம்பந்தி ஸரஸீவ தடத்ருமா: (71)

அந்த சத்தொன்றே எல்லா ஜீவர்களுக்கும் காரணமாம், அதற்குக் காரணம் எதுவுமில்லை. பலமுள்ள எல்லாவற்றிற்கும் அது பலமுள்ளதாம். அதைக்காட்டிலும் பலமுள்ளது எதுவும் இல்லை. தடாகத்தில் கரையிலுள்ள விருக்ஷங்கள் பிரதிபலித்துக் காணப்படுவது போல் இந்த

எல்லா நாமரூபவஸ்துக்களின் தோற்றங்கள் எவையோ, அவைகள் விஸ்தாரமான சிதான்மாவாகிய கண்ணாடியின் கண் பிரதிபிம்பித்துக் காணப்படுகின்றன.

(அ) அந்த சத்பதத்தை அறிந்தால் சித்தசாந்தி பெற்று மோக்ஷமடைவன் எனக் கூறுகின்றார்—

तदमलमरजं तदात्मतत्त्वं तदवगतावुपशान्तिमेति चेतः।
अवगतविगतैकतत्स्वरूपो भवभयमुक्तपदोऽसि सम्यगेव॥

" ததமல மரஜம் ததாத்ம தத்வம்
ததவகதாவுபசாந்தி மேதி சேத:
அவகத விகதைக தத்ஸ்வரூபோ
பவபயமுக்த பதோऽஸி ஸம்யகேவ" (72)

அந்த சத்பதமானது மலமற்றதும் அழுக்கற்றதுமாம். அதுவே ஆன்ம தத்துவமாம். அதை அறிந்தபொழுது சித்தமானது மிகச் சாந்தியை அடைகின்றது. அறியப்பட்டதிலும் அறியப்படாததிலும் ஒன்றாகவே கலந்து நின்ற அந்தத் தத்துவ ஸ்வரூபனான நீ நன்றாக பிறவி பயத்தினின்றும் நீங்கிய பதத்தை அடைந்தவனாகின்றாய்.

(அ) துக்க நாசத்திற்குச் சொன்ன அப்பியாசங்களைச் செய்வானாயின் விரைவில் அந்த சத்பதத்தை அடைவான் எனக் கூறுகின்றார்—

एतेषां दुःखबीजानां प्रोक्तं यद्यन्मयोत्तरम्।
तस्य तस्य प्रयोगेण शीघ्रं तत्प्राप्यते पदम्॥ ७३॥

" ஏதேஷாம் துக்க பீஜானாம் ப்ரோக்தம் யத்யன்மயோத்தரம்
தஸ்ய தஸ்ய ப்ரயோகேண சீக்ரம் தத் ப்ராப்யதே பதம்" (73)

சரீரம், சித்தம், பிராணனைசைவு, வாசனை, திடபாவனை முதலிய இந்த துக்க காரணங்களுக்கு எந்த எந்த பதில் என்னால் சொல்லப்பட்டதோ அததனுடைய அப்யாசத்தால் அந்தச் சத்வடிவ ஆன்ம பதத்தை புருடன் விரைவிலடைகின்றான்.

(அ) அப்பியாச வேற்றுமையால் பயனும் வேற்றுமைப்படும் என நான்கு மந்திரங்களால் கூறுகின்றார்—

सत्तासामान्यकोटिस्थे द्रागित्येव पदे यदि ।
पौरुषेण प्रयत्नेन बलात्संत्यज्य वासनाम् ॥ ७४ ॥

स्थितिं बध्नासि तत्त्वज्ञ क्षणमप्यक्षयात्मिकाम् ।
क्षणेऽस्मिन्नेव तत्साधु पदमासादयस्यलम् ॥ ७५ ॥

सत्तासामान्यरूपे वा करोषि स्थितिमादरात् ।
तत्किंचिदधिकेनेह यत्नेनाप्नोषि तत्पदम् ॥ ७६ ॥

संवित्तत्त्वे कृतध्यानो निदाघ यदि तिष्ठसि ।
तद्यत्नेनाधिकेनोच्चैरासादयसि तत्पदम् ॥ ७७ ॥

"ஸத்தா ஸாமான்ய கோடிஸ்தே த்ராகித்யேவ பதே யதி
பௌருஷேண ப்ரயத்நேந பலாத் ஸம்த்யஜ்ய வாஸனாம்" (74)

"ஸ்திதிம் பத்னாஸி தத்வஜ்ஞ க்ஷணமப்யக்ஷயாத்மிகாம்
க்ஷணேऽஸ்மின்னேவ தத்ஸாது பதமாஸாதயஸ்யலம்" (75)

"ஸத்தா ஸாமான்ய ரூபேவா கரோஷி ஸ்திதிமாதராத்
தத்கிஞ்சிததிகேனேஹ யத்னேனாப்னோஷி தத்பதம்" (76)

"ஸம்வித் தத்வே க்ருதத்யானோ நிதாக யதி திஷ்டஸி
தத்யத்னேனாதிகேனோச்சை ராஸாதயஸி தத் பதம்" (77)

ஏ தத்துவத்தை யறிந்தவனே ! புருட முயற்சியால் வாசனைகளை வலுவிற்றுறந்து விரைந்து சத் பதத்தின் எல்லையிலேயே யிற்பாயாயின், நீ க்ஷணகாலமாயினும் அப்பதத்தில் அழிவற்ற ஸ்திதியையடைவாய். இந்த க்ஷணகாலத்திலேயே அந்த நல்ல பதத்தை பூரணமாய் அடைந்தவனாகிறாய். அல்லது பொதுமையான சத்வடிவத்தில் அன்போடு நிலைத்தலைச் செய்வாயாயின் அதைக்காட்டிலும் இந்த இலட்சியத்தில் சிறிது அதிக முயற்சியால் அந்தப் பதத்தை அடைவாய். ஏ பாபமற்றவனே ! சம்வித்வடிவ புத்தி தத்துவத்தில் தியானத்தைச் செய்பவனாக இருப்பாயாயின் அதைக்காட்டிலும் மிக்க முயற்சியால் அந்த ஆன்ம பதத்தைத் அடைவாய்.

(அ) வாசனை, தத்துவஜ்ஞானம், மனோநாசமாகிய மூன்றும் ஒன்றுக்கொன்று காரணமானதால் தனித்தனியே நாசமாகாதெனை நான்கு மந்திரங்களால் கூறுகின்றார்—

वासनासंपरित्यागे यदि यत्नं करोषि भोः ।
यावद्विलीनं न मनो न तावद्वासनाक्षयः ॥ ७८ ॥
न क्षीणा वासना यावच्चित्तं तावन्न शाम्यति ।
यावन्न तत्त्वविज्ञानं तावच्चित्तशमः कुतः ॥ ७९ ॥
यावन्न चित्तोपशमो न तावत्तत्त्ववेदनम् ।
यावन्न वासनानाशस्तावत्तत्त्वागमः कुतः ।
यावन्न तत्त्वसंप्राप्तिर्न तावद्वासनाक्षयः ॥ ८० ॥
तत्त्वज्ञानं मनोनाशो वासनाक्षय एव च ।
मिथः कारणतां गत्वा दुःसाधानि स्थितान्यतः ॥ ८१ ॥

" வாஸனா ஸம்பரித்யாகே யதி யத்னம் கரோஷி போ:
யாவத்விலீனம் ந மனோ ந தாவத் வாஸனாக்ஷய: " (78)

" ந க்ஷீணா வாஸனா யாவச் சித்தம் தாவந்ந ஶாம்யதி
யாவந் ந தத்வவிஜ்ஞானம் தாவச்சித்தஶம: குத: " (79)

" யாவந் ந சித்தோபஶமோ ந தாவத் தத்வ வேதனம்
யாவந் ந வாஸனா நாஶ: தாவத் தத்வாகம: குத: " (80)

" யாவந் ந தத்வ ஸம்ப்ராப்திர் ந தாவத் வாஸனா க்ஷய:
தத்வஜ்ஞான மனோ நாஶோ வாஸனாக்ஷய ஏவச " (81)

" மித: காரணதாம் கத்வா து:ஸாதானி ஸ்திதான்யத: "

ஏ முனிவனே! வாசனையை நீக்கும் விஷயத்தில் முயற்சியைச்செய்வாயாயின் எது பரியந்தம் மனம் நாசமடைவதில்லையோ, அது காலபரியந்தம் வாசனை நாசமடைவதில்லை. வாசனை எதுபரியந்தம் நாசமாவதில்லையோ, அதுபரியந்தம் சித்தம் அடங்குவதில்லை. எதுபரியந்தம் தத்துஞானமுண்டாவதில்லையோ, அதுபரியந்தம் சித்தசாந்தி எவ்வாறுண்டாம்? எது பரியந்தம் சித்தசாந்தி ஏற்படுவதில்லையோ, அது பரியந்தம் தத்துவஞானமுண்டாவதில்லை. எதுபரியந்தம் வாசனையின் நாசமேற்படுவதில்லையோ அதுபரியந்தம் தத்துவஞானமுண்டாவதில்லை. எதுபரியந்தம் தத்துவஞானமுண்டாவதில்லையோ அதுபரியந்தம் வாசனை நாசமடைவதில்லை.

தத்வஞானம் மனோநாசம், வாசனா நாசம் ஆகிய இவைகள் ஒன்றையடக்கும் பொழுது மற்றொன்றின் தோற்றமும் மற்றதை அடக்கும் பொழுது இன்னமொன்றின் தோற்றமும் உளதாகி ஒன்றற்கொன்று காரணமாயிருக்குந்தன்மையை அடைந்து இருப்பதால், இவ்வகளை அடக்குவது மிகக் கடினமாம்.

(அ) உபாயத்துடன் மூன்றையும் ஒன்றாகவே அப்யசிக்கின், அதுவே இருதய முடிச்சுக்கள் அறுந்து சிறந்த பதத்தையடையும் வழியாமென மூன்று மந்திரங்களால் கூறுகின்றார்—

**भोगेच्छां दूरतस्त्यक्त्वा त्रयमेतत्समाचर ॥ ८२ ॥**
**वासनाक्षयविज्ञानमनोनाशा महामते ।**
**समकालं चिराभ्यस्ता भवन्ति फलदा मताः ॥ ८३ ॥**
**त्रिभिरेभिः समभ्यस्तैर्हृदयग्रन्थयो दृढाः ।**
**निःशेषमेव त्रुट्यन्ति बिसच्छेदाद्गुणा इव ॥ ८४ ॥**

“ போகேச்சாம் தூரதஸ்த்யக்த்வா த்ரயமேதத் ஸமாசர
வாஸனாக்ஷய விஜ்ஞானமனோநாஶா மஹாமதே” (82)
“ ஸமகாலம் சிராப்யஸ்தா பவந்தி பலதா மதா:
த்ரிபிரேபி: ஸமப்யஸ்தைர் ஹ்ருதயக்ரந்தயோ த்ருடா: (83)
“நி:ஶேஷமேவ த்ருட்யந்தி பிஸச்சேதாத் குணா இவ” (84)

ஏ தத்துவத்தை அறிந்தவனே! விஷயபோகத்திலுள்ள ஆசையைத் தூரத்தில் விடுத்து மூன்றையும் ஒரே காலத்தில் அப்யசிப்பாய். ஏ மிக்க அறிவுள்ளவனே! வாசனாநாசம் தத்துவஞானம் மனோநாசமாகிய இவைகள் இடைவிடாது நீண்டகாலம் அப்யசிக்கப்பட்டவைகளாயின் பலனைக்கொடுப்பவைகளாகின்றன. நன்றாய் அப்யசிக்கப்பட்ட இந்த வாசனாநாசம், தத்துவஞானம் மனோநாசமாகிய மூன்றுகளால் உறுதியான இருதய முடிச்சுக்கள் தாமரைத்தண்டையறுப்பதால் அதன் நூல்கள் அறுபடுவது போல் மீதமின்றி நாசமுறுகின்றன.

(அ) வாசனாநாசம் பிராணநிரோதமாகிய இரண்டும் சித்தநாசத்திற்கு உபாயங்கள் என இரண்டு மந்திரங்களால் கூறுகின்றார்—

वासनासंपरित्यागसमं प्राणनिरोधनम् ।
विदुस्तत्त्वविदस्तस्मात्तदप्येवं समाहरेत् ॥ ८५ ॥
वासनासंपरित्यागाच्चित्तं गच्छत्यचित्तताम् ।
प्राणस्पन्दनिरोधाच्च यथेच्छसि तथा कुरु ॥ ८६ ॥

“ வாஸனா ஸம்பரித்யாகஸமம் ப்ராணநிரோதனம்
விதுஸ்தத்வ விதஸ்தஸ்மாத் ததப்யேவம் ஸமாஹரேத’(85)
“ வாஸனா ஸம்பரித்யாகாச் சித்தம் கச்சத்யசித்ததாம்
பிராணஸ்பந்த நிரோதாச்ச யதேச்சஸி ததா குரு ” (86)

தத்துவத்தையறிந்தவர்கள் வாசனையின் நாசத்திற்குச் சமமாக பிராண நிக்கிரகத்தையும் அறிகின்றார்கள். ஆகையால் அதையும் இவ்வாறு அடக்கவேண்டும். வாசனையைக் கெடுப்பதால் சித்தம் நாசத்தையடைகின்றது. பிராணனைத் தடுப்பதாலும் சித்தம் நாசத்தையடைகின்றது. நீ இவற்றுள் எதைச் செய்ய விரும்புகிறாயோ அதைச் செய்வாயாக.

(அ) பிராணனது அசைவைத்தடுக்க உபாயம் கூறுகின்றார்—

प्राणायामदृढाभ्यासैर्युक्त्या च गुरुदत्तया ।
आसनाशनयोगेन प्राणस्पन्दो निरुध्यते ॥ ८७ ॥
निःसङ्गव्यवहारत्वाद्भवभावनवर्जनात् ।
शरीरनाशदर्शित्वाद्वासना न प्रवर्तते ॥ ८८ ॥
यः प्राणपवनस्पन्दश्चित्तस्पन्दः स एव हि ।
प्राणस्पन्दजये यत्नः कर्तव्यो धीमतोच्चकैः ॥ ८९ ॥

“ ப்ராணாயாம த்ருடாப்யாஸைர் யுக்த்யா ச குருதத்தயா
ஆஸனாஸனயோகேந ப்ராணஸ்பந்தோ நிருத்யதே ” (87)

" நி:ஸங்கவ்யவஹாரத்வாத் பவபாவனவர்ஜனாத்
சரீர நாமதர்மித்வாத் வாஸனா ந ப்ரவர்த்தே " (88)

" ய: ப்ராணபவனஸ்பந்தஸ் சித்தஸ்பந்த: ஸ ஏவஹி
ப்ராணஸ்பந்தஜயே யத்ன: கர்தவ்யோ தீமதோச்சகை:"(89)

ஆசாரியனது உபதேசவழியாலும், தனது யுக்தியாலும் ஆசனப்பழக்கம். ஆகாரநியமமாகியவற்றாலும் பிராணாயாமத்தை உறுதியாகப் பழகுவதாலும், பிராணசலமானது தடுக்கப்படுகிறது.

பற்றின்றித் தொழிலைச் செய்வதாலும் பிறவியை நினையாதிருப்பதாலும், சரீரநாசத்தைக் காண்பதாலும், வாசனை வெளிப்படுவதில்லை.

பிராணனாகிய காற்றினசைவு எதுவோ அதுவே சித்தத்தினசைவாகும். ஆகையால் பிராண சலனத்தை அடக்கும் விஷயத்தில் புத்திமானால் மிக்க முயற்சி செய்யத்தக்கது.

(அ) நல்ல யுக்தியால் மனதை வென்று ஆன்மாவைப் பெறவேண்டுமெனக் கூறுகின்றார்—

**न शक्यते मनो जेतुं विना युक्तिमनिन्दिताम् ।**
**शुद्धां संविदमाश्रित्य वीतरागः स्थिरो भव ॥ ९० ॥**

" ந சக்யதே மனோ ஜேதும் வினா யுக்திமனிந்திதாம்
ஶுத்தாம் ஸம்விதமாஶ்ரித்ய வீதராக: ஸ்திரோ பவ"(90)

குருசாஸ்திரங்களால் அறிவித்ததும் நிந்தையற்றதுமான நல்லயுக்தியை விடுத்து வேறுவழியில் மனதை வெற்றிகொள்ளமுடியாது. ஆகையால் ஆசையை அறவே விடுத்து சுத்தமான சம்வித்வடிவ ஞானத்தைப்பற்றி உறுதியுள்ளவனாக இருப்பாய்.

(அ) விஷயப்பற்றை விடுத்து ஆன்மாவை உணர்ந்து இருதயத்தில் நிலைபெறவேண்டுமெனக் கூறுகின்றார்—

संवेद्यवर्जितमनुत्तममाद्यमेकं
संवित्पदं विकलनं कलयन्महात्मन् ।
हृद्येव तिष्ठ कलनारहितः क्रियां तु
कुर्वन्नकर्तृपदमेत्य शमोदितश्रीः ॥ ९१ ॥

" ஸம்வேத்ய வர்ஜித மனுத்தம மாத்யமேகம்
ஸம்வித்பதம் விகலனம் கலயன் மஹாத்மன்
ஹ்ருத்யேவ திஷ்ட கலனாரஹித: க்ரியாந்து
குர்வன்னகாத்ரு பதமேத்ய ஶமோதித ஶ்ரீ: " (91)

ஏ மகாத்மாவே! புலனறிவிற்கு எட்டாததும், மிகச் சிறந்ததும், முதன்மையானதும், ஒன்றானதும், விசேஷ ஞானத்தால் அறியப்படுவதுமான ஞானபதத்தை அறிந்தவனும், அடக்கத்தாலுண்டான ஞானமுள்ளவனுமான நீ விஷயப்பற்றை விடுத்தவனாய் கருமத்தைச் செய்கின்றவனாயினும் அகர்த்தா என்ற பதவியைப்பெற்று இருதயத்திலேயே நிற்பாயாக.

(அ) மனிதப் பிறவியின் பயன் சித்த நாசமே எனக் கூறுகின்றார்—

मनागपि विचारेण चेतसः स्वस्य निग्रहः ।
पुरुषेण कृतो येन तेनाप्तं जन्मनः फलम् ॥ ९२ ॥

" மனாகபி விசாரேண சேதஸ: ஸ்வஸ்ய நிக்ரஹ:
புருஷேண க்ருதோ யேந தேனாப்தம் ஜந்மந: பலம் " (92)

ஆத்மானாத்ம விசாரணையால் தனது சித்தமானது எந்த புருடனால் சிறிதாயினும் தடுக்கப்பட்டதாமோ; அவனால் மனிதப்பிறவியின் பலன் அடையப்பட்டதாம்.

|| ஓம் சாந்தி: ||

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## ॥ अथ पंचमोऽध्यायः ॥

## ஐந்தாவது அத்தியாயம்.

गच्छतस्तिष्ठतो वापि जाग्रतः स्वपतोऽपि वा ।
न विचारपरं चेतो यस्यासौ मृत उच्यते ॥ १ ॥

" கச்சதஸ்திஷ்டதோ வாபி ஜாக்ரத: ஸ்வபதோऽபி வா
ந விசாரபரம் சேதோ யஸ்யாஸௌ ம்ருத உச்யதே " (1)

செல்லும்பொழுதும், நிற்கும்பொழுதும், விழிப்புள்ள பொழுதும், உறங்கும்பொழுதும், எவனுடைய சித்தம் ஆன்ம விசாரணையின்றியதாமோ, அவன் இறந்தவன் என்று சொல்லப்படுகின்றான்.

सम्यग्ज्ञानसमालोकः पुमाञ्ज्ञेयसमः स्वयम् ।
न बिभेति न चादत्ते वैवश्यं न च दीनताम् ॥ २ ॥

" ஸம்யக்ஜ்ஞான ஸமாலோக: புமாஞ்ஞேய ஸம: ஸ்வயம்
ந பிபேதி நசாதத்தே வைவஶ்யம் நச தீனதாம் " (2)

நானே சாஸ்திர ஞானமுள்ளவனும், பூர்ணமான ஆன்மாவின் ஞானமுள்ளவனும், அறியவேண்டிய பிரம்மத்தை அறிந்தவனுமான புருடன் எதையும் கண்டு பயப்படுவதில்லை. ஒருவன் கொடுக்கும் தானத்தை விரும்பி ஏற்றுக்கொள்வதுமில்லை. ஒருவனுக்கு அடிமையாவதுமில்லை. ஏழை போன்றும் இருப்பதுமில்லை.

अपवित्रमपथ्यं च विषसंसर्गदूषितम् ।
भुक्तं जरयति ज्ञानी क्लिन्नं नष्टं च मृष्टवत् ॥ ३ ॥

"அபவித்ரமபத்யஞ்ச விஷ ஸம்ஸர்க தூஷிதம்
புக்தம் ஜரயதிஜ்ஞானீ க்லின்னம் நஷ்டஞ்ச மருஷ்டவத்"(3)

முனியானவன், சுத்தமில்லாததும், பத்யமில்லாததும், விஷத்தின் சேர்க்கையால் வெறுக்கப்பட்டதும், ஊசியதும் கெட்டதுமான அன்னத்தை பாயஸத்தோடு சாப்பிடும், அன்னத்தைப்போன்று சாப்பிட்டு ஜீரணம் செய்கின்றான்.

सङ्गत्यागं विदुर्मोक्षं सङ्गत्यागादजन्मता ।
सङ्गं त्यज त्वं भावानां जीवन्मुक्तो भवानघ ॥ ४ ॥

"ஸங்கத்யாகம் விதுர்மோக்ஷம் ஸங்கத்யாகாதஜன்மதா
ஸங்கம் த்யஜ த்வம் பாவானாம் ஜீவன்முக்தோ பவானக"(4)

ஏ நோயற்றவனே! விஷயசங்கத்தை விடுவது மோக்ஷமென அறிகின்றார்கள். சங்கத்தை விடுவதால் பிறவியின் நீக்கமாம். ஆகையால் நீ விஷயங்களின் சேர்க்கையை விடுத்து ஜீவன்முக்தனாவாய்.

भावाभावे पदार्थानां हर्षामर्षविकारदा ।
मलिना वासना यैषा सा सङ्ग इति कथ्यते ॥ ५ ॥

"பாவா பாவே பதார்தானும் ஹர்ஷாமர்ஷ விகாரதா
மலினு வாஸனு யைஷா ஸா ஸங்க இதி கத்யதே" (5)

சித்தத்திற்கு பதார்த்தங்களுடைய இருப்பு இன்மைகள் சந்தோஷம் ஸகியாமை இவைகளையுண்டாக்கிச் சலனத்தை எது கொடுப்பதோ, இதுவே மலின வாசனையாம், இதுவே சங்கமென்று சொல்லப்பட்டது.

जीवन्मुक्तशरीराणामपुनर्जन्मकारिणी ।
मुक्ता हर्षविषादाभ्यां शुद्धा भवति वासना ॥ ६ ॥

" ஜீவன்முக்த பரீராணு மபுனர்ஜன்ம காரிணீ
முக்தா ஹர்ஷவிஷாதாப்யாம் பரூத்தா பவதி வாஸநா " (6)

ஜீவன்முக்தர்களுடைய வாசனையானது மீண்டும் பிறவியைத் தராததும், சுகதுக்கங்களினின்றும் விடுபட்டதுமாய் சுத்தமுள்ளதாக இருக்கிறது.

दुःखैर्न ग्लानिमायासि हृदि हृष्यसि नो सुखैः ।
आशावैवश्यमुत्सृज्य निदाघासङ्गतां व्रज ॥ ७ ॥

" து:கைர் ந க்லானிமாயாஸி ஹ்ருதி ஹ்ருஷ்யஸி நோ ஸுகை:
ஆபாவைவப்ய முத்ஸ்ருஜ்ய நிதாகாஸங்கதாம் வ்ரஜ" (7)

ஏ பாபமற்றவனே! துக்கங்களால் சோகத்தையடையாமலும், சுகங்களால் இருதயத்தில் சந்தோஷத்தையடையாமலும், ஆசைக்கு அடிமையாயிருப்பதையும் விடுத்து, அசங்க நிலையை அடைவாயாக.

दिक्कालाद्यनवच्छिन्नमदृष्टोभयकोटिकम् ।
चिन्मात्रमक्षयं शान्तमेकं ब्रह्मास्मि नेतरत् ॥ ८ ॥

" திக்காலாத்யனவச்சின்ன மத்ருஷ்டோபய கோடிகம்
சின்மாத்ர மக்ஷயம் பாந்த மேகம் ப்ரஹ்மாஸ்மி நேதரத்(8)

திசை காலமிவைகளால் அளவிடப்படாததும், ஆதி அந்தம் காணப்படாததும், சித்தே வடிவானதும், நாசமற்றதும், சாந்தமானதும், ஒன்றானதுமான பிரம்மமே ஆகின்றேன். வேறு சிறிதுமில்லை.

इति मत्वाहमित्यन्तर्मुक्तामुक्तवपुः पुमान् ।
एकरूपः प्रशान्तात्मा मौनी स्वात्मसुखो भव ९ ॥

" இதி மத்வாஹமித்யந்தர் முக்தாமுக்தவபு: புமான்
ஏகரூப: ப்ரஶாந்தாத்மா மௌனீ ஸ்வாத்ம ஸுகோ பவ(9)

இவ்வாறு நானே பிரம்ம வடிவாகிய புருஷன் என்று நினைத்து உள்ளத்தின்கண் சரீரத்திலுள்ள பற்றை விடுத்துச் சரீரத்திலேயே வசிப்பினும், தனிமையாயுள்ளவனும் மிக்க வடக்கமுள்ள மனமுள்ளவனும், மௌனமுள்ளவனுமான நீ உனது ஆன்மசுகமுள்ளவனாக இருப்பாய்.

नास्ति चित्तं न चाविद्या न मनो न च जीवकः ।
ब्रह्मैवैकमनाद्यन्तमब्धिवत्प्रविजृम्भते ।। १० ।।

" நாஸ்தி சித்தம் ந சாவித்யா ந மனோ நச ஜீவக:
ப்ரஹ்மைவைக மனாத்யந்த மப்திவத் ப்ரவிஜ்ரும்பதே "(10)

சித்தமென்பதுமில்லை, அவித்தை என்பதுமில்லை, மனமென்பதுமில்லை, ஜீவனென்பதுமில்லை. கடல் போன்று ஆதியந்தமற்றதாயும் ஒன்றாயுமுள்ள பிரம்மமொன்றே எல்லாமாய் விரிகின்றது.

देहे यावदहंभावो दृश्येऽस्मिन्यावदात्मता ।
यावन्ममेदमित्यास्था तावच्चित्तादिविभ्रमः ।। ११ ।।

" தேஹே யாவதஹம்பாவோ த்ருஶ்யேऽஸ்மின் யாவதாத்மதா
யாவன்மமேத மித்யாஸ்தா தாவச்சித்தாதி விப்ரம: " (11)

இந்த தேகத்தில் எதுபரியந்தம் நான் என்ற எண்ணமும், ஆன்மாவென்ற அபிமானமும், இது என்னுடையது என்ற நிச்சயமுமிருக்கிறதோ, அதுபரியந்தம், சித்தம் வாசனை சுக முதலிய சுற்றுதலானது இருந்தே தீரும்.

अन्तर्मुखतया सर्वं चिद्वह्नौ त्रिजगत्तृणम् ।
जुह्वतोऽन्तर्निवर्तन्ते मुने चित्तादिविभ्रमाः ।। १२ ।।

“ அந்தர்முகதயா ஸர்வம் சித்வஹ்னௌ த்ரிஜகத் த்ருணம்
ஜுஹ்வதோ(அ)ந்தர்நிவர்த்தந்தே முனே சித்தாதிவிப்ரமா:” (12)

ஏ முனிவனே ! உள்விழிப்பார்வையால் எல்லாமாயுள்ள மூன்றுலகமாகிய துரும்பை சிதாத்மாவாகிய அக்னியில் ஓமம் செய்த புருஷனுக்குச் சித்த முதலியவற்றின் சேட்டைகள் உள்ளத்தின்கண்ணேயே நிவர்த்தியாகின்றன.

चिदात्मास्मि निरंशोऽस्मि परापरविवर्जितः ।
रूपं स्मरन्निजं स्फारं मा स्मृत्या संमितो भव ॥ १३ ॥

“ சிதாத்மாஸ்மி நிரம்ஸோ(அ)ஸ்மி பராபர விவர்ஜித:
ரூபம் ஸ்மரன் நிஜம் ஸ்பாரம் மா ஸ்ம்ருத்யா ஸம்மிதோ பவ ” (13)

உயர்வு தாழ்வற்ற நான் சிதாத்மாவாகவிருக்கின்றேன், அவயவமற்றவனுமிருக்கின்றேன் என்று தனது வியாபக வடிவைத் தியானிக்கின்ற நீ நினைவோடு சேராதவனாக இருப்பாய்.

अध्यात्मशास्त्रमन्त्रेण तृष्णाविषविषूचिका ।
क्षीयते भावितेनान्तः शरदा मिहिका यथा ॥ १४ ॥

“ அத்யாத்ம ஶாஸ்த்ர மந்த்ரேண த்ருஷ்ணாவிஷவிஷூசிகா
க்ஷீயதே பாவிதேனாந்த: ஶரதா மிஹிகா யதா ” (14)

வேனிற்காலத்தில் எவ்வாறு பனி நாசமடைகிறதோ அவ்வாறு ஆன்மசாஸ்திர மந்திரத்தை செபிப்பதால், கொடிய விஷம்போன்ற ஆசையாகிய விசூசிகா நோயானது உள்ளத்தின் கண்ணேயே நாசமடைகிறது.

परिज्ञाय परित्यागो वासनानां य उत्तमः ।
सत्तासामान्यरूपत्वात्तत्कैवल्यपदं विदुः ॥ १५ ॥

“ பரிஜ்ஞாய பரித்யாகோ வாஸனானாம் ய உத்தம:
ஸத்தாஸாமான்ய ரூபத்வாத் தத்கைவல்ய பதம் விது:”(15)

எந்த உத்தம புருடன் வாசனைகளை நன்றாய் அறிந்து முழுவதையும் விட்டுவிடுகின்றானோ, அவன் பொதுமையான சத்வடிவாகவே இருப்பதால் அதை மோக்ஷமென்று அறிகின்றார்கள்.

यत्रास्ति वासना लीना तत्सुषुप्तं न सिद्धये ।
निर्बीजा वासना यत्र तत्तुर्यं सिद्धिदं स्मृतम् ॥ १६ ॥

“ யத்ராஸ்தி வாஸனா லீனா தத்ஸுஷுப்தம் ந ஸித்தயே
நிர்பீஜ வாஸனா யத்ர தத்துர்யம் ஸித்திதம் ஸ்ம்ருதம் ”(16)

எந்த விடத்தில் வாசனை லயமடைகின்றதோ, அது சுழுப்தி எனப்படும். அந்த லீனமான வாசனை மோக்ஷவடைவின் பொருட்டு ஆவதில்லை. எந்த விடத்தில் வாசனை அடியோடு நாசஞ் செய்யப்பட்டதாமோ, அது துரிய வடிவ சித்தியைக் கொடுப்பதாகக் கருதப்பட்டது.

वासनायास्तथा वह्नेर्ऋणव्याधिद्विषामपि ।
स्नेहवैरविषाणं च शेषः स्वल्पोऽपि बाधते ॥ १७ ॥

“ வாஸனாயாஸ்ததா வஹ்னேர்ருணவ்யாதித்விஷாமபி
ஸ்னேஹவைரவிஷாணம் ச சேஷ: ஸ்வல்போபி பாததே ”
(17)

வாசனை, நெருப்பு, கடன், வியாதி, சத்ரு, பிரியம், பகை, கொம்பு இவைகளுக்குள் யாதாமொன்று நாசமுறாது சிறிது மீதமிருப்பினும் புருடனுக்குத் துன்பத்தையே தருவதாகும்

निर्दग्धवासनाबीजः सत्तासामान्यरूपवान् ।
सदेहो वा विदेहो वा न भूयो दुःखभाग्भवेत् ॥ १८ ॥

" நிர்தக்த வாஸனா பீஜ: ஸத்தா ஸாமான்ய ரூபவான்
ஸதேஹோவா விதேஹோவா ந பூயோ து:கபாக்பவேத்"
(18)

எந்தப் புருடன் வாசனையின் காரணத்தை அடியோடு கெடுத்தவனும், பொதுமையான சத்தே வடிவானவனுமாக இருக்கின்றானோ; அவன் சீவன்முக்தனாயினும் சரியே, அல்லது விதேகமுக்தனாயினும் சரியே, மீண்டும் துக்கத்தை யடைவதில்லை.

एतावदेवाविद्यात्वं नेदं ब्रह्मेति निश्चयः ।
एष एव क्षयस्तस्या ब्रह्मेदमिति निश्चयः ॥ १९ ॥

" ஏதாவதேவாவித்யாத்வம் நேதம் ப்ரஹ்மேதி நிச்சய:
ஏஷ ஏவ க்ஷயஸ் தஸ்யா ப்ரஹ்மேதமிதி நிஶ்சய: " (19)

இந்தக் காணப்படுவது பிரம்மமன்று என்ற நிச்சயம் எதுவரையுளதோ அதுவரைக்கும் அஞ்ஞானம் இருந்தே தீரும். இந்தக் காணப்படுவது பிரம்மமே என்ற நிச்சயமாகிய இதுவே அந்த அவித்தையின் நாசமாம்.

ब्रह्म चिद्ब्रह्म भुवनं ब्रह्म भूतपरम्परा ।
ब्रह्माहं ब्रह्म चिच्छत्रुर्ब्रह्म चिन्मित्र बान्धवाः ॥ २० ॥

" ப்ரஹ்ம சித் ப்ரஹ்ம புவனம் ப்ரஹ்ம பூதபரம்பரா
ப்ரஹ்மாஹம் ப்ரஹ்ம சித் ஶத்ரு: ப்ரஹ்ம சின்
மித்ரபாந்தவா: " (20)

சித்தும் பிரம்மம், உலகமும் பிரம்மம், சீவர்களின் தொடர்பும் பிரம்மம், நானும் பிரம்மம், சத்துருவும் பிரம்மம், தோழர்களும் பந்துக்களும் சித்வடிவ பிரம்மமேயாம்.

ब्रह्मैव सर्वमित्येव भाविते ब्रह्म वै पुमान् ।
सर्वत्रावस्थितं शान्तं चिद्ब्रह्मेत्यनुभूयते ॥ २१ ॥

“ ப்ரஹ்மைவ ஸர்வமித்யேவ பாவிதே ப்ரஹ்மவை புமான்
ஸர்வத்ராவஸ்திதம் சாந்தம் சித்ப்ரஹ்மேத்யனுபூயதே”(21)

எல்லாம் பிரம்மமே என்று தியானிக்கின்ற புருடன் பிரம்மமேயாகின்றான். எங்கும் நிலைபெற்றதும், சாந்தமும், சித்தும், பிரம்மமென்றே அனுபவிக்கின்றான்.

असंस्कृताध्वगालोके मनस्यन्यत्र संस्थिते ।
या प्रतीतिरनागस्का तच्चिद्ब्रह्मास्मि सर्वगम् ॥ २२ ॥

“ அஸம்ஸ்க்ருதாத்வகாலோகே மனஸ்யன்யத்ர ஸம்ஸ்திதே
யாப்ரதீதி ரனாகஸ்கா தச்சித் ப்ரஹ்மாஸ்மி ஸர்வகம் ” (22)

உலகத்தில் பழக்கமில்லாத வழியில் செல்லுகின்றவர்களுடைய கண்கள் வேறு இடத்தில் வழியைத் தேடும் விஷயத்தில் நின்றபொழுது மனத்தில் இயற்கையாக யாதொரு ஞானமுண்டாகின்றதோ, அது எங்கும் நிறைந்த, பிரம்மமாம். அது நானாகின்றேன்.

प्रशान्तसर्वसंकल्पं विगताखिलकौतुकम् ।
विगताशेषसंरम्भं चिदात्मानं समाश्रय ॥ २३ ॥

“ ப்ரஶாந்த ஸர்வஸங்கல்பம் விகதாகில கௌதுகம்
விகதாசேஷ ஸம்ரம்பம் சிதாத்மானம் ஸமாஶ்ரய ” (23)

எல்லா சங்கற்பங்களற்றதும் எவ்வித சந்தோஷமில்லாததும் எவ்வித ஆடம்பரமில்லாததுமான சித்வடிவ ஆன்மாவைப் பற்றுக.

एवं पूर्णधियो धीराः समा नीरागचेतसः ।
न नन्दन्ति न निन्दन्ति जीवितं मरणं तथा ॥ २४ ॥

“ ஏவம் பூர்ணதியோ தீரா: ஸமா நீராகசேதஸ:
ந நந்தந்தி ந நிந்தந்தி ஜீவிதம் மரணம் ததா ” (24)

இவ்வாறு ஆன்மாவில் நிலைபெற்ற புத்தியுள்ளவர்களும் இராகத்துவேஷங்கள் முற்றிலும் விடுபட்ட மனமுள்ளவர்களும் ஸமபுத்தியுள்ளவர்களுமான தீரர்கள் உயிரோடு வாழ்ந்திருப்பதைக் குறித்துச் சந்தோஷப்படுகின்றார்களில்லை. அவ்விதமே மரணத்தைக்குறித்து துக்கப்படுகின்றார்களில்லை.

प्राणोऽयमनिशं ब्रह्मन्स्पन्दशक्तिः सदागतिः ।
सबाह्याभ்यन्तरे देहे प्राणोऽसावूर्ध्वगः स्थितः ॥ २५ ॥

“ப்ராணோயமனிஶம் ப்ரஹ்மன் ஸ்பந்தஶக்தி: ஸதாகதி:
ஸபாஹ்யாப்யந்தரே தேஹே ப்ராணோ஽ஸாவூர்த்வக:
ஸ்தித:” (25)

ஏ பிரம்மத்தை அறிந்தவனே! இந்த பிராணன் எப்பொழுதும் அசைக்குமாற்றலுள்ளதும், எப்பொழுதும் சென்றுகொண்டிருப்பதுமாம், ஆயினும் இந்த பிராணன் தேகத்தின் உள்ளிலும் வெளியிலும் மேல்நோக்கிச்செல்லும் இயல்புள்ளது.

अपानोऽप्यनिशं ब्रह्मन्स्पन्दशक्तिः सदागतिः ।
सबाह्याभ्यन्तरे देहे अपानोऽयमवाक्स्थितः ॥ २६ ॥

“அபானோऽப்யனிஶம் ப்ரஹ்மன் ஸ்பந்த ஶக்தி: ஸதாகதி:
ஸபாஹ்யாப்யந்தரே தேஹே அபானோ஽ய மவாக்ஸ்தித:”
(26)

ஏ பிரம்மத்தை அறிந்தவனே! அபானன் எப்பொழுதும் அசைக்கு மாற்றலுள்ளதும் சதா செல்லும் சுபாவமுள்ளதுமாம். ஆயினும் இந்த அபானன் தேகத்தினுள்ளிலும் வெளியிலும் கீழ்நோக்கிச் செல்லுமியல்புள்ளது.

जाग्रतः स्वपतश्चैव प्राणायामोऽयमुत्तमः ।
प्रवर्तते ह्यभिज्ञस्य तं तावच्छ्रेयसे शृणु ॥ २७ ॥

" ஜாக்ரத: ஸ்வபதஸ்சைவ ப்ராணாயாமோZயமுத்தம:
ப்ரவர்ததே ஹ்யபிஜ்ஞஸ்ய தம்தாவச்ச்ரேயஸே ஸ்ருணு " (27)

தத்துவஞானிக்கு விழித்திருக்கும் பொழுதும், தூங்கும் பொழுதும், இந்த மேலான பிராணாயாமமானது நடந்து கொண்டிருக்கிறது. ஆகையால் அந்த பிராணாயாமத்தை உனது நன்மையின் பொருட்டுக் கேட்டுக்கொள்வாயாக.

द्वादशाङ्गुलपर्यन्तं बाह्यमाक्रमतां तत ।
प्राणाङ्गनामा संस्पर्शो यः स पूरक उच्यते ॥ २८ ॥

" த்வாதஸாங்குல பர்யந்தம் பாஹ்யமாக்ரமதாம் தத:
ப்ராணாங்கநாமா ஸம்ஸ்பர்ஸோ ய: ஸ பூரக உச்யதே " (28)

பிராணன் வெளியில் பன்னிரண்டங்குல பரியந்தம் செல்லுகின்றது. பிறகு பிராணன் சரீரத்தினுள் பரிச உணர்வையுண்டுபண்ணி நிரப்பப்படுவது யாதோ அது பூரகப் பிராணாயாமமென்று சொல்லப்படுகிறது.

अपानश्चन्द्रमा देहमाप्याययति सुव्रत ।
प्राणः सूर्योऽग्निरथ वा पचत्यन्तरिदं वपुः ॥ २९ ॥

" அபானச்சந்த்ரமா தேஹமாப்யாயயதி சுவ்ரத
ப்ராண:சூர்யோZக்னிரதவா பசத்யந்தரிதம் வபு: " (29)

ஏ நல்ல விரதமுள்ளவனே ! அபானன் சந்திரனும், அபானனாகிய சந்திரன் சரீரத்தைப்போஷிக்கச் செய்கிறது. பிராணன் சூர்யனும், சுழுமுனை அக்னியாம், இந்த இரண்டும் சரீரத்தினுள் இருப்பனவாய் இந்த உடம்பை எரிக்கின்றன. அல்லது பக்குவம் செய்கின்றன.

प्राणक्षयसमीपस्थमपानोदयकोटिकम् ।
अपानप्राणयोरैक्यं चिदात्मानं समाश्रय ॥ ३० ॥

" ப்ராணக்ஷய ஸமீபஸ்தம் அபானோதய கோடிகம்
அபான ப்ராணயோரைக்யம் சிதாத்மானம் ஸமாஶ்ரய" (30)

பிராணநாசத்தின் சமீபத்திலுள்ளதும், அபானோத்பத்திக்கு. இடமாகவுள்ளதும், அபானப்பிராணன்களின் ஐக்யஸ்தானமானதும் சிதாத்மாவாம். அந்த சிதாத்மாவை பிராணாயாமத்தால் நன்றாய் பற்றுவாயாக.

अपानोऽस्तंगतो यत्र प्राणो नाभ्युदितः क्षणम् ।
कलाकलङ्करहितं तच्चित्तत्त्वं समाश्रय ॥ ३१ ॥

" அபானோऽஸ்தம் கதோ யத்ர ப்ராணோநாப்யுதித: க்ஷணம்
கலாகலங்க ரஹிதம் தச்சித் தத்வம் ஸமாஶ்ரய " (31)

எந்த விடத்தில் அபானனின் ஒடுக்கமும் பிராணனின் தோற்றமின்மையுமுளதாமோ அது க்ஷணம் முதலிய கால வேறுபாடற்ற சிதான்மாவாம், அதை நீ நன்கு பற்றுவாயாக.

नापानोऽस्तंगतो यत्र प्राणश्चास्तमुपागतः ।
नासाग्रगमनावर्तं तच्चित्तत्त्वमुपाश्रय ॥ ३२ ॥

" நாபானோऽஸ்தம் கதோயத்ர ப்ராணஶ்சாஸ்தமுபாகத:
நாஸாக்ரகமனாவர்த்தம் தச்சித்தத்வமுபாஶ்ரய " (32)

எந்த விடத்தில் அபானன் ஒடுங்குவதில்லையோ, பிராணன் மாத்திரம் இலயமடைகின்றதோ அதுவே நாசி நுனியை அடைந்த ஆன்மதத்துவமென நீ பற்றுக.

आभासमात्रमेवेदं न सन्नासज्जगत्त्रयम् ।
इत्यन्यकलनात्यागं सम्यग्ज्ञानं विदुर्बुधाः ॥ ३३ ॥

" ஆபாஸமாத்ர மேவேதம் ந ஸந்நாஸஜ்ஜகத்த்ரயம்
இத்யன்ய கலனுத்யாகம் ஸம்யக்ஜ்ஞானம் விதுர்புதா:" (33)

இந்தக் காணப்படுகின்ற மூவுலகமும் சத்துமன்று அசத்துமன்று, தோற்றமாத்திரமேயாம்— என்று பல் வேறு தோற்றங்களேயும் விடுத்திருப்பது சிறந்த ஞானமென்று புத்திமான்கள் அறிகின்றார்கள்.

आभासमात्रकं ब्रह्मंश्चित्तादर्शकलङ्कितम् ।
ततस्तदपि संत्यज्य निराभासो भवोत्तम ॥ ३४ ॥

" ஆபாஸமாத்ரகம் ப்ரஹ்மன் சித்தா தர்ஶ கலங்கிதம்
ததஸ்ததபி ஸம்த்யஜ்ய நிராபாஸோ பவோத்தம " (34)

ஏ பிரம்மத்தை அறிந்த உத்தமனே! சித்தமாகிய கண்ணுடியில் காணப்படும் உலகம் தோற்றமாத்திரமேயாய் மித்தையேயாம். ஆகையால் அதையும் விடுத்து பொய்த் தோற்றமற்றவனுக இருப்பாய்.

भयप्रदमकल्याणं धैर्यसर्वस्वहारिणम् ।
मनःपिशाचमुत्सार्य योऽसि सोऽसि स्थिरो भव ॥ ३५ ॥

" பயப்ரதம கல்யாணம் தைர்யஸர்வஸ்வ ஹாரிணம்
மன: பிஶாச முத்ஸார்ய யோऽஸி ஸோऽஸி ஸ்திரோ பவ"
(35)

பயத்தைக் கொடுப்பதும், நல்லதல்லாததும் தைர்யம் முதலிய நற்குணங்களேக் கெடுக்கின்ற மனமாகிய பேயை ஆன்ம மந்திர ஜபத்தால் விரட்டிய பின் எதுவாக இருக்கின்றாயோ அதுவாகவே இருப்பாய். அந்நிலையில் உறுதியுள்ளவனுக இருப்பாய்.

चिद्व्योमेव किलास्तीह परापरविवर्जितम् ।
सर्वत्रासंभवच्चैत्यं यत्कल्पान्तेऽवशिष्यते ॥ ३६ ॥

" சித்வ்யோமேவ கிலாஸ்தீஹ பராபர விவர்ஜிதம்
ஸர்வத்ரா ஸம்பவச்சைத்யம் யத்கல்பாந்தேZவஶிஷ்யதே "
(36)

ஈண்டு உயர்வு தாழ்வற்ற சிதான்ம வெளியொன்றே இருக்கின்றதல்லவா, எங்குமாயுள்ள சிதான்மாவில் விஷயத் தோற்றமானது இருப்பதே இல்லை. கற்பகாலத்தின் முடிவில் எது மிஞ்சுகின்றதோ அதுவாக இருப்பாய் என்பதாம்

वाञ्छाक्षणे तु या तुष्टिस्तत्र वाञ्छैव कारणम् ।
तुष्टिस्त्वतुष्टिपर्यन्ता तस्माद्वाञ्छां परित्यज ॥ ३७ ॥

" வாஞ்சாக்ஷணே து யா துஷ்டிஸ் தத்ரவாஞ்சைவ காரணம்
துஷ்டிஸ்த்வ துஷ்டிபர்யந்தா தஸ்மாத் வாஞ்சாம் பரித்யஜ "
(37)

இச்சித்த பொருளினையடைந்தால் யாதொரு சந்தோஷமுண்டாகிறதோ, அந்தச்சந்தோஷமுண்டாகும் விஷயத்தில் இச்சையே காரணமாகின்றது. சந்தோஷமும் துக்கத்தை எல்லையாகவுடையது. ஆகையால் சுகதுக்க காரணமான விச்சையை அறவே விட்டுவிடுவாயாக.

आशा यातु निराशात्वमभावं यातु भावना ।
अमनस्त्वं मनो यातु तवासङ्गेन जीवतः ॥ ३८ ॥

" ஆஶா யாது நிராஶாத்வமபாவம் யாது பாவநா
அமனஸ்த்வம் மனோ யாது தவாஸங்கேந ஜீவத: " (38)

பற்றின்றி வாழ விருப்புமுனது ஆசை விஷயப்பற்றை விடட்டும். உனது பாவனை விஷயாகாரத்தை விடட்டும். உனது மனம் நினைவை விடுத்ததாகட்டும்.

वासनारहितैरन्तरिन्द्रियैराहरन्क्रियाः ।
न विकारमवाप्नोषि खवत्क्षोभशतैरपि ॥ ३९ ॥

" வாஸநா ரஹிதை ரந்த ரிந்த்ரியை ராஹரன் க்ரியா:
ந விகாரமவாப்நோஷி கவத் க்ஷோபஶதைரபி " (39)

வாசனை நீங்கிய அகக்கரணங்களோடு கூடிய நீ கிரியைகளைச் செய்கின்றவனாயினும், ஆகாயம் போன்று, விக்ஷேபத்தை உண்டுபண்ணும் நூற்றுக்கணக்கான செயல்களாலும் மாறுதலடைய மாட்டாய்.

चित्तोन्मेषनिमेषाभ्यां संसारप्रलयोदयौ ।
वासनाप्राणसंरोधमनुन्मेषं मनः कुरु ॥ ४० ॥

சித்தோன்மேஷ நிமேஷாப்யாம் ஸம்ஸார ப்ரளயோதயௌ
வாஸநா ப்ராணஸம்ரோத மநுன்மேஷம் மந: குரு " (40)

சித்தத்தின் உற்பத்தி நாசங்களால் இறப்பு பிறப்பாகிய சம்சாரம் தோன்றி மறைகின்றது. ஆகையால் சித்தத்திற்குக் காரணமாகவுள்ள வாசனையையும் பிராணனையும் கெடுத்து மனதைச் சங்கல்ப மற்றதாகச் செய்க.

प्राणोन्मेषनिमेषाभ्यां संसृतेः प्रलयोदयौ ।
तमभ्यासप्रयोगाभ्यामुन्मेषरहितं कुरु ॥ ४१ ॥

" ப்ராணோன்மேஷ நிமேஷாப்யாம் ஸம்ஸ்ருதே:
ப்ரளயோதயௌ
தமப்யாஸ ப்ரயோகப்யா முன்மேஷ ரஹிதம் குரு " (41)

பிராணனுடைய உற்பத்திநாசத்தால் சம்சாரத்திற்கும் உற்பத்தி நாசமுண்டாகின்றன. விசாரம் நல்ல யோகப் பயிற்சி இவைகளால் அந்தப் பிராணனைத் தோற்றமற்றதாகச் செய்வாய்.

मौर्ख्योन्मेषनिमेषाभ्यां कर्मणां प्रलयोदयौ ।
तद्विलीनं कुरु बलाद्गुरुशास्त्रार्थसंगमैः ॥ ४२ ॥

" மௌர்க்யோன்மேஷ நிமேஷாப்யாம் கர்மணாம் ப்ரளயோதயௌ
தத்விலீனம் குரு பலாத் குருசாஸ்த்ரார்த்த ஸங்கமை:(42)

மூர்க்கமான பிராணன்களின் உற்பத்தி நாசங்களால் தொழில்களும் தோன்றி மறைகின்றன. ஆசார்யன் சாஸ்திரம் அவற்றினர்த்தம் இவைகளின் சேர்க்கைகளால் உண்டாம் பலத்தால் அந்தப் பிராணனை நாசமுறச்செய்வாய்.

असंवित्स्पन्दमात्रेण याति चित्तमचित्तताम् ।
प्राणानां वा निरोधेन तदेव परमं पदम् ॥ ४३ ॥

" அஸம்வித்ஸ்பந்த மாத்ரேண யாதி சித்தமசித்ததாம்
ப்ராணானாம் வா நிரோதேன ததேவ பரமம் பதம் " (43)

விசாரவடிவபுத்தியின் அசைவைத் தடுப்பதாலேயே, சித்தமானது சிந்தனையற்ற நிலைமை அடைகிறது. பிராணன்களின் நிரோதத்தாலும், சித்தம் நாசமுறுகின்றது. அந்த சித்த நாசமே சிறந்த பதமாகின்றது.

दृश्यदर्शनसंबन्धे यत्सुखं पारमार्थिकम् ।
तदन्तैकान्तसंवित्त्या ब्रह्मदृष्ट्यावलोकय ॥ ४४ ॥

" த்ருச்ய தர்சன ஸம்பந்தே யத்ஸுகம் பாரமார்த்திகம்
ததந்தைகாந்த ஸம்வித்த்யா ப்ரஹ்ம த்ருஷ்ட்யாவலோகய"
(44)

ஞானத்திற்கும் விஷயத்திற்குமுள்ள சம்பந்தத்தில் யாதொரு உண்மையான சுகமுளதாமோ, அந்த யதார்த்த பிரம்ம சுகத்தை உள்ளத்தின்கண் தனிமையாயிருந்து ஞானதிருஷ்டியால் காண்பாயாக.

यत्र नाभ्युदितं चित्तं तद्वै सुखमकृत्रिमम् ।
क्षयातिशयनिर्मुक्तं नोदेति न च शाम्यति ॥ ४५ ॥

"யத்ர நாப்யுதிதம் சித்தம் தத்வை ஸுகமக்ருத்ரிமம்
க்ஷயாதிஶய நிர்முக்தம் நோதேதி நச ஶாம்யதி" (45)

எந்த ஆன்மாவினிடத்தில் சித்தமானது தோற்றமின்றியதாமோ அதுவே இயற்கையிலுள்ள சுகமும உற்பத்தி நாசமற்றதுமாம். அந்தச்சுகமுண்டாவதுமில்லை நாசமடைவதுமில்லை.

यस्य चित्तं न चित्ताख्यं चित्तं चित्तत्त्वमेव हि ।
तदेव तुर्यावस्थायां तुर्यातीतं भवत्यतः ॥ ४६ ॥

"யஸ்ய சித்தம் ந சித்தாக்யம் சித்தம் சித்தத்வமேவ ஹி
ததேவ துர்யாவஸ்தாயாம் துர்யாதீதம் பவத்யத:" (46)

எவனுடைய சித்தமானது தனது சிந்தனைவடிவ உண்மைப் பெயரை இழந்ததாமோ அந்த சித்தம் சித்தே வடிவாகின்றது. துரியாவஸ்தையின் கண்ணும் அதுவே உள்ளதாம். அதினின்றும் துரியாதீதத்தை அடைகின்றது.

संन्यस्तसर्वसंकल्पः समः शान्तमना मुनिः ।
संन्यासयोगयुक्तात्मा ज्ञानवान्मोक्षवान्भव ॥ ४७ ॥

"ஸன்யஸ்த ஸர்வ ஸங்கல்ப: ஸம: ஶாந்தமனா முனி:
ஸன்யாஸ யோக யுக்தாத்மா ஜ்ஞானவான் மோக்ஷவான்
பவ" (47)

எல்லா சங்கல்பங்களையும் விடுத்தவனும் எங்கும் சமத்துவ புத்தியுள்ளவனும், ஓய்வு பெற்ற மனமுள்ளவனும், மனன சீலனும், சந்யாச யோகத்தை அடைந்தவனும், தத்துவ ஞானமுள்ளவனும் மோக்ஷபதத்தையடைந்தவனுமாக ஆவாய்.

सर्वसंकल्पसंशान्तं प्रशान्तघनवासनम् ।
न किंचिद्भावनाकारं यत्तद्ब्रह्म परं विदुः ॥ ४८ ॥

" ஸர்வ ஸங்கல்ப ஸம்மாந்தம் ப்ரமாந்த கன வாஸனம்
ந கிஞ்சித் பாவனாகாரம் யத்தத் ப்ரஹ்ம பரம் விது: " (48)

எல்லா சங்கல்பங்களினின்றும் விடுபட்டதும், எல்லா வாசனையுமற்றதும், பாவனா வடிவம் சிறிதுமில்லாததும் எதுவோ, அதைப் பரப்பிரம்மமென்று தத்துவ ஞானிகள் அறிகின்றார்கள்.

सम्यग्ज्ञानावरोधेन नित्यमेकसमाधिना ।
सांख्य एवावबुद्धा ये ते सांख्या योगिनः परे ॥ ४९ ॥

" ஸம்யக்ஞானாவரோதேன நித்யமேக ஸமாதினா (49)
ஸாங்க்ய ஏவாவபுத்தா யே தே ஸாங்க்யா யோகின: பரே "

எவர்கள் நன்றாய்த் தத்துவங்களை விசாரித்து இந்திரியங்களைத் தடுப்பதாலும், இடைவிடாது நிலைத்த சமாதியப்பியாசத்தாலும், தத்துவங்களை எண்ணுவதினாலேயும் உண்மையைக் கண்டார்களோ அவர்கள் சாங்கியர்கள் எனப்படுகின்றார்கள். மற்றவர்கள் யோகிகளாம்.

प्राणाद्यनिलसंशान्तौ युक्त्या ये पदमागताः ।
अनामयमनाद्यन्तं ते स्मृता योगयोगिनः ॥ ५० ॥

" ப்ராணாத்யனிலஸம்சாந்தௌ யுக்த்யா யே பதமாகதா:
அனாமய மனாத்யந்தம் தே ஸ்ம்ருதா யோக யோகின:" (50)

எவர்கள் ஆசனம் ஆகார நியமமுதலிய யுக்தியால் பிராணன் முதலிய வாயுக்களை மீதமின்றித் தடுத்தபொழுது பிறவி நோயற்றதும் ஆதி அந்தம் இல்லாததுமான பதத்தை அடைந்தார்களோ, அவர்கள் யோகத்தால் உண்மையைக் கண்ட யோகிகள் எனப்படுகின்றார்கள்.

उपादेयं तु सर्वेषां शान्तं पदमकृत्रिमम् ।
एकार्थाभ्यसनं प्राणरोधश्चेतःपरिक्षयः ॥ ५१ ॥

" உபாதேயந்து ஸர்வேஷாம் ஶாந்தம் பத மக்ருத்ரிமம்
ஏகார்த்தாப்யஸனம் ப்ராணரோதஶ்சேத: பரிக்ஷய: " (51)

எல்லா ஜீவர்களுக்கும் கொள்ளத்தகுந்ததும், மனவோய்விற்கு இடமானதும், இயற்கையிலுள்ளதுமான பதமாம். பிராண நிரோதமும், சித்த நாசமும் அந்த ஒரு பதத்தை அடைவதன் பொருட்டு அப்பியாசிக்கப்படுகின்றன.

एकस्मिन्नेव संसिद्धे संसिद्धयन्ति परस्परम् ।
अविनाभाविनी नित्यं जन्तूनां प्राणचेतसी ॥ ५२ ॥

" ஏகஸ்மின்னேவ ஸம்ஸித்தே ஸம்ஸித்த்யந்தி பரஸ்பரம்
அவிநாபாவினீ நித்யம் ஜந்தூநாம் ப்ராணசேதஸீ " (52)

ஜீவர்களுடைய பிராணனும், சித்தமும் எப்பொழுதும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாதிருப்பனவாம். ஆகையால் இவற்றுள் ஒன்று சித்தித்தபொழுதே மற்றதும் வசப்பட்டதாகிறது.

आधाराधेयवच्चैते एकभावे विनश्यतः ।
कुरुतः स्वविनाशेन कार्यं मोक्षाख्यमुत्तमम् ॥ ५३ ॥

" ஆதாராதேய வச்சைதே ஏகபாவே விநஶ்யத:
குருத: ஸ்வவிநாஶேன கார்யம் மோக்ஷாக்யமுத்தமம் "(53)

பிராணன் சித்தமாகிய இரண்டும் ஆதார ஆதேயம் போன்றுள்ளன. இவற்றில் ஒன்றைப் பிரித்தபொழுது இரண்டுமே நாசமடைகின்றன. இவைகள் தங்களுடைய நாசத்தால் மோக்ஷமென்று சொல்லப்பட்ட உத்தமமான காரியத்தைச் செய்கின்றன

सर्वमेतद्धिया त्यक्त्वा यदि तिष्ठसि निश्चलः ।
तदाहंकारविलये त्वमेव परमं पदम् ॥ ५४ ॥

" ஸர்வமேதத் தியா த்யக்த்வா யதி திஷ்டஸி நிஶ்சல:
ததாஹங்கார விலயே த்வமேவ பரமம் பதம் " (54)

எல்லாவற்றையும் தத்துவ விசாரமுள்ள புத்தியால் விடுத்துச் சலனமின்றி நிற்பாயாயின், அந்த அகங்காரம் லயமடைந்த பொழுது நீயே மேலான பரமபதமாகின்றாய்.

महाचिदेकैवेहास्ति महासत्तेति योच्यते ।
निष्कलङ्का समा शुद्धा निरहंकाररूपिणी ॥ ५५ ॥
सकृद्विभाता विमला नित्योदयवती समा ।
सा ब्रह्म परमात्मेति नामभिः परिगीयते ॥ ५६ ॥

" மஹாசிதேகைவேஹாஸ்தி மஹாஸத்தேதி யோச்யதே
நிஷ்களங்கா ஸமா ஶுத்தா நிரஹங்காரரூபிணீ " (55)
" ஸக்ருத்விபாதா விமலா நித்யோதயவதீ ஸமா
ஸா ப்ரஹ்ம பரமாத்மேதி நாமபி: பரிகீயதே " (56)

சண்டு பேரொளிவடிவினளாகிய அன்னபூர்ணாதேவி ஒருத்தியே இருக்கின்றாள். அவள் களங்கமற்றவளும், எங்கும் சமமாயிருப்பவளும் அகங்காரமற்றவடிவுள்ளவளு மாம். அவளே மகாசத்தை(இருப்பே வடிவானவள்)என்று சொல்லப்படுகின்றாள்.

ஒரே பிரகாசமுள்ளவளும் ஆணவம், மாயை, கார்மிகம் என்ற மும்மலமற்றவளும், எப்பொழுதும் உதயவடிவுள்ளவளும் சமமாயிருப்பவளுமான அந்த அன்னபூர்ணாதேவி பிரம்மமென்றும், பரமாத்மாவென்றுமுள்ள பெயர்களால் பிரசித்தியாகச் சொல்லப்படுகின்றாள்.

सैवाहमिति निश्चित्य निदाघ कृतकृत्यवान् ।
न भूतं न भविष्यच्च चिन्तयामि कदाचन ॥ ५७ ॥

" ஸைவாஹமிதி நிஸ்சித்ய நிதாக க்ருதக்ருத்யவான்
ந பூதம் ந பவிஷ்யச்ச சிந்தயாமி கதாசந " (57)

ஏ பாபமற்றவனே! அவளே நானென்று நிச்சயம் செய்து, செய்யவேண்டியதைச் செய்து முடித்தவனாய், சென்றதையும், நாளை வருவதையும், ஒரு காலத்திலும் நினைக்காதிருக்கின்றேன்.

दृष्टिमालम्ब्य तिष्ठामि वर्तमानामिहात्मना ।
इदमद्य मया लब्धमिदं प्राप्स्यामि सुन्दरम् ॥ ५८ ॥

" த்ருஷ்டிமாலம்ப்ய திஷ்டாமி வர்த்தமானா மிஹாத்மனா
இதமத்ய மயா லப்தமிதம் ப்ராப்ஸ்யாமி ஸுந்தரம் " (58)

இந்த நிகழ்காலத்தில் சுத்த சத்துவகுண மனதால் ஸோऽஹம்பாவனாவடிவமாயிருக்கின்ற ஞான திருஷ்டியைப் பற்றி நிற்கின்றேன். ஆகையால் இன்று இது என்னால் அடையப்பட்டது என்பதும், இனி இந்த அழகியபொருளை அடையப்போகின்றேன் என்பதும் இல்லை.

न स्तौमि न च निन्दामि आत्मनोऽन्यन्नहि क्वचित् ।
न तुष्यामि शुभप्राप्तौ न खिद्याम्यशुभागमे ॥ ५९ ॥

" ந ஸ்தௌமி ந ச நிந்தாமி ஆத்மனோऽன்யன்னஹி க்வசித்
ந துஷ்யாமி ஸுபப்ராப்தௌ ந கித்யாம்யஸுபாகமே' (59)

ஆன்மாவினின்றும் வேறு சிறிதுமின்மையால் ஒன்றைத் துதிப்பதுமில்லை. நிந்திப்பதுமில்லை. சுகமடைவுற்ற பொழுது சந்தோஷிப்பதில்லை தீமைவரும்பொழுது நான் துக்கிக்காதவனாகவும் இருக்கின்றேன்.

**प्रशान्तचापलं वीतशोकमस्तसमीहितम् ।**
**मनो मम मुने शान्तं तेन जीवाम्यनामयः ॥ ६० ॥**

" ப்ரஶாந்தசாபலம் வீதஶோகமஸ்தஸமீஹிதம்
மநோ மம முநே ஶாந்தம் தேந ஜீவாம்யநாமய: " (60)

ஏ முனிவனே! விருப்பங்களெல்லாமொழிந்த எனது மனம் சலனத்தையும், சோர்வையும் விடுத்து சாந்தமுள்ளதாயிற்று. ஆகையால் நான் சோகமோஹமாகிய நோயற்றவனாக வாழ்கின்றேன்.

**अयं बन्धुः परश्चायं ममायमयमन्यकः ।**
**इति ब्रह्मन्न जानामि संस्पर्शं न ददाम्यहम् ॥ ६१ ॥**

" அயம் பந்து: பரஶ்சாயம் மமாயமயமன்யக:
இதி ப்ரஹ்மன் ந ஜாநாமி ஸம்ஸ்பர்ஶம் ந ததாம்யஹம்"
(61)

ஏ பிரம்மத்தையறிந்தவனே! இவன் பந்துவென்றும் இவன் பந்துவில்லையென்றும், இவனென்னையுடையவனென்றும், இவன் அன்னியனென்றும், நானறிவதில்லை. (பிறகும் எவ்விதமிருக்கின்றேனெனில்) மனதிற்கு சப்த ஸ்பரிசாதி விஷயச்சேர்க்கையைக் கொடுக்காது இருக்கின்றேன்.

**वासनामात्रसंत्यागाज्जरामरणवर्जितम् ।**
**सवासनं मनो ज्ञानं ज्ञेयं निर्वासनं मनः ॥ ६२ ॥**

" வாஸநாமாத்ரஸம்த்யாகாஜ் ஜராமரணவர்ஜிதம்
ஸவாஸனம் மநோ ஜ்ஞானம் ஜ்ஞேயம் நிர்வாஸனம் மன:(62)

வாசனையோடு கூடிய மனம் ஞானமென்ப்படுகிறது. வாசனை முழுவதையும் விடுத்ததால் ஜரைமரணமற்றதாய் வாசனை நீங்கிய மனது ஞேய வஸ்துவாகவே இருக்கின்றது.

चित्ते त्यक्ते लयं याति द्वैतमेतच्च सर्वतः ।
शिष्यते परमं शान्तमेकमच्छमनामयम् ॥ ६३ ॥

“ சித்தே த்யக்தே லயம் யாதி த்வைதமேதச்ச ஸர்வத:
சிஷ்யதே பரமம் சாந்தமேகமச்சமநாமயம் ” (63)

சித்தம் நாசமானபொழுது எல்லாவிடத்திலும் காணப்பட்ட இந்த பேதமும் மறைகின்றது. மனவிந்திரியங்களின் ஓய்விற்கு இடமானதும், நோயற்றதும், தூய்மையானதுமான பரவஸ்து ஒன்றே மிஞ்சுகின்றது.

अनन्तमजमव्यक्तमजरं शान्तमच्युतम् ।
अद्वितीयमनाद्यन्तं यदाद्यमुपलम्भनम् ॥ ६४ ॥

“ அனந்தமஜமவ்யக்த மஜரம் ஶாந்த மச்யுதம்
அத்விதீயமனாத்யந்தம் யதாத்யமுபலம்பனம் ” (64)

எது முடிவற்றதும், பிறப்பற்றதும், இந்திரியவறிவிற்குத் தோன்றாததும், மூப்பற்றதும், சாந்தமானதும், அழிவற்றதும், இரண்டில்லாததும், எல்லாவற்றிற்குமாதியும், அந்தமாயிருப்பதும், முதன்மையானதும், எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடாயுள்ளதும்.

एकमाद्यन्तरहितं चिन्मात्रममलं ततम् ।
खादप्यतितरां सूक्ष्मं तद्ब्रह्मास्मि न संशयः ॥ ६५ ॥

“ ஏகமாத்யந்தரஹிதம் சின்மாத்ரமமலம் ததம்
காதப்யதிதராம் ஸூக்ஷ்மம் தத் ப்ரஹ்மாஸ்மி ந ஸம்ஶய:(65)

ஒன்றாகவே இருப்பதும், ஆதியுமந்தமுமற்றதும், சித்தே வடிவானதும், மலமற்றதும், வியாபகமானதும், ஆகாயத்தைக் காட்டிலும், மிக்க சூக்குமமானதுமான அந்த பிரம்மமே நானாகின்றேன். இதிற் சந்தேகமில்லை.

दिक्कालाद्यनवच्छिन्नं स्वच्छं नित्योदितं ततम् ।
सर्वार्थमयमेकार्थं चिन्मात्रममलं भव ॥ ६६ ॥

“ திக்காலாத்யனவச்சின்னம் ஸ்வச்சம் நித்யோதிதம் ததம்
ஸர்வார்த்தமயமேகார்த்தம் சின்மாத்ரமமலம் பவ ” (66)

திக்கு காலம் முதலியவற்றால் வரம்பு செய்யப்படாததும், தூய்மையானதும், எப்பொழுதும் உதயமாயிருப்பதும், வியாபகமானதும், மலமற்றதும், எல்லாப்பொருள் வடிவானதும், ஒரே பொருளாயிருப்பதுமான, சித்சொரூபமாகவே இருப்பாயாக.

सर्वमेकमिदं शान्तमादिमध्यान्तवर्जितम् ।
भावाभावमजं सर्वमिति मत्वा सुखी भव ॥ ६७ ॥

“ ஸர்வமேகமிதம் ஶாந்தமாதிமத்யாந்தவர்ஜிதம்
பாவாபாவமஜம் ஸர்வமிதி மத்வா ஸுகீ பவ ” (67)

எல்லாமாயும், பிறப்பற்றதும, உள்ளதும், இல்லாததும், ஆதியந்தமுடிவு இல்லாததும், சாந்தமானதுமான இந்த எல்லாம் ஒன்றேயாம் என்று நினைத்து சுகமுள்ளவனாக இருப்பாய்.

न बद्धोऽस्मि न मुक्तोऽस्मि ब्रह्मैवास्मि निरामयम् ।
द्वैतभावविमुक्तोऽस्मि सच्चिदानन्दलक्षणः ।
एवं भावय यत्नेन जीवन्मुक्तो भविष्यसि ॥ ६८ ॥

“ ந பத்தோऽஸ்மி ந முக்தோऽஸ்மி ப்ரஹ்மைவாஸ்மி நிராமயம்
த்வைதபாவவிமுக்தோऽஸ்மி ஸச்சிதானந்தலக்ஷண: ”
“ ஏவம் பாவய யத்னேந ஜீவன்முக்தோ பவிஷ்யஸி ” (68)

நான் பந்தமுள்ளவனன்று, விடுபட்டவனுமன்று; துவைதத்தினின்றும் விடுபட்டவனும், சத்சிதானந்தலக்ஷண

முள்ளவனுமாய் சுகதுக்கமாகிய நோயற்ற பிரம்மமேயாகின்றேன். இவ்வாறு முயற்சியால் பாவனை செய்வாய். இவ்வித அப்யாசத்தால் ஜீவன்முக்தனாக ஆகப்போகின்றாய்.

पदार्थवृन्दे देहादिधिया संत्यज्य दूरतः ।
आशीतलान्तःकरणो नित्यमात्मपरो भव ॥ ६९ ॥

" பதார்தப்ருந்தே தேஹாதிதியா ஸம்த்யஜ்ய தூரத:
ஆசீதலாந்த:கரணோ நித்யமாத்மபரோ பவ " (69)

புத்தியால் தேகம் முதலிய பதார்த்தக்கூட்டத்திலுள்ள பற்றைத் தூரத்தில் விடுத்து, நன்றாய் குளிர்ந்த மனமுள்ளவனாய் எப்பொழுதும் ஆன்மாவினிடத்தில் பற்றுள்ளவனாக ஆவாய்.

इदं रम्यमिदं नेति बीजं ते दुःखसंततेः ।
तस्मिन्साम्याग्निना दग्धे दुःखस्यावसरः कुतः ॥ ७० ॥

" இதம் ரம்யமிதம் நேதி பீஜம் தே து:கஸந்ததே:
தஸ்மின் ஸாம்யாக்னினா தக்தே து:கஸ்யாவஸர: குத:"(70)

இது நல்லது, இது கெட்டது என்றுண்டாகும் சங்கல்பமே துக்க பரம்பரைக்குக் காரணமான விதையாம். உயர்வு தாழ்வற்ற சமபாவனையாகிற நெருப்பால் அந்த சங்கல்ப விதை எரிக்கப்பட்டபொழுது, துக்கத்திற்கு அவகாசமேது?

शास्त्रसज्जनसंपर्कैः प्रज्ञामादौ विवर्धयेत् ॥ ७१ ॥
ऋतं सत्यं परं ब्रह्म सर्वसंसारभेषजम् ।
अत्यर्थममलं नित्यमादिमध्यान्तवर्जितम् ॥ ७२ ॥

" சாஸ்த்ரஸஜ்ஜனஸம்பர்க்கை: ப்ரஜ்ஞாமாதௌ விவர்தயேத்" (71)

" ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம ஸர்வஸம்ஸாரபேஷஜம்
அத்யர்த்தமமலம் நித்யமாதிமத்யாந்தவர்ஜிதம் " (72)

நல்ல சாஸ்திரங்களைப் படிப்பதாலும், சாதுக்களுடைய சங்கத்தாலும் முதலில் அறிவை விருத்தி செய்யவேண்டும். நேர்மையானதும், சத்யமானதும், மேலானதும், பெரிதானதும், எல்லா சம்சாரத்திற்கும் மருந்தானதும், அர்த்தத்தைக் கடந்ததும், மலமற்றதும், நித்யமானதும், முதல் நடுவிறுதியற்றதும்.

तथाऽस्थूलमनाकाशमसंस्पृश्यमचाक्षुषम् ।
न रसं न च गन्धाख्यमप्रमेयमनूपमम् ॥ ७३ ॥

" ததாऽஸ்தூலமனாகாச மஸம்ஸ்ப்ருஶ்ய மசாக்ஷுஷம்
ந ரஸம் ந ச கந்தாக்ய மப்ரமேய மனூபமம் " (73)

அவ்விதமே பெரிதல்லாததும், ஆகாசமல்லாததும், பரிசேந்திரியத்திற்கு விஷயமல்லாததும், கண்களால் காணப்படாததும், ரஸமில்லாததும், கந்தமில்லாததும், பிரமாணத்திற்கு விஷயமல்லாததும், உபமையற்றதும்.

आत्मानं सच्चिदानन्दमनन्तं ब्रह्म सुव्रत ।
अहमस्मीत्यभिध्यायेद्ध्येयातीतं विमुक्तये ॥ ७४ ॥

" ஆத்மானம் ஸச்சிதானந்தமனந்தம் ப்ரஹ்ம ஸுவ்ரத
அஹமஸ்மீத்யபித்யாயேத் த்யேயாதீதம் விமுக்தயே "(74)

ஏ நல்ல விரதமுள்ளவனே! ஆத்மாவும், ஸச்சிதானந்தமும் தியானத்திற்கு எட்டாததுமான பிரம்ம சொரூபமே நானாகின்றேன் என்று முக்தியின் பொருட்டு நன்றாய் தியானிப்பாயாக.

समाधिः संविदुत्पत्तिः परजीवैकतां प्रति ।
नित्यः सर्वगतो ह्यात्मा कूटस्थो दोषवर्जितः ॥ ७५ ॥

" ஸமாதி: ஸம்விதுத்பத்தி: பரஜீவைகதாம் ப்ரதி (75)
நித்ய: ஸர்வகதோ ஹ்யாத்மா கூடஸ்தோ தோஷவர்ஜித: "

பரசிவர்களின் ஐக்யத்தை உத்தேசித்து சமாதியும், ஞானத்தின் உற்பத்தியும் சொல்லப்பட்டது. ஏனெனில் நித்யமாயும், எங்கும் வியாபகமாயும், விகாரமற்றதாயும், குற்றமற்றதுமான ஆத்மா.

एकः सन्भिद्यते भ्रान्त्या मायया न स्वरूपतः ।
तस्मादद्वैत एवास्ति न प्रपञ्चो न संसृतिः ॥ ७६ ॥

" ஏக: ஸன்பித்யதே ப்ராந்த்யா மாயயா ந ஸ்வரூபத:
தஸ்மாதத்வைத ஏவாஸ்தி ந ப்ரபஞ்சோ ந ஸம்ஸ்ருதி:(76)

ஆன்மா ஒன்றேயாயினும் பிராந்தி வடிவமாயையால் சிவன் ஜீவனென்று பிரிக்கப்பட்டது. சொரூபத்தினால் பேதமுள்ளதன்று. ஆகையால் அத்வைதமே இருக்கின்றது. பிரபஞ்சமுமில்லை. சம்சாரமுமில்லை என்பதாம்.

यथाकाशो घटाकाशो महाकाश इतीरितः ।
तथा भ्रान्तेर्द्विधा प्रोक्तो ह्यात्मा जीवेश्वरात्मना ॥ ७७ ॥

" யதாகாசோ கடாகாசோ மஹாகாச இதீரித:
ததா ப்ராந்தேர் த்விதா ப்ரோக்தோ ஹ்யாத்மா
ஜீவேச்வராத்மநா " (77)

எப்படி ஆகாசமொன்றே கடாகாசமென்றும், மகாகாசமென்றும் சொல்லப்பட்டதோ, அப்படியே ஆத்மா வொன்றே மயக்கத்தால் சிவனென்றும், ஈச்வரனென்றும் பிரித்துச் சொல்லப்பட்டது.

यदा मनसि चैतन्यं भाति सर्वत्रगं सदा ।
योगिनोऽव्यवधानेन तदा संपद्यते स्वयम् ॥ ७८ ॥

" யதா மனஸி சைதன்யம் பாதி ஸர்வத்ரகம் ஸதா
யோகினோZவ்யவதானேந ததா ஸம்பத்யதே ஸ்வயம் " (78)

எப்பொழுது மனதின்கண் எங்கும் நிறைந்த சைதன்ய மானது சதாகாலமும் பிரகாசிக்கின்றதோ, அந்த சைதன் யத்தை யோகிகள் தாங்களாகவே மறைப்பின்றி அடை கின்றார்கள்.

यदा सर्वाणि भूतानि स्वात्मन्येव हि पश्यति ।
सर्वभूतेषु चात्मानं ब्रह्म संपद्यते तदा ॥ ७९ ॥

" யதா ஸர்வாணி பூதானி ஸ்வாத்மன்யேவ ஹி பஶ்யதி
ஸர்வபூதேஷு சாத்மானம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா(79)

எப்பொழுது எல்லா ஜீவர்களையும் தனதான்மாவினி டத்திலும், எல்லா ஜீவர்களிடத்திலும் தனதான்மாவை யும் காண்கின்றானோ; அவன் அப்பொழுதே பிரம்மத்தை அடைந்தவனாகின்றான்.

यदा सर्वाणि भूतानि समाधिस्थो न पश्यति ।
एकीभूतः परेणासौ तदा भवति केवलः ॥ ८० ॥

" யதா ஸர்வாணி பூதானி ஸமாதிஸ்தோ ந பஶ்யதி
ஏகீபூத: பரேணாஸௌ ததா பவதி கேவல: " (80)

சமாதியிலுள்ள புருடன் எப்பொழுது எல்லா ஜீவர் களையும் காண்பதில்லையோ, அப்பொழுது அந்தப்புருடன் பரமான்மாவோடு கலந்தவனாய் பிரம்மமே ஆகின்றான்.

शास्त्रसज्जनसंपर्कवैराग्याभ्यासरूपिणी ।
प्रथमा भूमिकैषोक्ता मुमुक्षुत्वप्रदायिनी ॥ ८१ ॥

" ஶாஸ்த்ர ஸஜ்ஜனஸம்பர்க வைராக்யாப்யாஸரூபிணீ
ப்ரதமா பூமிகைஷோக்தா முமுக்ஷுத்வ ப்ரதாயினீ "(81)

சாஸ்திரம், சாதுசங்கம், வைராக்யம், அப்யாஸம், மோக்ஷேச்சை முதலியவற்றைக் கொடுப்பதான இது முதல் பூமி என்று சொல்லப்பட்டது.

**विचारणा द्वितीया स्यात्तृतीया साङ्गभावना ।**
**विलापिनी चतुर्थी स्याद्वासनाविलयात्मिका ॥ ८२ ॥**

“ விசாரணா த்விதீயா ஸ்யாத் த்ருதீயா ஸாங்கபாவநா
விலாபினீ சதுர்த்தீ ஸ்யாத் வாஸனாவிலயாத்மிகா ” (82)

விசாரணை இரண்டாம் பூமியாகின்றது. அங்கங்களோடு பாவனை செய்வது மூன்றாம் பூமியாகிறது. எல்லாக் கருமங்களையும் எரிப்பது விலாபினீ என்ற நான்காம் பூமியாகிறது. வாசனைகளை லயம் செய்வதாம்.

**शुद्धसंविन्मयानन्दरूपा भवति पञ्चमी ।**
**अर्धसुप्तप्रबुद्धाभो जीवन्मुक्तोऽत्र तिष्ठति ॥ ८३ ॥**

“ சுத்தஸம்வின்மயானந்தரூபா பவதி பஞ்சமீ
அர்த்தஸுப்தப்ரபுத்தாபோ ஜீவன்முக்தோऽத்ர திஷ்டதி” (83)

சுத்தஞானானந்த வடிவாயும் இருப்பது ஐந்தாம் பூமியாகிறது. இந்த பூமியில் ஜீவன்முக்தன் பாதி தூங்கி விழித்தவன் போன்று இருக்கின்றான்.

**असंवेदनरूपा च षष्ठी भवति भूमिका ।**
**आनन्दैकघनाकारा सुषुप्तसदृशी स्थितिः ॥ ८४ ॥**

“ அஸம்வேதநரூபா ச ஷஷ்டீ பவதி பூமிகா
ஆனந்தைக கனாகாரா ஸுஷுப்த ஸத்ருசீ ஸ்திதி: ” (84)

தூக்கத்திற்குச் சமானமாயும், மிக்கவானந்தமே சொரூபமாயும், வேறு எவ்வித விஷயவுணர்வு இன்றியதாயும், உள்ள நிலையானது ஆறாம் பூமி எனப்படுகிறது.

तुर्यावस्थोपशान्ता सा मुक्तिरेव हि केवला ।
समता स्वच्छता सौम्या सप्तमी भूमिका भवेत् ॥ ८५ ॥

" தூர்யாவஸ்த்தோபசாந்தா ஸா முக்திரேவ ஹி கேவலா
ஸமதா ஸ்வச்சதா ஸௌம்யா ஸப்தமீ பூமிகா பவேத்"(85)

தூர்யாவஸ்தையின் முடிவான அந்த ஆறும் பூமி ஒப்பற்ற முக்தியே வடிவானது. மிக்க அழகியதும், படிகம் போன்று தெளிவானதும், எங்கும் சமமாக இருப்பதும் ஏழாம் பூமியாகிறது.

तुर्यातीता तु याऽवस्था परा निर्वाणरूपिणी ।
सप्तमी सा परा प्रौढा विषयो नैव जीवताम् ॥ ८६ ॥

" தூர்யாதீதா து யாऽவஸ்தா பரா நிர்வாணரூபிணீ
ஸப்தமீ ஸா பரா ப்ரௌடா விஷயோ நைவ ஜீவதாம்"(86)

அந்த ஏழாம் பூமி அனுபவ முதிர்ச்சியுள்ளதாகி பரா என்றும், மேலான மோக்ஷ வடிவமாயுள்ள எது தூர்யாதீத மென்றும் சொல்லப்பட்டதோ, அது ஜீவர்களுக்கு விஷயமாவதன்று.

पूर्वावस्थात्रयं तत्र जाग्रदित्येव संस्थितम् ।
चतुर्थी स्वप्न इत्युक्ता स्वप्नाभं यत्र वै जगत् ॥ ८७ ॥

" பூர்வாவஸ்தாத்ரயம் தத்ர ஜாக்ரதித்யேவ ஸம்ஸ்திதம்
சதுர்த்தீ ஸ்வப்ன இத்யுக்தா ஸ்வப்னாபம் யத்ர வை ஜகத்
(87)

முதலில் சொல்லப்பட்டுள்ள ஏழு பூமிகளுள் சுபேச்சை, விசாரணை, தனுமானசி ஆகிய மூன்றும் சாக்கிராவஸ்த்தை என்று சொல்லப்பட்டது. எந்த அவஸ்தையில் உலகம் சொப்பனம்போன்று தோற்றமுள்ளதாமோ, அந்த நான்காம் பூமி சொப்பனமென்றே சொல்லப்பட்டது.

आनन्दैकघनाकारा सुषुप्ताख्या तु पञ्चमी ।
असंवेदनरूपा तु षष्ठी तुर्यपदाभिधा ॥ ८८ ॥

" ஆனந்தைக கனாகாரா ஸுஷுப்தாக்யா து பஞ்சமீ
அஸம்வேதனரூபா து ஷஷ்டீ துர்யபதாபிதா " (88)

ஆனந்தமே வடிவான ஐந்தாம் பூமி சுஷுப்தி என்று சொல்லப்பட்டது. வேறு விஷய உணர்வற்ற ஆறும் பூமி துரியமென்று சொல்லப்பட்டது.

तुर्यातीतपदावस्था सप्तमी भूमिकोत्तम ।
मनोवचोभिरग्राह्या स्वप्रकाशसदात्मिका ॥ ८९ ॥

" துர்யாதீத பதாவஸ்தா ஸப்தமீ பூமிகோத்தம
மனோவசோபிரக்ராஹ்யா ஸ்வப்ரகாஶ ஸதாத்மிகா " (89)

ஏ நல்லவனே! மனோ வாக்குகளால் அறியப்படாததும் சுயம்பிரகாசமானதும், சத்தே வடிவானதுமான ஏழாம் பூமியானது துரியாதீதபதமென்று சொல்லப்பட்டது.

अन्तः प्रत्याहृतिवशाच्चैत्यं चेन्न विभावितम् ।
मुक्त एव न संदेहो महासमतया तया ॥ ९० ॥

" அந்த: ப்ரத்யாஹ்ருதி வஶாச்சைத்யம் சேன் நவிபாவிதம்
முக்த ஏவ ந ஸந்தேஹோ மஹாஸமதயா தயா " (90)

உள்ளே ஆன்மாவினிடத்து மனம் திரும்பிவிட்டபடியால் மீண்டும் விஷய சிந்தனையைச் செய்யாதிருக்குமாயின் அந்த மகாசமமென்ற பெரிய வொடுக்க நிலையால் புருடன் முக்தனென்றே சொல்லப்படுகின்றான். சந்தேகமில்லை.

न म्रिये न च जीवामि नाहं सन्नाप्यसन्मयः ।
अहं न किंचिद्विदिति मत्वा धीरो न शोचति ॥ ९१ ॥

" ந ம்ரியே நச ஜீவாமி நாஹம் ஸன் நாப்யஸன்மய :
அஹம் ந கிஞ்சித் சித்தி மத்வா தீரோ ந ஶோசதி " (91)

நான் மரிப்பவனன்று, ஜீவிப்பவனுமன்று, சத்துமன்று, அசத்துமன்று, இவற்றில் எதுவும் நானன்று, ஆனால் சித்தே எனது சொரூபம் என்று தியானிக்கும் தீரபுருடன் சோகத்தை அடைவதில்லை.

अलेपकोऽहमजरो नीरागः शान्तवासनः ।
निरंशोऽस्मि चिदाकाशमिति मत्वा न शोचति ॥ ९२ ॥

" அலேபகோ ऽ ஹமஜரோ நீராக: ஶாந்தவாஸன:
நிரம்ஶோ ऽ ஸ்மி சிதாகாஶமிதி மத்வா ந ஶோசதி " (92)

நான் ஒன்றிலும் ஒட்டாதவன், ஜரையற்றவன், ஆசையற்றவன், வாசனையற்றவன், அவயவமற்றவன், சிதாகாச சொரூபன் என்று தியானிப்பவன் சோகமடைவதில்லை.

अहंमत्या विरहितः शुद्धो बुद्धोऽजरोऽमरः ।
शान्तः शमसमाभास इति मत्वा न शोचति ॥ ९३ ॥

"அஹம் மத்யா விரஹித: ஶுத்தோ புத்தோ ऽஜரோ ऽமர:
ஶாந்த: ஸம ஸமாபாஸ இதி மத்வா ந ஶோசதி " (93)

நான் சித்தத்தோடுள்ள சேர்க்கையை விடுத்தவன், தூய்மையுள்ளவன், ஞானமுள்ளவன், ஜரையற்றவன், தேவன், சாந்தமுள்ளவன், எங்கும் சமமான தோற்றமுள்ளவன் என்று தியானிப்பவன் சோகமடைவதில்லை.

तृणाग्रेऽम्बरे भानौ नरनागामरेषु च ।
यत्तिष्ठति तदेवाहमिति मत्वा न शोचति ॥ ९४ ॥

" த்ருணாக்ரேஷ்வம்பரே பானௌ நரநாகாமரேஷு ச
யத்திஷ்டதி ததேவாஹமிதி மத்வா ந ஶோசதி " (94)

எந்தப் பரமாத்மாவானது, புல் நுனியிலும், ஆகாசத்திலும், சூரியனிடத்திலும், மனிதர்களிடத்திலும், மலைகளிடத்திலும், தேவர்களிடத்திலும், நிலைபெற்றுள்ளதாமோ, அந்த பரமன்மாவே நானென்று நினைத்துச் சோகமடைவதில்லை.

भावनां सर्वभावेभ्यः समुत्सृज्य समुत्थितः ।
अवशिष्टं परं ब्रह्म केवलोऽस्मीति भावय ॥ ९५ ॥

"பாவனாம் ஸர்வபாவேப்ய: ஸமுத்ஸ்ருஜ்ய ஸமுத்தித:
அவசிஷ்டம் பரம் ப்ரஹ்ம கேவலோZஸ்மீதி பாவய" (95)

இருப்புவடிவ, எல்லா நாமரூபப் பொருளினின்றும், பாவனையை நன்றாய் விடுத்து வெளிப்பட்டவனான நீ மீதமாய் உள்ளதும், மேலானதும் ஒன்றாயுள்ளதுமான பிரம்மமாகின்றேன் என்று பாவனை செய்.

वाचामतीतविषयो विषयाशादशोज्झितः ।
परानन्दरसाक्षुब्धो रमते स्वात्मनात्मनि ॥ ९६ ॥

"வாசா மதீத விஷயோ விஷயாசா தசோஜ்ஜித:
பரானந்த ரஸாக்ஷுப்தோ ரமதே ஸ்வாத்மனாத்மனி"(96)

இத்தகைய யோகி வாக்குகளுக்கு எட்டாத பொருளையறிந்தவனும், விஷயத்திலுள்ள ஆசையை விடுத்தவனும், மேலான ஆனந்தாமிர்தத்தால் நிறைவுபெற்றவனும், நல்ல சத்வடிவமனத்தால் ஆன்மாவினிடத்தில் இன்புறுகின்றான்.

सर्वकर्मपरित्यागी नित्यतृप्तो निराश्रयः ।
न पुण्येन न पापेन नेतरेण च लिप्यते ॥ ९७ ॥

"ஸர்வகர்ம பரித்யாகீ நித்ய த்ருப்தோ நிராச்ரய:
ந புண்யேன ந பாபேன நேதரேண ச லிப்யதே" (97)

எல்லாக் கருமங்களேயும் விடுத்தவனும், நித்யமானவாத்மாவில் திருப்தியுள்ளவனும், எதையுமாசிரியாதவனுமான முக்தன் புண்யத்தோடும் சேர்வதில்லை. பாபத்தோடும் சேர்வதில்லை. வேறு எதனேடும் சேர்வதில்லை.

स्फटिकः प्रतिबिम्बेन यथा नायाति रञ्जनम् ।
तज्ज्ञः कर्मफलेनान्तस्तथा नायाति रञ्जनम् ॥ ९८ ॥

“ஸ்படிக: ப்ரதிபிம்பேன யதா நாயாதி ரஞ்ஜனம்,
தஜ்ஞ: கர்மபலேனந்தஸ் ததா நாயாதி ரஞ்ஜனம்” (98)

எப்படிப் படிகமானது தன்னிடத்தில் பிரதிபலித்துள்ள வேறு பொருளின் நிறத்தை ஏற்றுக்கொள்வதில்லையோ, அவ்விதமே அந்த உண்மையை யறிந்த ஞானி உள்ளத்தின்கண் கரும பலத்தாலுண்டாகும் பற்றை அடைவதில்லை.

विहरञ्जनतावृन्दे देवकीर्तनपूजनैः ।
खेदाह्लादौ न जानाति प्रतिबिम्बगतैरिव ॥ ९९ ॥

“விஹரஞ்ஜனதாப்ருந்தே தேவ கீர்தன பூஜனை:
கேதாஹ்லாதௌ ந ஜானதி ப்ரதிபிம்பகதை ரிவ” (99)

பிரதி பிம்பங்களால் கண்ணுடி விகாரமடையாதது போல் ஜனங்களின் கூட்டத்தில் விளையாடுகின்ற யோகி அவர்கள் செய்யும் தேவஸ்துதி பூசை முதலியவற்றுல் உண்டாகும் சந்தோஷ விசனங்களை அறிவதில்லை.

निस्स्तोत्रो निर्विकारश्च पूज्यपूजाविवर्जितः ।
संयुक्तश्च वियुक्तश्च सर्वाचारनयक्रमैः ॥ १०० ॥

“நிஸ்தோத்ரோ நிர்விகாரப்ச பூஜ்ய பூஜா விவர்ஜித:
ஸம்யுக்தப்ச வியுக்தப்ச ஸர்வாசார நயக்ரமை:” (100)

எல்லாருடைய அனுஷ்டானம் ஒழுக்கமிவைகளோடு சேர்ந்திருப்பினும், பிரிந்திருப்பினும், அந்த யோகி பூசிக்கத் தக்கவர்களின் பூசையை விடுத்தவனும், தோத்திர மில்லாதவனும், விகாரமற்றவனுமாக இருக்கின்றான்.

तनुं त्यजतु वा तीर्थे श्वपचस्य गृहेऽथ वा ।
ज्ञानसंपत्तिसमये मुक्तोऽसौ विगताशयः ॥ १०१ ॥

" தனும் த்யஜது வா தீர்த்தே ஶ்வபசஸ்ய க்ருஹேZதவா
ஞான ஸம்பத்தி ஸமயே முக்தோZஸௌ விகதாஶய:" (101)

சிந்தனுவடிவ மனதை நாசம்செய்த இந்த யோகி ஞான முண்டானபொழுதே முக்தனுகின்றான். அவன் சரீரத்தைப் புண்ணிய தீர்த்தத்தில் விடட்டும். நாய் மாமிசம் சாப்பிடும் சண்டாளனுடைய வீட்டில் விடட்டும்.

संकल्पत्वं हि बन्धस्य कारणं तत्परित्यज ।
मोक्षो भवेदसंकल्पात्तदभ्यासं धिया कुरु ॥ १०२ ॥

" ஸங்கல்பத்வம் ஹி பந்தஸ்ய காரணம் தத் பரித்யஜ
மோக்ஷோ பவேதஸங்கல்பாத் ததப்யாஸம் தியா குரு"
(102)

பந்தத்திற்குக் காரணம் சங்கல்பமேயாம், ஆகையால் அந்த சங்கல்பத்தை அடியோடு விடுவாய், சங்கல்ப நாசத்தால் மோக்ஷம் உண்டாகிறது புத்தியால் அந்த சங்கல்ப நாசத்திற்குரிய அப்யாசத்தைச் செய்வாய்.

सावधानो भव त्वं च ग्राह्यग्राहकसंगमे ।
अजस्रमेव संकल्पदशाः परिहरञ्शनैः ॥ १०३ ॥

" ஸாவதானோ பவ த்வம் ச க்ராஹ்ய க்ராஹக ஸங்கமே
அஜஸ்ரமேவ ஸங்கல்ப தஶா: பரிஹரஞ்ஶனை:" (103)

நீ விரைவாகவே சங்கல்ப வடிவங்களை ஒழித்தவனாய் மெதுவாக அறிதல் வடிவ ஞானத்திற்கும், அறியப்படுதல் வடிவ விஷயத்திற்கும் உள்ள சேர்க்கையில் ஜாக்கிரதை யுள்ளவனாக இருப்பாய்.

मा भव ग्राह्यभावात्मा ग्राहकात्मा च मा भव ।
भावनामखिलां त्यक्त्वा यच्छिष्टं तन्मयो भव ॥ १०४ ॥

"மா பவ க்ராஹ்ய பாவாத்மா க்ராஹகாத்மா ச மா பவ
பாவனா மகிலாம் த்யக்த்வா யச்சிஷ்டம் தன்மயோ பவ"
(104)

நீ அறிபடு பொருளாகவும் அறிபவனாகவும் ஆகாதிருப்பாயாக. எல்லாப் பாவனையையும் விடுத்து எது மீதமுள்ளதோ அதுவாய் இருப்பாய்.

किंचिच्चेद्रोचते तुभ्यं तद्बद्धोऽसि भवस्थितौ ।
न किंचिद्रोचते चेत्ते तन्मुक्तोऽसि भवस्थितौ ॥ १०५ ॥

"கிஞ்சிச்சேத் ரோசதே துப்யம் தத் பத்தோऽஸி
பவஸ்திதௌ
ந கிஞ்சித் ரோசதே சேத் தே தன்முக்தோऽஸி பவ
ஸ்திதௌ" (105)

உனக்குச் சிறிது விஷயவாசை யிருக்குமாயின் அதனால் பிறவியில் கட்டுப்பட்டவனாகிறாய். உனக்கு விஷயவாசை சிறிது மில்லாதிருக்குமாயின் அதனால் பிறவியில் நின்றும் விடுபட்டவனாகிறாய்.

अस्मात्पदार्थनिचयाद्यावत्स्थावरजङ्गमात् ।
तृणादेर्देहपर्यन्तान्मा किंचित्तत्र रोचताम् ॥ १०६ ॥

"அஸ்மாத் பதார்த நிசயாத் யாவத் ஸ்தாவர ஜங்கமாத்
த்ருணாதேர் தேஹ பர்யந்தான் மா கிஞ்சித் தத்ர ரோ
சதாம்" (106)

சராசர வடிவாயும், திருணமுதல் தேகபரியந்தமாயு முள்ள இந்தக் காணப்படுகின்ற பதார்த்தக்கூட்டம் எவ்வளவாமோ, அவற்றில் சிறிதும் இச்சையைச் செலுத்தாதவனாய் இருப்பாயாக.

अहंभावानहंभावौ त्यक्त्वा सदसती तथा ।
यदसक्तं समं स्वच्छं स्थितं तत्तुर्यमुच्यते ॥ १०७ ॥

"அஹம்பாவானஹம்பாவௌ த்யக்த்வா ஸதஸதீ ததா
யதஸக்தம் ஸமம் ஸ்வச்சம் ஸ்திதம் தத்துர்யமுச்யதே(107)

நானென்றும், நானல்லவென்றும் உள்ள பாவனைகளையும் விடுத்து, அவ்விதமே சத்து அஸத்து என்ற நினைவையும் விடுத்து, எந்த வத்துவானது, பற்றில்லாததாயும், சமமாயும், தெளிவாயும் இருப்பதாமோ; அது துரியமென்று சொல்லப்படுகிறது.

या स्वच्छा समता शान्ता जीवन्मुक्तव्यवस्थितिः ।
साक्ष्यवस्था व्यवहृतौ सा तुर्या कलनोच्यते ॥ १०८ ॥

"யா ஸ்வச்சா ஸமதா சாந்தா ஜீவன்முக்தவ்யவஸ்திதி:
ஸாக்ஷ்யவஸ்தா வ்யவஹ்ருதௌ ஸா துர்யா கலனோச்ய
தே" (108)

எது தெளிவுள்ளதாயும் சமமுள்ளதாயும், சாந்தமாயும் ஜீவன்முக்தனுடைய நிலையாயும், சாக்ஷிவடிவாகவும் சொல்லப்பட்டதாமோ, அதுவே துரியமாகச் சொல்லப்பட்டது.

नैतज्जाग्रन्न च स्वप्नः संकल्पानामसंभवात् ।
सुषुप्तभावो नाऽप्येतदभावाज्जडतास्थितेः ॥ १०९ ॥

" நைதஜ்ஜாக்ரன் நச ஸ்வப்ன: ஸங்கல்பாநுமஸம்பவாத்
ஸுஷுப்தபாவோ நாZப்யேத தபாவாஜ்ஜடதாஸ்திதே: "

(109)

இந்த துரியாவஸ்த்தையானது சங்கல்பங்களின்மையால் ஜாக்கிரமுமன்று, சொற்பனமுமன்று, இந்த துரியமானது அறியாமையாகிய சடத்தன்மை யற்றிருப்பதால் சுழுப்தியுமன்று.

शान्तसम्यक्प्रबुद्धानां यथास्थितमिदं जगत् ।
विलीनं तुर्यमित्याहुरबुद्धानां स्थितं स्थिरम् ॥ ११० ॥

" சாந்தஸம்யக் ப்ரபுத்தாநும் யதாஸ்தித மிதம் ஜகத்
விலீனம் துர்யமித்யாஹு ரபுத்தாநும் ஸ்திதம் ஸ்திரம் "

(110)

மனவோய்வால் பூர்ணமான ஆன்மாவை நன்குயறிந்த மகான்களுக்கு இயற்கையாகக் காணப்படும் இந்த உலகம் மறைந்து துரியமே உளது என்று சொல்லுகின்றார்கள். அஞ்ஞர்களுக்கு இந்த உலகம் ஸ்திரமுள்ளதாகவே இருக்கின்றது.

अहंकारकलात्यागे समतायाः समुद्गमे ।
विशरारौ कृते चित्ते तुर्यावस्थोपतिष्ठते ॥ १११ ॥

" அஹங்கார கலாத்யாகே ஸமதாயா: ஸமுத்கமே
விஸரௌ க்ருதே சித்தே தூர்யாவஸ்தோபதிஷ்டதே "
(111)

நானிருக்கின்றேன் என்ற அகங்காரம் நீங்கில் எங்கும் சமமாயிருக்கும் ஞானமுண்டாகின்றது அந்த சமத்தன் மையுதயமாகில், சித்தநாசம் ஏற்படுகின்றது. சித்தமிறந்த பொழுது துரியாவஸ்த்தையே நிலைபெறுகின்றது.

सिद्धान्तोऽध्यात्मशास्त्राणां सर्वापह्नव एव हि ।
नाविद्यास्तीह नो माया शान्तं ब्रह्मेदमक्लमम् ॥ ११२ ॥

" ஸித்தாந்தோZத்யாத்ம பாஸ்த்ராணாம் ஸர்வாபஹ்னவ
ஏவ ஹி
நாவித்யாஸ்தீஹ நோ மாயா பாந்தம் ப்ரஹ்மேதமக்லமம்"
(112)

ஆன்மாவைப் போதிக்கும் சாஸ்திரங்களுடைய முடிவான பொருள்:— ஈண்டு அவித்தையென்பதுமில்லை. மாயை என்பதுமில்லை. எல்லா விஷயங்களையும் நீக்குவதேயாம். இவ்வித நீக்கத்தால் துன்பமற்றதும், சாந்தமானதுமான இந்த பிரம்மமொன்றே உள்ளதாம்.

शान्त एव चिदाकाशे स्वच्छे शमसमात्मनि ।
समग्रशक्तिखचिते ब्रह्मेति कलिताभिधे ॥ ११३ ॥

" பாந்த ஏவ சிதாகாபே ஸ்வச்சே பமஸமாத்மனி
ஸமக்ரபக்தி கசிதே ப்ரஹ்மேதி கலிதாபிதே " (113)

சாந்தமே சொரூபமானதும், சிதாகாசமாயுள்ளதும், தெளிவானதும் அந்தக்கரணவோய்வால் எங்கும் சமமா

யிருப்பதும், எல்லா வல்லமையும் பொருந்தியுள்ளதும், ப்ரம்மமென்று அறிந்த பெயருள்ளதுமான சொரூபத்தில்

सर्वमेव परित्यज्य महामौनी भवानघ ।
निर्वाणवान्निर्मननः क्षीणचित्तः प्रशान्तधीः ॥ ११४ ॥

" ஸர்வமேவ பரித்யஜ்ய மஹாமௌனீ பவானக
நிர்வாணவான் நிர்மனன: க்ஷீணசித்த: ப்ரஶாந்ததீ:"(114)

ஏ நோயற்றவனே ! நீ எல்லாவற்றையுமே நன்றாய் விடுத்து சகலபற்றுமில்லாதவனும், மனனஞ் செய்வதை விடுத்தவனும், சித்த நாசமுள்ளவனும், சாந்தமே சொரூபமான புத்தியுள்ளவனுமாய் காஷ்டமௌனமுள்ளவனுமாக இருப்பாய்.

आत्मन्येवास्य शान्तात्मा मूकान्धबधिरोपमः ।
नित्यमन्तर्मुखः स्वच्छः स्वात्मनान्तः प्रपूर्णधीः ॥११५

" ஆத்மன்யேவாஸ்ய ஶாந்தாத்மா மூகாந்தபதிரோபம:
நித்யமந்தர்முக: ஸ்வச்ச: ஸ்வாத்மனாந்த: ப்ரபூர்ணதீ:'(115)

இத்தகைய உனது மனம் ஆன்மாவினிடத்திலேயே வடிவத்தை இழந்து இருப்பதாகின்றது. ஆகையால் ஊமை குருடன் செவிடன் இவர்களுக்குச் சமமானவனும், எப்பொழுதும் அகமுகமாயுள்ளவனும், தெளிவுள்ளவனும், தனதாத்மாவால் உள்ளத்தின்கண் நிறைந்த ஞானமுள்ளவனுமான—

जाग्रत्येव सुषुप्तस्थः कुरु कर्माणि वै द्विज ।
अन्तः सर्वपरित्यागी बहिः कुरु यथागतम् ॥ ११६ ॥

" ஜாக்ரத்யேவ ஸுஷுப்தஸ்த: குரு கர்மாணி வை த்விஜ
அந்த: ஸர்வ பரித்யாகீ பஹி: குரு யதாகதம் " (116)

ஏ பிராம்மணனே! சாக்கிரத்திலேயே ஸுஷுப்தியின் நிலையைப் பெற்றவனாகிறாய். ஆகையால் கர்மங்களைச் செய்வாய். உள்ளத்தின்கண் எல்லாப்பற்றையும் விடுத்தவனாகின்றாய். ஆகையால் வெளியில் இஷ்டப்படி சஞ்சாரம் செய்க.

चित्तसत्ता परं दुःखं चित्तत्यागः परं सुखम् ।
अतश्चित्तं चिदाकाशे नय क्षयमवेदनात् ॥ ११७ ॥

"சித்தஸத்தா பரம் து:கம் சித்தத்யாக: பரம் சுகம்
அதஸ்சித்தம் சிதாகாசே நய க்ஷயமவேதனாத்" (117)

சித்தமிருப்பது மிகுந்த துன்பத்திற்கேதுவாம். சித்தமாகிய விஷயத்தை விட்டிருப்பது மிகுந்த சுகத்திற்கேதுவாம். ஆகையால் சித்தத்தை விஷயத்தினின்றும் திருப்பி சிதாகாச வெளியில் நாசத்தை அடைவிப்பாய்.

दृष्ट्वा रम्यमरम्यं वा स्थेयं पाषाणवत्सदा ।
एतावतात्मयत्नेन जिता भवति संसृतिः ॥ ११८ ।

"த்ருஷ்ட்வா ரம்யமரம்யம் வா ஸ்தேயம் பாஷாணவத்ஸதா
ஏதாவதாத்ம யத்னேன ஜிதா பவதி ஸம்ஸ்ருதி:" (118)

எப்பொழுதும் அழகிய பொருளைக்காணினும், அழகற்ற பொருளைக்காணினும் கற்போல் அசையாது இருப்பாயாக. இத்தகைய தனது முயற்சியால் சம்சாரமானது ஜெயிக்கப்பட்டதாகிறது.

वेदान्ते परमं गुह्यं पुराकल्पप्रचोदितम् ।
नाप्रशान्ताय दातव्यं न चाशिष्याय वै पुनः ॥ ११९ ॥

"வேதாந்தே பரமம் குஹ்யம் புராகல்ப ப்ரசோதிதம்
நாப்ரசாந்தாய தாதவ்யம் ந சாசிஷ்யாய வை புன:" (119)

இந்த அன்னபூர்ணோபநிஷத்தானது வேதத்தின் முடிவில் மிகரகசியமாக வைத்து முன்கற்பத்தில் வெளியிடப்பட்டது. இந்த அன்னபூர்ணாவித்தையைச் சாந்தமில்லாதவனுக்குக் கொடுக்கக்கூடாது. சிஷ்யனல்லாதவனுக்கும் உபதேசிக்கக்கூடாது.

अन्नपूर्णोपनिषदं योऽधीते गुर्वनुग्रहात् ।
स जीवन्मुक्ततां प्राप्य ब्रह्मैव भवति स्वयम् ॥ १२० ॥

“ அன்னபூர்ணோபநிஷதம் யோZதீதே குர்வனுக்ரஹாத்
ஸ ஜீவன்முக்ததாம் ப்ராப்ய ப்ரஹ்மைவ பவதி ஸ்வயம் ”
(120)

குருவின் அனுககிரகத்தால் அன்னபூர்ணோபநிஷத்தை எவன் அத்யயனஞ் செய்கின்றானோ; அவன் ஜீவன்முக்தி நிலையை அடைந்து தானே பிரம்மமாகின்றான்.

॥ हरीः ओं तत्सत् ॥
॥ ओं ह्रीं अन्नपूर्णायै नमः ॥
॥ ओं भद्रं कर्णेभिः इति शान्तिः ॥

ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.
ஸம்பூர்ணம்.

---

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 5 | ஆுஞன்மா | அஞன்மா |
| 15 | 1 | பணிந்து | பணித்து |
| 16 | 21 | பசிபாறுவர் | பசியாவர் |
| 23 | 19 | नस्त्याक्ष्यौं | नस्ताक्ष्यौं |
| 34 | 25 | சித்சா மன்யமே | சித்சா மான்யமே |
| 45 | 13 | அறிவன் | அறிவின் |
| 59 | 12 | நவர் தமாரே | வர் தமாரே |
| 77 | 16 | அவித்யை | அவித்தையை |
| 86 | 17 | வாரந்தி | வாந்தி |
| 90 | 24 | முயற்தி | முயற்சி |
| 91 | 6 | கோகம் | கோபம் |
| 93 | 4 | ஸப்ரோதனம் | ஸம்ரோதனம் |
| 96 | 11 | सवेद्यसपरित्यागात् | संवेद्यसंपरित्यागात् |
| 96 | 12 | दुमः | द्रुमः |
| 107 | 10 | गगा। | गुणा |
| 110 | 9 | காத்ரு | கர்த்ரு |
| 111 | 11 | स्यम् | स्वयम् |
| 117 | 3 | விதோஹோ | விதேஹோ |
| 119 | 22 | ஆசைக்கு | அசைக்கு |
| 125 | 19 | ब्रह्मदष्टया। | ब्रह्मदृष्ट्या। |
| 127 | 19 | युक्ता | युक्त्या |

